ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருமுட்டபுராணச் சுருக்கம்.



புதுவை-விலக்ஷணகவி

ஸ்ரீமாந் உ. வே. இராமாநுச நாவலர் ஸ்வாமிகள்

மாணாக்கரு ளொருவராகிய

புவனகிரி-ப்ரபந்தவித்வான்

அரங்கய மன்னார் ராமாநுஜ நாவலரவர்களால்

வசநரூபமாகச் செய்யப்பெற்று,

பண்ணுருட்டி சேர்மேன் ம-ள-ள-ஸ்ரீ

இராஜரத்தின முதலியாரவர்கள்

உதவியைக்கொண்டு

செங்கல்வராய நாயகர் ஆர்பனேஜ் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

**1908.**

விலை அணா 12.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருமுட்டபுராணச் சுருக்கம்.



புதுவை-விலக்ஷணகவி

ஸ்ரீமாந் ஏ. வே. இராமாநுசநாவலர்ஸ்வாமிகள்

மாணாக்கருளொருவராகிய

புவனகிரி-ப்ரபந்நவித்வான்

அழகியமணவாளராமாநுஜதாஸரவர்களால்

வசநரூபமாகச் செய்யப்பெற்று,

பண்ணுருட்டி சேர்மேன் ம-ள-ள-ஸ்ரீ,

இராஜரத்தின முதலியாரவர்கள்

உதவியைக்கொண்டு

செங்கல்வராய நாயகர் ஆர்பனேஜ் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

விலை அணா 12.

## விற்பனைக்குச் சித்தமாயிருக்கும் கிரந்தங்கள்.

| | | |
|---|---|---|
| திருமுட்டபுராணச் சுருக்கம் ... ... ... | அணா | 12 |
| திராவிடவேத வைபவப் பிரகாசிகை ... ... | ,, | 6 |
| நாலாயிரப்பிரபந்த விசார ஆபாச தர்ப்பணம் ... | ,, | 6 |

ஸ்ரீ

# விஷய சூசிகை.

## க-வது மூர்த்திமான்மிய காண்டம்.



## உ-வது க்ஷேத்திரமான்மியகாண்டம்.

## ந-வது தீர்த்தமான்மிய காண்டம்.



## ச-வது ஞானமான்மிய காண்டம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருமுட்டபுராணச் சருக்கம்.

## காப்பு.

உலகுபுகழ் திருநெடுமா லுயர்தருகேத் திரங்களிலொப்
புயர்வொன் றில்லா
அலகுசேர்த் திருமுட்டத் தணிதிகழ்மான் மியமுரைப்பா
னரிதாம் வேதத்
திலகுபொருள் சருவாதி காரமென வெழிற்றமிழ்செய்
தளித்த வெங்கள்
குலகுருவாஞ் சடகோபன் குரைகழல்க ளெஞ்ஞான்றுங்
குயிற்றி வாழ்வாம்.

முதலாவது

## மூர்த்திமான்மியகாண்டம்

## நைமிசவனத்திற் சூதபுராணிகர் எழுந்தருளிய படலம்.

பூவுலகத்தில் பாவலரெவரும் புகழும் நாவலந்தீவில், ஸ்ரீபுருஷோத்தமன் எழுந்தருளியிராநின்ற, நைமிசாரணிய மென்று ஒரு புண்ணிய க்ஷேத்திரமுண்டு. சிறப்பின் மிக்க அவ் வனத்தின்கண், சௌனகராதியாய பரமருஷிகள் குழுமித் தீர்க்க சத்திரயாகந் தொடங்கி, முறைப்படி நடத்திவருங்கால், வேத வியாசபகவான் திருவடிகளை யாசிரயித்து யாவுமுணர்ந்த சூத புராணிகர், நெற்றிமுதற் பிடரியீருகப் பன்னிரண்டிடங்களில் துவாதச சித்திரோர்த்துவ திருமட்புண்டரங்கள் விளங்கவும்,

கழுத்தில் திருத்துளவ நளினாக்ஷ பவித்திரமணி மாலைகள் துலங்கவும், செம்பு கம்பளி தம்பிரான் சேர்ந்துள்ள திருப்புற் கூடை தோளில் இலங்கவும், துவாதசாக்ஷர திருமந்திரத்தை நாவினால் உச்சரித்துக்கொண்டே ஆங்கு எழுந்தருளினர். அதுகண்ட அம்முனிவரர் களிகொண்டு ஒரு உயர்ந்த ஆதனத்தேற்றி உபசரித்துச் சுற்றுமிருந்து, சுருதி மிருதிதிகாசப் பொருள்கள் யாவும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஐயந்திரிபறக் கண்டுள்ள, உத்தம! சமாதிக தரித்திரனாகிய அச்சநார்த்தனனது சௌலப்பியத்துக்கு எல்லையிலமான அருச்சாவதாரங்களுட் சிறந்ததெது? அவ்வாதிபகவன் உகந்ததாய், சருவாபேக்ஷிதங்களையுந் தருவதான க்ஷேத்திரங்களுட் சிரேஷ்டமெது? அம் மூர்த்தி க்ஷேத்திர மான்மியங்களையும், ஆங்குள்ள தீர்த்தமான்மியங்களையும், எமது அவாதீர மனங்களிகூர அருளிச்செய்யவேண்டுமென வினவக் கேட்டுச் சூதமுனிவர் அடங்கா மகிழ்வொடு அவர்கள் வதனம் நோக்கி, உண்ணுஞ்சோறும் பருகுநீருந் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணனெம்பெருமான் அல்லான் மற்றொன்றறியா முனிவீர்! ஆவரணநீர், பூமிக்குள் நீர், பாற்கடல்நீர், பெருக்காற்று நீரன்ன, பரத்துவ, அந்தரியாமித்துவ, வியூக, விபவங்களிற் கண்வையாதே, அவற்றில் தேங்கிய மடுவனைய அருச்சையில் ஆழங்காற்பட்ட உமது பாக்கியத்தை என்னென்கேன். சிஷ்டர்காள்! பூருவத்தில் பாதலத்தில் மூழ்கிய இப்பூதலத்தை இடந்தெடுத்தருளிய, ஸ்ரீஞானவராகமூர்த்தி எழுந்தருளியிராநின்ற க்ஷேத்திரத்துக்கு ஒப்பானதும் மிக்கானதும் ஒன்றுமிலது. அதன்பெயர் திருமுட்டமென்ப. அதன் மாட்சிமையைச் சொல்ல இரண்டாயிரம் நாக்களுள்ள ஆதிசேடனாலும் மற்றியாரானும் ஒல்லாதென்னின், என்னாலாமோ? ஆகாவேனும், அறிந்தவளவு கூறுவன்; இந்த க்ஷேத்திர மான்மியத்தை முன்னங் காந்தபுராணத்தில் பிருகு முனிக்கு நாரதரும், பிரமாண்டபுராணத்தில், நாரதமுனிக்குச் சிவபிரானும், பிரமபுராணத்தில், மரீசிக்குக் கருடபகவானும், நாரதீயபுராணத்தில், பரத்துவாசனுக்கு ஆங்கிரசமுனியும், வராகபுராணத்தில், நாரிபாகனான நக்கனுக்கு நாராயணருஷியும், பகர்ந்தனர். அவற்றுள் முதலில் நக்கனுக்கு நாராயணமுனிவர் நவின்றவாறு புகன்று, பின்பு, ஏனையோர் பகர்ந்தவாறும் பகர்வன். அருகெய்திச் செவிதாழ்த்திக் கேண்மினென்று சொல்லலுற்றனர்.

---

## நரநாராயணர் பருவதராசன்பால் எழுந்தருளிய படலம்.

வாரீர் தனிமுதலைப் பராவுந் தாபதர்காள்! முன்னாளில் வேதவேத்தியனான மாதவன் தானே, இந்நிலவுலகத்து ஆன்மாக்கள் அஞ்ஞானநீங்கி மெய்ஞ்ஞானமோங்கி, நிரதிசய வீட்டின்பம் எய்துமாறு, தருமதேவதையினிடத்து, நர நாராயணராக வந்து அவதரித்தனன். அம்முனிவரர் இருவருங் குருவுஞ் சிஷ்யனுமாகப் பதரிகாசிரமம் எய்தி, ஜீவேசுவர பேதத்தையும், அருத்த பஞ்சகத்தையுஞ் செவ்வனே யுணர்த்துந் திருமந்திரத்தை வெளியிட்டு, இவ்வுலகெங்கணும் யாத்திரைசெய்துகொண்டு வருங் காலத்து, ஓர்நாள் பகவானது ஸ்ரீபாத தீர்த்தமாகிய, கங்காநதியாட எழுந்தருளக்கண்டு இமயகிரியரசன் எதிர்சென்று அவரடிகளிற் பன்முறை விழுந்து துதித்து, குருநாத! அடியேன் சிறுகுடிலின்கண் எழுந்தருளல்வேண்டுமெனப் பிரார்த்தித்தவாறு, முனிவர் இருவர் எழலும், இமவான் அவரை ஓர் பொன்மணி யாதனத்திருத்தி, மனைவி மக்களொடும், ஷோடசோபசாரங்கள் இயற்றிச் சிரமேற் கைகள் கூப்பி, ஆனந்தக்கண்ணீர் வார, நாக்குழறத் தோத்திரம்புரிந்து, எதிரே நின்றனன். நாராயணமுனிவர், அன்புகூர்ந்து யாவரையுமிருத்தி, அளவளாவிக்கொண்டிருந்தனர்.

## நாராயணமுனிவர் நக்கனுக் கருள்செய்த படலம்.

கேளீர் சௌனகாதி ருஷிகாள்! ஆங்கு, வெள்ளிமலைமேல் ஒரு பவளமலை விளங்குதல்போல் சிவபெருமான் வந்தனர். மாதுலனான இமவான் முதல், யாவரும் எழுந்து அஞ்சலியுடன் கீழே விழுந்து துதித்தனர். நர நாராயணர் இருவரும் எழப்புக, நுண்ணுணர்வில் நீலார்கண்டத்தம்மான் தேவஞானியாகலின், துணுக்குற்று, எழேல் எழேல், என்று கையமர்த்திச் சென்று, அம்முனிவர்க்கு வந்தனை வழிபாடுகள் செய்து, சீபதியே இவர் என யாவர்க்குஞ் செப்பிப், பார்வதியையும் மற்றியாவரையும்

அம்முனிவர் திருவடிகளில் வணங்கவைத்து, நின்று, முனீந்திர ! ஈங்கு எழுந்தருளியவாறு என்னையென வினவ, முனிவர்கோன் முறுவல்பூத்து, நீலகண்ட! உயிர் மெய் என்னும் அக்ஷரங்கட்கெல்லாம் ஒலிதரும் அகரம்போல், அவ் வகாரப்பொருளான பகவான், தேச கால வஸ்துக்களுள் மறைந்திருந்து, சேதனர் தோஷங்களை நாடாது, சத்தையே நோக்கிக் காத்தளிப்பன். அவனே சுத்தசத்துவகுண தற்பரன். அவனையே பரப்பிரமமென்ப. அவனே வேதச்சுருக்கான பிரணவ சொரூபன். ஒப்புயர்வற்றவன். எங்குநிறைந்தவன். அவாப்த சமஸ்தகாமன். எப்பொருளுக்கும் அறப்பெரியவன். அணுவுக்கு மிகச்சிறியவன். எண்ணிறந்த திருமுகங்கள், கண்கள், நாக்கள், சிரங்கள், புயங்கள், கைகள், கால்களுள்ள ஏகநாதன். ஆதிமத்தியாந்த ரகிதன். மூவவத்தையில்லா முராரி. காமாதிகளற்ற கருத்தா. பசி தாக சோக மோக மில்லாப் பரந்தாமன். நரை, திரை, மூப்பு, மரணமில்லா நாராயணன். சருவஞ்ஞன். சருவசக்தி. ஞானசக்தியாதி கலியாணகுணகணன். சச்சிதானந்தன். முத்தொழில் நடத்தும் முழுமுதல். மோக்கநல மளிக்கு முகுந்தன். அவனே, பிரமகாயத்திரியின் ஓசை எழுத்து பதம் பொருள் ருஷி தெய்வம் முதலாக இலக்கிய இலக்கணரூப பர்க்கப்பெயர்ப் பரஞ்சுடர். நித்தன். நின்மலன். அவனே வேதவியாகிருதிகள். துவாதசாக்ஷர, ஷடக்ஷர, அஷ்டாக்ஷர மந்திரங்களாதியாய மந்திர சாலங்கட்கரிய பரம்பொருளாவான். பிள்ளாய்! இவ்வண்டம் உண்டாகு முன்னம், பிரமனுமில்லை; சிவனுமில்லை; ஏனைத் தேவர் மானிடர் முதலாம் யாவருமில்லை; யாவையுமில்லை; நாராயணன் ஒருவனேயிருந்தான். அவனே சகல சகத்துக்குங் காரணன். சருவரக்ஷகன். அவனே அரியென்பான். அவனுக்கே அளவிறந்த பசுக்கள் எல்லாம் அடிமையாகும். இது சத்தியம். முக்காலும் ஆணையிட்டு மொழிந்தாம். உரகாபரண! அந்நாள் மூலப்பிரகிருதியில் உருமாய்ந்து, உறங்கும் ஆன்மாக்களை நோக்கி, அப்பெருங்கருணைத் திருவாளன், அந்தோ! என்றிரங்கி, அவர்கள் தன்னை வழிபட்டு வீடெய்துமாறு, சரீரேந்திரியங்களையும், வேதாதிசாஸ்திரங்களையுந் தர, ஆன்மாக்கள் அவற்றைக்கொண்டு ஆக்கையின்வழியே உழன்று, சருவசேஷியான அச்சகந்நாதனை நாடாது, தற்சேட பிறசேடப்பட்டு, செய்ந்நன்றிகொன்ற தீயராய், தவம், தானம், ஒழுக்

கம், ஆசாரம், ஞானம், தயை, சத்தியம் முதலியன விட்டு, தவறுக் குட்பட்டு, சீபதியேது? மோக்ஷமேது? புண்ணியமேது? பாவமேது? எமனேது? சுவர்க்கமேது? நரகமேது? வேதம் முதலிய சாஸ்திரங்களேது? இவையொன்றுமில்லை. உண்டென்பது வீண் கட்டுப்பாடு. பெரியாரென்ற பெயரிய மூடர்கள், வயிற்றுப் பிழைப்புக்கென்று எழுதிவைத்த புஸ்தகங்களை நம்பி மோசம் போகக்கூடாது. உண்மை யாதெனில், அரசன் ஆணைவழி நின்று, எவ்வாற்றாலேனும் பொருள் சம்பாதித்து, அழகுள்ள பெண்கள் அடியிணைகளைச்சிரோபூஷணமாகக்கொண்டு, அவர்களை வழிபட்டுப்புணர்ந்து அவர்கள் தருங் காமவின்பத்தைப் பெற்று, ஆனந்தித்தலே பரமபுருஷார்த்தமாகும். இதற்கு மாறுகச் சொல்லுதல் பெரும் பிராந்தியே யாகும் என்று பிதற்றி, அருநரகிற் காளராகவே, சருவஞ்ஞன சருவேசுவரன், உயிர்கள் கடைமரஞ்சேருமாறு, எம்மை இங்கு அவதரிக்க ஆணையிட்டனன். அவ்வாஞ்ஞையை யேற்று, நரநாராயணரென இங்குதித்து, ஆசாரியனும் சிஷ்யனுமாகப் பதரிகாசிரமத்தில், திருமந்திரமுகத்தால் ஜீவபர புருஷார்த்த உபாய விரோதி சொரூபங்களை உள்ளபடியுணர்த்த, இவ்வுலகக் கரிசற, யாண்டுஞ்சென்று, இத்தாபதக் குழாத்தொடுங் கங்கையாடுவான் புரிந்து, இங்கு வந்தனம் என்று கூறக், கண்ணுதல் கேட்டுப் புளகமுற்று, தேசிகோத்தம! தீர்த்தங்களாடுதலிற் பயன் யாது? தீர்த்த மான்மியத்தில் உயர்ந்தது எது? அத்தீர்த்த மூர்த்தி மான்மியத்திற் சிறந்தது எது? அம் மூர்த்தி க்ஷேத்திர மான்மியத்தில் முந்தினது எது? ஐயந்திரிபற அருளிச்செய்க, என, நாராயணமுனிவர் நவிலலுற்றனர்.

---

## நூற்றெட்டுச் சுயம்புத்தலப் படலம்.

---

சந்திரசேகர! அநாதியான அசித்தினல் யாப்புண்ட இவ்வான்மாக்களது அநர்த்தங்களை நோக்கி, அன்னர் ஊனக்கண்களாற் கண்டுய்யும்பொருட்டு, சருவேசுவரன், காடுகளினும், ஆற்றங்கரைகளினும், மலைகளினும், நகரங்களினும், நாடுகளினும், அன்பர் வீடுகளினும், அவ்வவர்கள் இச்சையெல்லாம் பெறுமாறு ஆசிரிதருகந்த திரவியமே திருமேனியாகவும், அவர்களிட்ட பெய

ரே பெயராகவுங் கொண்டு தேச கால அதிகாரி நியம மின்றி அருச்சக பராதீனமான, ஸ்நான அசன ஆசன சயனந்தொடக் கத்த சமஸ்த வியாபாரங்களையும் உடையனாய், சொச்சுவாமி பாவம் மாறத் தன்னைத் தாழவிட்டுத், திருவிளையாடல்கோலி, குணபூரணமான, அருச்சாவதாரம் எடுத்தருளினான். நாரியாக! அவ்வமலானந்தனது, அருச்சையின் மாட்சிமை அளவிறந்தது. அவனுகந்த புண்ணிய க்ஷேத்திரங்களை நாடிச்சென்று, தீர்த்தங் களிற் குளித்து, மூர்த்திகளை வணங்கி, வழிபடுதலின் மேலாய தவமொன்று மிலது. இஃது வேதத்தின் றுணிபு. அநிஷ்டங் களைப் போக்கி இஷ்டங்களைத் தருதலால் க்ஷேத்திரங்களென்னப் படும். அந்த க்ஷேத்திரங்கள் நவகோடி என்ப. முற்றுமுரைக் கின் இந்நூல் பெரும்பரப்பாம். ஆதலின், மிகவுஞ் சுருக்கிச் சொல்வன், கேண்மோ. அவற்றுள், சுயம்புத்தலங்கள் நூற் றெட்டாகும். அவையாவன, திருமுட்டம், திருவரங்கம், திரு வேங்கடம், அகோபிலம், பதரிகாசிரமம், சாளக்கிராமம், ஸ்ரீஜகந் நாதமென்னும் புருஷோத்தமம், தோதாத்திரி, அத்திகிரி, பிர யாகை, கயா, காசி, நைமிசாரணியம், பண்டரிபுரம், திருவாழி மலை, ஏமாத்திரி, சாரக்ஷேத்திரம், இடபகிரி, கருடாத்திரி, அயோ த்தி, வடமதுரை, திருவனந்தபுரம், பிந்துமாதவம், விருத்தாச லம், திருக்குடந்தை, கழுக்குன்றம், திருவாரூர், வேதாரணியம், துவாரகை, காகளேசுவரம், தருமபுரி, அச்சுதாரணியம், திரிவிக் கிரமம், தேவக்ஷேத்திரம், ஜநார்த்தனம், உபேந்திரபுரி, மாதவம், பாலகிருஷ்ணம், காருடம், ஏகநாதம், புஷ்பாத்திரி, விமலம், கிரி விரஜம், ராகவம், தாசரதி, விஷ்ணுபஞ்சகம், சம்பு, நாராயணம், ஸ்ரீநிவாசம், ஆனந்தகிரி, கேசவம், உத்தமாத்திரி, அலம்புரீசம், குருக்ஷேத்திரம், சுப்பிரமணியம், பானு, பார்க்கவம், பாபதகனம், வேதம், அனந்த நாராயணம், சுக்கிலக்ஷேத்திரம், முஞ்சாமலி, மகேசம், பத்திர பீடபுரி, ஆனந்தம், நாதகிரி, பாபநாசம், வித்தகம், மங்களகிரி, புஷ்பாத்திரி, பிந்துபுவனம், கருணா லயம், ஆமரதம், அரிக்ஷேத்திரம், குமாரம், வைகுந்தம், வாசு தேவம், கலியாணம், மூர்த்தம், சுவேதகிரி, சம்புநாரணம், வீர நாராயணம், சங்ககிருஷ்ணம், இந்திரத் துய்மம், நாகேச்வரம், மானசபுரி, சத்தரிசனம், விஷ்ணுபுவனம், ஆதிநாராயணம், குசா வந்தி, கோடிநாராயணம், மாத்திரேயம், கூர்மம், கோவலூர், அரங்கநாராயணம், சாமகிரி, சிவக்கம், சித்தாச்சிரமம், தாம்பிர

வருணி, வைகுந்தபவனம், மேருகிரி, சையகிரி, மச்சகிரி, எதுகிரி, கந்தமாதனம், மகேந்திரகிரி, குற்றாலம், கண்ணபுரம் என்பனவாம். இந்நூற்றெட்டினுள்ளும், முதற்கண் கூறிய அவ்வெட்டும் சாலச்சிறந்தன. இந்த எட்டு க்ஷேத்திரங்கட்கும், பிரமனே அருச்சகனுவான். யாவரேனுமாம் நோக்கினாலும் தீண்டினாலும், தேவலக(அருச்ச)கத்துவ தோஷமின்று. இவ்வெட்டு க்ஷேத்திரங்களினும், எம்பிரான் கண்டருளும், பிரசாதந் தீர்த்தம் முதலிய யாவும், அந்திம(சண்டாள)ன் முதற் கீழோர் தொட்டாலும் கண்டாலும் நீக்கமன்று. அருந்தினோர், கண்டோர் ஆனந்தவீடடைவார். இடபத்வஜ! சுயம்புத்தலங்களில் இருபத்தெட்டை முன்னாள் வாயு நெடுகாலம் ஆராதித்ததன் பயனாகத் தாசரதிக்குத் தொண்பூண்டு, பிரமபட்டத்துக் கருகனும் வரம் பெற்ற சிவாமிசச் செல்வக் குமரனைப் பெற்றான். ஆதியில் அரங்க விமானத்தைப் பாற்கடலில் அறிதுயில் பகவான், பிரமன் ஆராதிக்கப் பரிந்தருளினான். அவ்விமானம் இரண்டாகும்; விரஜையாற்றில், நித்தர் முத்தர் பரவ விளங்குமொன்று. மற்றொன்று பிரமன் இட்சுவாகுக்கருள, அவ்வமிசத்தில் அவதரித்த சக்கரவர்த்தித் திருமகன், விபீஷணனுக்களிப்ப, அன்னவன், சோழதேயத்தில், காவிரிநதியிடை ஸ்தாபிக்க, இன்றும் விளங்குகின்றது. வேதவராகரூபமது. இமயமலை உச்சியில், வாயுவால் கோயிலிட்டேத்தச் சிறந்து, பின்னர், பிரமனாதியர் வேண்டுகோளால், சீமுட்டத்தில் அமைக்கச் சிறந்துளது. தேயுவால் அமைக்க இவ்வுலகில் திருவேங்கடந் திகழ்கின்றது. தோதாத்திரியும் வேதா ரணியமும், அரவாபரணன அரனால் அனவரதம் ஆராதனை புரிய அமைக்கப்பட்டுள. நாரதமுனியால் அகோபிலம் நன்குவிளங்கும் என்றுரைத்து மேலுங்கூறுவார்.

---

## ஜகந்நாத விசேஷப் படலம்.

ஜகந்நாத விசேஷமுரைப்பல், கேளாய் கங்காதர! ஸ்ரீகாந்தன் கண்ணனாகத் திருவவதரித்து, சிஷ்டர் துயரோட்டித் துஷ்டரை வீட்டித் தருமத்தை நிலைநாட்டித் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளக் கோலவே, சிவனும் திசைமுகனும், இந்நிலவுலகத்தே யாவரும் பலிபுரிந் தீடேறத் திவ்வியமங்கள விக்கிரகத்தை வைத்தருளவேண்டுமென்று கண்ணபிரானை நோக்கித் தவங்கிடப்பக்

கோவிந்தன் அவ்வண்ணமே வரங்கொடுத்துத் தருவொன்றினைத் தன்றிருமேனி யொப்பச் செய்து வைத்துச், சுடர்ச்சோதிவெள்ளத் தூயநல்வீடொளித்தனன். அத்தற்பரன் றண்ணளிகூர்ந்து இத்தராதலத்தே வைத்த, தருவிக்கிரகத்தைக் களேபரமென்றெண்ணி, ஞானவினக் கொடும்பாவிகள், தணலிட்டெரிப்ப, அக்கால், அயனும் அரனும், அந்தோ! எம்மான் அமலத்திருவுருவன்றோ இது? அருநரகிற் குடிபுகும் அதிபாதகர் அங்கி கொளுந்தச்செய்தது, அழகழகென்று, அச்சுற்று, அனலவிப்பான் வருணனுக் குரைத்தனர். அக்கணமே, நீர்க்கடவுள் மழைபொழிந்தனன். அவ்வெள்ளம் அமலன் திருமேனியைக் கடலிடைச் சேர்ப்ப, ஆங்கு வருணன், பதிட்டைசெய்து, அளவறுகாலம் ஆராதனை புரிந்து வாழுநான்று, ஒப்பிகந்த புண்ணியனொருவன் புரிந்த தவத்தால், பின்னுங் கண்ணனெம்பெருமான் இந்நிலவுலகத்தைப் பேணுதலும், இந்திரத்துய்ம்நனென்னும் அரசன், கீழ்க்கடலின் பாங்கர் சுந்தரமாங் கோயிலமைத்து, அதில், புனற்கடவுளால் பூசை கொண்டு, அலைகடல் நடுப்பொலியும் அவ் விக்கிரகத்தைப் பதிட்டைசெய்து உய்ந்தனன். அப்ப! அதுகாண் ஜகந்நாதமென்பது. புருஷோத்தமமென்று பெயர்கொண்டு பொலிகின்றது. பிரசாத பாவனத்தது. அச்சகந்நாதனே சருவலோகபிதா, அனைவரும் அவனுக்குப் புத்திரர்கள், என்னும் உறுதி கண்டு இவ்வுலகுய்ய, அப்பன், தான் கண்டருளும் பிரசாதத்தைச் சாதிபேதமின்றி யாவரும் அருந்துமாறு ஒரு பாத்திரத்தூட்டி உவப்பன். ஆங்கு பேதமெண்ணின் பெருநரகங் காணியாட்சியாம். அத்தல பிரசாதத்தை நம்பி யளிக்க அரசனொருவன் மறதியால் ஒருகையாலேற்ற தன்பிழை கண்டு, அக்கையைத் துணித்துப் பரிசபித்த போது, ஜகந்நாதன், மன்னனுக்கு முன்னின்று, அறுந்த கரமளித்து, நலமந்தமில்லதோர் நாடுந் தந்து மறைந்தான்.

---

## சிவனும் பிரமனுந் திருப்பாற்கடல் சென்ற படலம்.

---

கேளாய் திரியம்பக! ஒருநாள் சிவனும் பிரமனும் திருப்பாற்கடல் எய்தி தேவதேவனைத் தரிசிப்பானெண்ணி, தமது மனைவியர் பால் விடைபெற்றுப் பாலாழிக்கேகி, சேவாக்கிரமத்தில், சேனை

முதலியாருள்ளிட்டார் புருஷகாரத்தால் பொன்னங்கோயிலுட் புகுந்து, அரவணைமேல் அறிதுயிலமர்ந்த புண்டரீகாக்ஷனைத் தண்டமாக வீழ்ந்து சேவித்தெழுந்து நின்று, கண்கள் நீர்வார, அஞ்சலியஸ்தராய், வேதவாக்கியங்களால் தோத்திரம் புரிதலும், அராவணையமலன் அருட்கணோக்கிப் பிரசாதமருள்க இவர்க்கென்று, பெருங்கருணைப் பெருமாட்டிக்கு உரைப்ப, இலக்குமியம்மை, அவ்வாறே புரிந்துவந்தளிப்ப, அன்னார் வேதமுதல்வன் உண்ட சேஷப்பிரசாதம் எற்றருந்தி விடைபெற்றுத், தத்தம் இருப்பிடஞ் சார்ந்தனர். கலைமகளும், மலைமகளும் பாற்கடல் யாத்திரை செய்துவந்த தங்கணவரை வணங்கி, அவர் முகங்களை உற்றுநோக்கி, எங்காதலர்காள்! பதிதபாவன யாத்திரை செய்துவந்த உமது தேசு பாழ்படக் காரணமென்னை? அந்தோ! உமது முகக்களை மோசம் போயதே. ஸ்ரீகாந்தன் சேவை, தேசு தரும் என்று உரைப்பர் சீரியோர். பிரமகளை போமாறு நீவிர் செய்த பிழை யாதோ? என்று வருந்திக்கூற, அவர், காதலிகாள்! தெரிந்து ஒருகுற்றமுந் தினையளவுஞ் செய்திலேம். பெரியபிராட்டியார் அளித்த பிரசாதம் உண்டு பேரருளாளனை வணங்கி விடைகொண்டு வந்தேம் என்று வழங்கக் கேட்டு, வாணி பவானிகள், அப்பிரசாதம் எமக்கேன் கொணர்ந்து அளித்திலீர் எனலும், நங்கைமீர்! தெய்வநாயகன் உண்ட சேஷப்பிரசாதத்துக்குக் குவிமுலைப்பெண்டிர் அருகர் அன்றாகலின் கொணராதுண்டோம் என்று அன்னார் கூறலும், திடுக்கிட்டு, மாதவன் பிரசாதத்துக்கு மாதர் அருகர் அன்றெனின் இதனின் மிக்க மாபாவம் ஒன்றுளதோ? என்று மனம் நைந்திருப்ப, களைபோய கண்ணுதலும் கமலனும், பின்னுந் திருப்பாற்கடல் போந்து, எம்பிரான் திருவடிகளில் வீழ்ந்தழுது, சீதர! நினைத் தொழுது, நிருபாதிக சகத்தாய் அளித்த சேடமுண்டு சென்ற எமது தேசு நீங்க யாஞ்செய்த பிழையென்னை? அப்ப! தெரிந்துந் தெரியாமலும் நாங்கள் செய்த பிழையனைத்தும் பொறுத்துத் திருவருள் புரிவாய் என்று முறையிட, ஐயன், திருச்செவிசாத்திப் பிள்ளைகாள்! யாங் கண்டருளும் சேஷப்பிரசாதம் உண்ட நீவிர், உத்தமாங்க (சிர)த்திற் றுடைக்காது, கைகளை அதமாங்கம் படத் துடைத்த அவ்வபராதம் ஒன்றே உமது பிரமகளையைக் கொள்ளை கொண்டுபோயது. போய களை பொலியுமாறு புகல்வன். புருஷோத்தமம் என்னும் ஜகந்நாத க்ஷேத்திரத்துக்குச் சென்று,

அனந்த பலப்பிரத தீர்த்தத்துள் மூழ்கிக், கரணங்களை ஒடுக்கித் தவம்புரிவீர். ஆங்குப் பிரமகளை எய்தப்பெறுவீர் என்று உரைப்ப, அவ்விருவரும் அவ்வண்ணமே ஜகந்நாதத்துக் கேகி, தீர்த்தத்துட் படிந்து, முக்கரணங்களைச் சேமித்துச் சிரகாலந் தவமியற்றலும், அமரர்பிரான் அவர் கண்காண எழுந்து, நஷ்டமாய பிரமதேசும் மற்றிஷ்டங்களுந் தந்து மறைந்தான். விதியுஞ் சிவனும் அருளெய்தித் தத்தம் இருப்பிடம் மேவினர்.

---

## வாணி பவானிகள் வரம்பெற்ற படலம்.

கேளாய் ஐம்முக! பெருமாள் பிரசாதம் உண்டற்கு ஆகார் பெண்டிரெனக்கேட்டு அலமந்த வாணியும் உமையுந் தங்கணவர் தவம்புரிந்த ஜகந்நாதம் மேவி, பொறிபுலன்களை அடக்கி நாட்கள் பல தவமியற்றப், புருஷோத்தமன் சேவை தந்து, தோகைமீர்! என்னை இதயப்பூக்கண் நிறுவி, நீவிர் இயற்றிய தவத்தை மெச்சினேன். உமது நினைவியாது? சொல்விரேல் நல்குவனென்ன, அவ்விருவரும் எம்பெருமான் திருவடிகளில் விழுந்தெழுந்து, கரஞ் சிரங் கூப்பிநின்று, ஜகந்நாத! நின் பிரசாதம் பெறும் பேறு, இன்றுதொட்டுப் பெண்டிர்க்கும் ஆமாறு, திருவருள்புரிகெனப் பிரார்த்திக்கக் கருணையங்கடல் மகிழ்ந்து, மங்கைமீர்! இன்று முதல் நான் உகந்த திவ்விய தேசத்தில், ருத்திரரோடு, நந்தீர்த்தப் பிரசாதம் உண்டற்குப் பெண்டிரும் அருகராக அருள்புரிந்தேன் என்று மற்றுந் தந்து மறைந்தருளினன். ஆங்கு, மலைமகளுங் கலைமகளுங் கோவில்கொண்டு இன்றும், மகிழ்வொடு வதிகின்றனர். இச் சுயம்பு க்ஷேத்திரங்களில், சுடரொளி சக்கரத்தண்ணல் சண்டருளும், பிரசாதம் உண்டார், தாயூட்டும் அன்னம் என்றும் உண்கிலார். இது சத்தியம். பழித்தோர், நரகத்தழுந்தி பாழ்படுவார். சுயம்புத்தல மூர்த்தி, நித்தர் முத்தர்க்குச் சச்சிதானந்தகரமாகத் தோன்றும். ஞானமில்லா மனிதருக்குச் சிலை வடிவாகக் காணும். சுயம்பு க்ஷேத்திரங்கட்குச் சென்று தீர்த்தங்களிற் குளித்து மூர்த்திகளை வணங்கும் சீமான்கள், ஞானம், பத்தி வைராக்கியம், அந்தக்கரணசுத்தி, இகபரலோக ஐசுவரியம், தொடக்கத்த விரும்பிய யாவும் பெற்றுப், பரம புருஷார்த்தமாம் முத்தி

யின்பமும் பெறுவார். கீழ்க்கூறிய சுயம்புத்தலங்கள் நூற்றெட்டினுள்ளும், திருமுட்டமென்பது மிகவுஞ் சிறந்தது; சாமவேதப் பிரதிபாத்தியமானது, ஒப்புயர்வில்லது; என்று உரைத்து, மேல் கூறலுற்றார்.

---

## நீலவராகர் ஆதியிரணியாக்கனைச் சங்கரித்த படலம்.



உரகாபரண! முன்னொரு கற்பத்தில் பூவுலகில் ஞானமற்றவராய பூரியர், கோரூபமான தருமதேவதை நான்கு கால்களும் அற்று வருந்துமாறு செற்றமே வேண்டித் தீவினை பெருக்கிப் பெரியரை வல்லவா பழித்துப் பாவப்பொதிகள் எவ்வளவுளவோ அவ்வளவும் படைப்ப, பூதேவி இவ்வனியாயக் கொடும் பாரத்தைப் பொறுக்ககில்லாது, பாதலத்தில் அழுந்தும்பொழுது, பிரமனது இடது மூக்கின்வழி இரணியாக்கனென்பான் தோன்றி பூமியை அபகரித்துக் கடலுட் சென்றனன். அதுபோது ஆன்மாக்களெல்லாந் தத்தளிப்பத் தேவர் பூவனிடம் போந்து, தொழுது, குறைகூறிப் புலம்பலும், வேதியன் பரம யோகசாதன வழிக்கண் பரம்பொருளை அறிந்து, மனத்தாற் கண்டு, பரமேசுவர! ஆன்மாக்கள் அலமரப்பற்றுச் சுகமுறவும், இரணியாக்கன் ஒழிதரவும், அவனால் அபகரிக்கப்பட்டுக் கடலிடை அழுந்தும் அவனி மகள் நிலைபெறவும், தோன்றி ஆண்டருள்புரிக; ஐய! சரணம் என்று முறையிடலும், மைந்த! அஞ்சேல், அவ்வண்ணமே செய்வன் என்று, மாதவன், அப்பிரமனது வலது மூக்கின்வழி, மனித அங்குட்ட அளவுள்ள ஞான வராகக் குறளுருவாய் அவதரிக்கக் கண்டு, பிரமன் வியந்து, அதைப் பிடித்துக் கண்களிகூரக் காண்டுமென்று தாவித்தாவிக் கையாலள்ளி எடுப்ப, அங்குட்டமாத்திர அச்சிறு பன்றி மேன்மேல் நெடிய கொடிய பருப்பதம்போல் பிரமாண்ட முட்ட வளர்தல் கண்டு, அம்மம்ம! இஃதென்கொலாம் என்று இறும்பூதெய்தி, ஞானத்தாற் பரம்பொருள் என்றுணர்ந்து, ஞானவராகவுருக்கொண்ட நாத! பாரை அபகரித்த பாதகனை வீட்டி, நிலைநாட்டியருள்கென் நான்முகன் பழிச்சலும், வராகவுருப் பரஞ்சோதி, கடலுட்புகுந்து, உலாவி இரணியாக்கனை எதிர்த்து வல்லுயிர் வவ்வி, கடலுள் அழுந்திய பூமியை உயிர்கட்கு

ஒரு நோயுமுருது, தன் ஒரு கொம்பின் நுனியில் ஏந்தி எழுந்து முன்போல் புவியை உத்தரிப்பித்துப், பிரம வுருத்திரேந்திர ருள்ளிட்ட தேவர்கள் பூமாரி பெய்து, சுருதித்துதி கூற, முனிவர்கள் புருஷசூக்தம் புகன்று கூட, சித்தர் முத்தர் பல்லாண்டு பாடத் திருமுட்டம் போந்தருளி, தேவர்களை நோக்கி, உமதுவேண்டற்பாடு என்னென்ன, அக்காலை, புவித்தாய் கரங்கள் கூப்பி, சருவலோக நாத! நீ இந்தத் திருமுட்டத்தின் கண், எக்காலும் என்னை அகலாது எழுந்தருளியிருந்து வாழும் அவ்வரம் ஒன்று அருளுக என்றிறைஞ்ச, அப்போது, எண்கண்ணன், ஆயிரங்கண்ணன், ஏனைத் தேவரும் முனிவரும் மகிழ்ந்து, எமதப்ப! புவித்தாய் கேட்ட வண்ணமே ஈங்கிருந்து எம்மைப்புரந்தருள்கஎன்று இரத்தலும், ஞானவராகப்பிரான், திருவுள்ளமுகந்து, சுரமுனிக் குழாத்தை நோக்கி, உமது வேண்டுகோளின்படி இந்தத் திருமுட்ட க்ஷேத்திரத்தில் பூமிப்பிராட்டியாரோடு, அகலாது, என்றென்றும் இருப்ப எண்ணினேன். இது க்ஷேத்திரங்களுள் தலைமையாகும்; இதைச் சுற்றும் மூன்று யோசனை யளவும், கயா, பிரயாகை, காசி முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களினும் நூறுமடங்கு அதிக விறலுடைத்தாக விளங்கும். நிலத்தேவியை மணந்த எனது திருமேனி தோய்ந்த தீர்த்தமிது, நிரந்தரமிலகும் நித்தியபுஷ்கரணி யாகும். யான் இங்கு, அவனிமகளோடு அளவிறந்த போகம் அனுபவித்தலால், இது ஆனந்தபவனமென்று பெயர்பெறும். இத்தலத்திலிருந்து, உயிர் விடுவார் யாவரேனும் அவர் மரணகாலத்தில், கருடதேவன் குருவாக எழுந்து, அன்னார் காதுகுளிரப் பிரமவித்தை உபதேசிக்கவும், அவ்வருள் பெற்றார் எனது நித்திய நிரதிசய சுகவீட்டிற் பொருந்தி வாழவும், வரந்தந்தேன். இத்தல மான்மியத்தைச் சாமவேதம் இயம்பியுளது. இந்த க்ஷேத்திரத்தில் செய்யும் யாகங்கள் காருகபத்தியம் ஆகவனீயம் தக்ஷிணாக்கினி யாதிகளாகும். இங்கு, நம் அடியாராய், ஒருபகல் இருமறை யோதினார்க்கு, ஒரு கோடி புண்ணிய தீர்த்தங்களில் ஆடிய பலனை யளித்தேன். பிரம! உருத்திர! நீவிரிருவீரும், இத்தலத்துக்கு என்றும் வேதபாராயணராகுக. இத்தலத்தின்கட் போந்து நித்தியபுஷ்கரணியில் நீராடி, என்னை வணங்கித் தான தருமங்கள் செய்வார், வேட்டவெல்லாம் பெற்று முத்தியின்பமும் பெறுவார் என்று திருப்பவளச் சோதிவாய் மலர்ந்து அருளிச்செய்ய, நான்முகன் முதலாந் தேவர்,

நாயன்றே, நாயன்றே, என்று துள்ளி மகிழ்ந்து, அன்றுமுதல் இன்றுகாறும் கைங்கரிய பரராய், ஆங்கண் வாழ்ந்துளார். முன்னொரு கற்பத்தில் நிகழ்ந்தது இதுவென்று மேல் விளம்பலுற்றார்.

---

## சுவேதவராகர் இரண்டாவது இரணியாக்கனைச் சங்கரித்த படலம்.

கேளாய் சங்கர! மற்றொரு சிருஷ்டியில் நிகழ்ந்த சுவேத வராக நயினார் தூய மான்மியமுஞ் சொல்வேன் கேள். பூருவம், பிரமபுத்திரனான காசிபன் மனைவி, திதியென்பாள் எல்லாவுலகும் நடுங்க, இரணியாக்கனென்னும் பொல்லா அவுணனொருவனைப் பெற்றாள். அவ்விரணியாக்கன், பலகோடி அண்டங்கள் யாவுந் தன் கைக்குள்ளாக்கும் வித்தையில் வல்லான். அஷ்டசித்திகளில் தேர்ந்தான். காற்றைப்போல் உலகெங்கணும் உலாவிவருஞ் சமர்த்தன். அவன் மூவுலகினுந் தன்னோடு எதிர்த்துப் பொரும் வலியார் ஒருவரையுங் காணாது, தேவரையும் மற்றியாவரையும் வென்று, செருக்குடையானாய்ச் சீதரனோடு பொரும் ஆசையோடு, திருப்பாற்கடலை நாடி வரும்போது, நாரதமுனியை எதிரே கண்டு, நாரத! நான் மூவுலகுந் திரிந்து வராநின்றேன். என்னை எதிர்த்துப் போர்புரிவார் ஒருவருமிலர். அரியென்பானொருவன் எனக்குப் பயந்து பாற்கடலுள் துயில்வான். அவன் இதுபோது எங்குளான் சொல்லென்ன, மகதியாழ்வலவன், பொற்கண்ணனை நோக்கி, அவுணரேறே! அவ்வரியுண்மை அறைவன் கேள்: வேதத்தும், வேதச்சிரத்தும், பாஞ்சராத்திரத்தும், தருமசாஸ்திரங்களிடத்தும், புராணங்களுள்ளும், இதிகாசங்கள்பாலும், தேவரிடத்தும், முனிவர்மாட்டும், நித்திய நிரதிசய சுகவீட்டின்கண்ணும், வேதியர்களிடத்தும், பத்தர்கள்தம்மிடத்தும், பாவலர்மாட்டும், தத்துவமுணர்ந்த நாவலரிடத்தும், நான் என்னுதாரிடத்தும், யாகத்தின்கண்ணும், புண்ணிய க்ஷேத்திரங்களினும், புண்ணிய தீர்த்தங்களினும், கற்புடைய மகளிர்கண்ணும், சத்தியத்தின்பாலும், மற்றெங்கணும், அம்மாதவன் நிறைந்து மறைந்துறைவான். இது சத்தியம்.

காசிபபுத்திர ! உண்மை யுரைத்தேன் என்ன, இரணியாக்கன் கேட்டு, நகைத்து, வீணைவல்லோய் ! நன்கு விளம்பினை ; நீ சொன்ன பொருள்களிடத்து, அப் புனத்துழாய் மாயன் உளனேல், சாலவும் நன்று, நன்று ; அப்பொருள்கள் யாவும் பூதலத்தில் உண்மையால், இக்காசினியை அள்ளிக் கடலுட் செல்வேன் ; அவ்வரியை வெல்வேன் என்று மகிழ்கொண்டு கூத்தாடினவனாய், அஷ்டமாசித்தியில் வல்ல அவ்வவுணன், மோகன யோக மார்க்க மாயவித்தை வன்மையால், உயிர்களையெல்லாம் ஒடுக்கி, ஆகாயத்தி லடக்கி, விண் மண்ணெல்லாந் தன் கைக்குள்ளாமாறு சுருக்கி, உலகைக் கவர்ந்துகொண்டு, அரியென்பான் இன்று ஓய்ந்தான் என்று, அகமகிழ்ந்து, ரசாதலம் இருப்பதாக எண்ணிக் கடலுள் மூழ்கிச் சென்றனன். அக்காலை, சீவராசிகளெல்லாம், கடலுள் அழுந்தும் மரக்கலத்துள்ளார்போல் நடுங்கி முறையிட்டுக் கதற, மலர்க்கடவுள் மனங்கலங்கித், தானு தொடக்கத்தாருடன், திருப்பாற்கடற்கண் போந்து, சீபதி ! நீசனான பொற்கண்ணன், புவியைக் கவர்ந்து, புணரியுள் மூழ்கி ரசாதலத்து ஒளித்தான், அவனைக் கடிந்து உலகைக் காத்தருள்க எனத் தாளுந் தடக்கையுங் கூப்பித் தோத்திரம் புரிதலும், அப்புறையப்பன், ஆகாசவாணியாய், பிரமனாதியீர் ! அஞ்சன்மின் ; யாம், தமிழ்தேயத்தில் கீழ்க்கடலின் மேற்கில், மணிமுத்தாநதித் தென்கரையின் குடக்கில், பிரளயோதகத்தின் மீது சுவேதவராக மூர்த்தியாக அவதரித்து, அத்துஷ்டனைக் கொன்று, முன்போல் உலகை உத்தரித்துக் காத்தளிப்பேம். ஆண்டு வருவீர் என்று உரைத்துச் சோழநாட்டுள் கீழ்க்கடற் புனலின்மீது, வெண்ணிறத்த வராகக் குறளுருக்கொண்டு யாவருங் காண வாலை வளைத்துத் துள்ளிக் குதித்து விளையாடினான். இவ்வற்புதத்தைக் கண்ட வானோர், இஃதென்னே ! என்னே ! என வியப்புற, குக்குமச் சுவேதவராக உருக்கொண்ட சுத்தசத்துவகுணப் பரஞ்சோதி, மாமேருமலைபோல் வளர்ந்து, கடலுள் மூழ்கி, இரணியாக்கனை எதிர்த்துப் பொருது, அவன் உயிரைத் தொலைத்து, உலகைத் தனது ஒரு வெண்கொம்பின் நுனியில், ஒரு சிறு துகள்போல் தொத்தத் தூக்கி, ஆதிசேடன் மணிச்சுடிகையிற் பொலியுமாறு உத்தரிப்பித்து, பிரமனாதி தேவர்கள் காண முன்னின்றனன். அயன் அரனாதி தேவர் கண்டு, கற்பகப் பூமாரி சொரிந்து, கண்களிகூர்ந்து, கூத்தாடித் துதிக்க, சுவேதவராகத் தூயமேனிப் பரஞ்

சுடர், திருமுட்டத்தலம் எய்தி, ஆங்கு, தனது திருமேனியினின்று சிந்திய தீர்த்தமே நித்தியபுஷ்கரணியாகச்செய்து, அக்குளக் கரையில், நவரத்தின கசிதமான செம்பொன்செய் கோயிலில், பிரமன்முதலாந் தேவர் தொழுது அருச்சிக்க, சுயம்பாய் எழுந் தருளி, பின்னர், சேனைமுதலியார் குடைகவிப்ப, பூதேவித்தாய் பூங்கை பற்றிச் செல்ல, திருவனந்தாழ்வானும் பெரியதிருவடி நயினாரும் இருமருங்கினுந் திருவெண்சாமரை யிரட்ட, பிரமன் பிருங்காரமெடுத்து முன்னே குனிந்தேக, சிவன் திருவால வட்டம் பணிமாற, ஏனைத் தேவரும் முனிவரும் இருகை யாத்து முன்னும் பின்னும் உபயவேத பாராயணஞ் செய்ய, அக் கோயிலுக்கு அக்கினிதிசையில் இலகும், அரசமரத்தடியில் அணி மணியாதனத்தில் அமர்ந்து, அயன் அருச்சகனாய், வேதசிரமென்னும் பாஞ்சராத்திர முறைப்படி, அருக்கிய, பாத்திய, ஆசமனம் தொ டக்கத்த ஈரெட்டுபசாரமும் ஆற்றத், திருவுள்ளம் உவந்தருளும் தேவதேவனைப் புவித்தாய் நோக்கிப் புன்முறுவல்பூத்து, நாத! இவ் வுலகுய்வான் ஈண்டு என்னொடுங் கூடி இன்பந்தருக என்று இசை ப்ப, அமலானந்தன் குளிரக் கடாக்ஷித்து, மாதரசே! அவ்வரந் தந் தேன் என்று அருளிச்செய்து, அவனிமாதொடுங் கூடி அகமகிழுங் கால், பார்மடந்தை திருவயிறுவாய்த்து, நரகன், குசன் என்னும் இரண்டு புதல்வரைப் பயந்தாள். சுவேதவராகச் சுடர்ச்சோதிப் பெருமான், நரகனுக்குப் பிராக்குச்சோதிஷ நகரமொன்றும், குச னென்னும் செவ்வாய்க்கு, நவக்கிரகங்களுள் ஒன்றான, அங்காரக ஆதிபத்தியமுந் தந்து, தனது கொம்பினால் மண்ணைக் கீண்டு, பரி சுத்தமான புனலை யீந்து, பூதீர்த்த மாக்கி, பூமாதேவியுடன் பூதீர் த்தங் கொண்டாடி, தேவர் முனிவர் யாவரும் போற்றச் சுயம் பாம் அருச்சையாய் அமர்ந்தருளினான்.

## தண்டகாசுரன் வரலாற்றுப் படலம்.

மூக்கண்ண! காசிபபுத்திரனான இரணியாக்கன் மாண்டபின், அவன் புத்திரி, சில்லிகையென்பாள், தன் கணவனைக்கூடி, வாழுங் காலத்து, தேவர்க்கும் அவுணர்க்கும் நேர்ந்த சமரில், சில்லிகை கணவன், இந்திரனால் இறக்க, அதுபோது ஆறுமாதங் கருப்பமுற்

திருந்த அச்சில்லிகை, அகஞ்சோரத் துன்புற்று, என்வயிற்றுள்ள சிறுவன், வெளிவருவனேல், தன் தந்தையைக் கொன்ற தேவர்கள் மாட்டுப் பகை பாராட்டுவான். இதற்கு என்செய்வேன் யான் என்று ஏங்கியேங்கிச் சோகித்துச் சுக்கிராசாரியர் தாள்களில் வீழ்ந்து அழுது, குருபர! என் வயிற்றுள்ள குமாரனையும் அம்மாயவன் மாய்ப்பான் என்று ஏங்குகின்றேன். ஐய! என் குமாரனைத் திருமால், கொல்லாதிருக்கும் உபாயங்கூறிக் காத்தல் நின்கடனேயாம் என்று குறைசொல்லி முறையிடச், சுக்கிரன், சில்லிகை முகம் நோக்கி, அம்மே! உங்கள் குலத்தோரெல்லாம், வேதவேத்தியனான விஷ்ணுவைத் தொழாது, பாசுபதத்தராய், விபுதராய நல்லார்க்கு இடுக்கண் விளைப்ப, அப்பொல்லாங்கால், மாதவன் செகுக்க மடிந்தொழிந்தார்கள். உன் வயிற்றுள்ள சிறுவன் அவர்போலாகாது, சிவஜப ரத்தினமாய திருநெடுமாலை வழிபடும் வீரவைணவனாய்ச் சிறப்பான். வருந்தேல் என்று கூறி, விடைபெற்றுச் சென்றான். மற்றொருநாள் நாரதபகவான் மகதியாழ் ஏந்தி, அரிகரி என்று, நாத்தழும்பேற உச்சரித்துக்கொண்டு சில்லிகைபால் வர, அவள், அவர் திருவடிகளில் விழுந்து விம்மி விம்மிப் புலம்பி, ஐய! எனது வயிற்றுவாய்த்துள்ள சிறுவன், சுரவைரியாய சுதரிசநபாணியால் இறவாது, அவ்விஷ்ணுவுக்கே அடிமைபூண்டு ஒழுகும், வைணவனாய் வாழுமாறு அருள்செய்க என்று அலற, யாழ்வல்லான் இரங்கி, பொற்சண்ணன் புதல்வி! உன் குலத்தோர் திருமாலுக்கு அல்லராய் அழிந்தார்கள். அவ்வண்ணம் உன் மகனும் அழியாது அருள்செய்வேன் என்று, அவளை மருங்கிருத்தி, வேதத்தின் உண்மைப்பொருள்களை விளம்பி, அன்னவள் வயிற்றிலுள்ள சிசு, செவிவழியருந்த அமுதமன்ன மனுவை உபதேசித்தலும், அச்சிசு பிரகலாதனன்போற் பரவஸ்துவைத் தத்துவமாக அறிந்து, தாய்வயிற்றினின்று உதிப்ப, தேவமுனிவன், அக்குழவிக்குத் தண்டகன் என்று பெயரிட்டு ஏகினன். சருவிலேயே நாரதன் கருணைத் திருப்பெற்று, சகல சாஸ்திரங்களும் ஓதியுணர்ந்த தண்டகனைப் பயந்தெடுத்த சில்லிகை வீணைமுனிவன் ஆணையின்படி தன் கணவனுண்ட, கங்கைகொண்ட புரத்துக்குப் புத்திரனொடு வந்து, சிலநாள் இருந்து, பின்பு, காவேரியாற்றின் வடபால் மணிக்கிரீவன் வனத்தை யடைந்த, பொறிபுலன்களை அடக்கிச், சுவேதவராகனை நோக்கி, மாதவஞ் செய்தலும், ஒருநாள்

அவளை மணிக்கிரீவன் கண்டு மோகங்கொண்டு தூக்கி எடுக்கும் போது அருகிலிருந்த தண்டகன் வலிய கற்களை யெறிந்து, அவனைக் குமைத்தொழிக்கச், சில்லிகை மகிழ்ந்து, மகனைத் தழுவி, முன்போல், அந்தக்கரணமுதலாக ஒத்துச் செய்யுந் தவத்தைக் கெடுக்க முயன்று தேவர்கள் செய்த இடுக்கணுக்கெல்லாம் மனஞ் சலியாது தவங்கிடப்பத், திருமணாளன், ஆகாசத்தில் அவள் காண நின்று, பெண்ணே! உனது விழைவு என்னையெனச், சில்லிகை நோக்கி, அசுரகுல கால! உனது தாட்டுணை தொழா அவுணர் இராக்கதரைச் சவட்டிய நீ, அவ்வண்ணம் நான் பெற்ற சிறுவனையுங் கொல்லாமற் காத்தளிப்பதோடு, அவன் வைணவனுச் சுகமுறவும், யான் கைணவமற்று அருள்பெறவும், என் புத்திரனுக்குத் தேவர், அசுரர், இராக்கதர், மனிதர், மற்றெவரும் பராஜிதராகவும், செல்வம் ஓங்கவும், வல்லமை யெய்தவும், எவரேனும், ஒருகால், என் மைந்தனுடம்பில் ஓர்துளி இரத்தம், பூமியில் விழச் செய்யின், அத்துளி அனந்த தண்டகர்களாக முளைக்கவுமாய இவ்வரங்களைத் தந்தருள்க என்றாள். ஞானவராகப்பெருமான், உவந்து, மாதே! நீ கொண்ட மாதவத்திற்கு உவந்தேன். உன் குமாரன் தண்டகனென்பான், ஒன்பது அற்புத வருஷங்கள்காறும் ஆயுள்கொண்டு, அணிமா முதலிய ஐசுவரியங்களெல்லாம் பெற்று, இப்புவியில் இன்புற்றிருந்து, பின்னர் தேவர்க்குத் தீங்கிழைப்ப, என்னாற் கொல்லப்படுவான் என்றுரைத்து மறைந்தருளினன். சில்லிகை, களிகூர்ந்து, கங்கைகொண்டபுரம் போந்து, தன்புதல்வன் தண்டகனோடு, ஒரு குறையுமின்றி வாழ்ந்துகொண்டிருந்தாள்.

---

## தண்டகன் வரம்பெற்று அரசாண்ட படலம்.

கேளாய் கிருத்திவாச! தண்டகாசுரன் தனக்கு முன் பிறந்த, மணிமாலை, முத்துமாலை என்னும் பெயர்களையுடைய இரண்டு சகோதரிகளை, மதங்கமாருஷி மைந்தர், தத்திலமுனி, கோகலமுனி என்னும் இருவர்க்குங் கலியாணஞ் செய்துகொடுத்துத் தானும் ஓர் கன்னிகையை மணந்து மருவி, இரணசித்து என்னும் புத்திரனைப் பெற்றுப், பின்னர், மூவுலகுக்கும் அரசனாய், வீரவைணவனாய் வாழுநாள், பிரமனை நோக்கித் தவமியற்ற, மலரோன் எதிர்

நின்று வேண்டிய தருவன் கேள், என்ன, தண்டகன் துதித்து, தேவ! பதினொரு அற்புத கால ஆயுளும், அளவிறந்த செல்வமும், என்னை எதிர்த்துப் பகைவர் பொருங்கால், எனதுடல் இரத்தங் கீழே விழுமாயின், ஒரு துளி பல உருக்களாகும் அவ்வரமும் ஈந்தருள்க என்னலும், அவ்வாறே தந்து, அம்புயன் தன்னுலக மேயினன். அனந்தரம், தண்டகன் கங்கைகொண்டபுரம் சென்று, நால்வகைப் படையொடு, கருணை, ஒழுக்கம், தருமம், தானம், நற்குணம் முதலியன நாளுநாளுந் தழைத்தோங்க, தேவர், முனிவர் களிப்பச் சாதுசனத் தொண்டனாய்த், தன் தமைக்கை கொழுநன் கோகலமுனிவனைப் புரோகிதனாகக் கொண்டு, பத்து அசுவமேதங்கள் இயற்றி, எண்டிசையும் புகழ, வைணவச்செல்வனாய், ஒன்பது அற்புத ஆண்டளவும் அரசாண்டுவந்தான்.

---

## பூதிசாதனமார்க்கத்தைப் போதித்தபடலம்.

ஐம்முக! அதுகண்டு, உடலிற் பொருந்தும் நோய்கள் போன்ற அசுரரெல்லாரும், ஒருசேரக் கூடி, நம்மரசன் தண்டகன், குலத்தியல்பு ஒழித்துத் தேவர்களோடு கேண்மைகொண்டுள்ளான். இதனை மாற்றிப் பகை மூட்டுதல் முறையெனச் சூழ்ந்து, கங்கைகொண்டபுரம் வந்து, சில்லிகையின் கால்களில் விழுந்து, அவுணராஜபுத்திரி! எமது விண்ணப்பத்தைக் கேட்டருள்வாயாக: அதிதிபுத்திரரான தேவரும், திதிபுதல்வரான அவுணருந் தாயத்தராயிருப்ப, யாகத்தில் அவிர்ப்பாகத்தை நம்மவர்க்குப் பங்கு கொடாது, எந்நாளுஞ் சதிசெய்து அருந்துந் தேவரொடுங் கூடி நீயும் நின் மகனும் நட்புகொண்டு, நங் குலப்பெட்பு விண்டு, வாழ்தல், நம்மரபுக்கு அடுக்குமோ? என்று வாயெடுத்து மறுமொழி கூறு வண்ணம் பலவாறு போதனைபுரிதலும், அவள் மதி மருண்டு, தன் மகன் தண்டகன்பால் மருவி, தொழுதெழுந்த சுதனை அணைத்து, ஆசிகள் கூறி, அப்ப! அறநெறியோர்ந்து உரைப்பன் கேள்; நங்குலத்துக்கு என்றுஞ் நஞ்சாவார் தேவர். அவர் பக்ஷபாதியாய், நம்மனோரை அழிப்பான் அரியென்பான். யாகத்தில், நமக்கு ஒருநாளும் அமரர் அவிர்ப்பாகந் தந்திலார். தாயத்தராய நம்மனோரை நேயமுங் கொள்ளார். பிள்ளாய்! அவர்கள்

கேண்மை கொண்டதாற் பயனென்னும்? குலமகன், தன்குலத் துள்ளார் நெறிபடலே குற்றமற்ற தருமமாகும். மைந்த! பொதுவிதி, சிறப்புவிதி என்னும் இரண்டனுள் வேத விதி யோம்பல், பொதுவிதியாகும். ஆகமவிதி யோம்பல் சிறப்பு விதியாகும். வேதநெறி நின்று விண்டுவுக்குத் தொண்டுபூண் டொழுகுவார் தேவர்கள். நாலேழாகம நெறி நின்று, சிவக் கொழுந்து அடிபராவுவார் நங்குலத்தோர். புதல்வ! அறுபத்தாறு கோடி ஆற்றல்சா லசுரரும், எண்ணிறந்த இராக்கத பூத பிசாச கணங்களும், இன்னும் பல இனங்களும், நீற்றை நிதமும் அணிந்து, பஞ்சாக்ஷரத்தைச் சவித்துப் பரமசிவமூர்த்திக்கு அடியராய் வாழ் வார், நம்மனோர். புத்திர! அரி ஒருவனே தேவர்கட்கு அதிதேவ னுவான். நம்மவர்க்கோ, பரமசிவன், சுப்பிரமணியன், விநாயகன், வயிரவன், வீரபத்திரன், காளி, உமை, உருத்திரகணங்கள் உள் ளிட்ட பல தேவருள்ளார். நங்குலத்தோர் வழிபடும் இத்தே வர் எல்லாரும், சீக்கிர பலப்பிரதான ராவார். ஐய! தொன்று தொட்டு, இலிங்க மதத்தராய நாம் நவீனமாகவைணவம் புக்கிருத் தல் நன்றன்று. சிவத்தடியராய, நங்குலத்தோரைச் செகுத்தலே விரதமாக்கொண்டுள்ள சிதரனை இன்றுதொட்டு, கனவினும் நினை யாதுவிட்டு, பாஞ்சராத்திரத்தை மறுத்து, பாசுபதநூற் பொருத் து, புராரியை வழிபட்டு, நமது பரம்பரையாப் போந்த பூதி சாதன மார்க்கத்தை மேற்கொண்டு, பண்ணவரோடு பகைபாராட்டி, அன்னார் பாழ்பட இகலிற் றொலைத்து, நமது சுற்றஞ் சூழ்ந்து களிப்ப, வாழக்கடவாய்என்று உரைப்பக்கேட்டு, 'கற்றூர் கரைத் தால்கற்களுங்கரையும்' என்றமுதுமொழிக்கு இணங்கத், தண்டகன் மனங்கரைந்து, தாய் போதனைக்கு உட்பட்டுத் தனது புரோகித னை கோகலமுனிவனை விளித்து, முனிவ! நீ, இன்றே தேவராஜன் பாற் சென்று, சுராசுரராய இருதிறத்தாரும் தாயத்தராயிருப்ப, யாகத்து அவிர்ப்பாகம் அசுரர்க்குத் தராது, நீயிர் மாத்திரம் அருந் தல் வழக்காமோ? இன்றுதொட்டு எமக்கும் அவிர்ப்பாகந் தர உடன்படேல், கேண்மையும் உளதாகும். இன்றேல், யுத்தமுகத்து, நீவிர் இறத்தல் சித்தமாமும். ஆகலால், அவிசு, தருகின்றாயா? இல்லையா? என்று நான் வினவியதாக் கடாவி வாவென்று ஏவ, கோகலன், இந்திரனிடம்போய், தண்டகன் சொன்ன எல்லாஞ் சாற்றலும், கேட்ட சதமகன், சினந்து, முனிவ! அவிர்ப்பாகந் தரு

வதில்லை. அமர்க்கு எழச்சொல்லென்று கூறி, தேவகணங்கள் நெருங்க, மேல்கடற் கரையில், சையகிரி நடுவில், யுத்தசன்னுத்தனுய்ப் போந்திருப்ப, கோசலமுனிவன் மீண்டு, கங்கைகொண்டபுரம் வந்து, அவுணர்கோனே! இந்திரன் முன்னம், நீ கூறிய கூறினேன்; அவன் அவிர்ப்பாகங் கொடேன், அமர் தருவேன் என்றான் என்ன, தண்டகனுந் தீப்பொறிகாலக் கண்களை நெரித்து, அசுரர் இராக்கதர் புடைசூழ்ந்து மொய்ப்பச் சினங்கொண்டு, நாற்படையுடன் மேல்கடற்கண் போந்தான்.

---

## தேவாசுர யுத்தப்படலம்.

---

கேளாய் சூலபாணி! தண்டகாசுரன் தேவர்களை எதிர்த்துப், போர்க்களத்தில், புறமுதுகிட்டோடும்படி இரண்டு மாதங்கள் பொருது, அமரரைக் கலக்குங்காலை, தேவராசன் வெகுண்டு, தண்டகாசுரனை எதிர்த்து, ஏழுநாட்கள் யுத்தஞ்செய்து, முடிவில், தண்டகனால் மோதப்பட்டுத், தளர்ந்து கீழே விழுந்து மூர்ச்சை புகுந்தான். ஏனைத் தேவர் திசைதொறும் பாற, இந்திரன், வீழ்ந்தான், வீழ்ந்தான் என்று அசுரர்கள் கொக்கரித்தார்த்து வீறு கூறத், தண்டகன் வென்றிகொண்டு, ஜயசங்க மூதி, கங்கைகொண்டபுரஞ் சென்று, அசுரர்இராக்கதர் அகமகிழத் தீயொழுக்கம்பூண்டு, சிவபத்தனுய் அரசாட்சி செய்துவந்தான்.

கேளாய் பூதநாத! பூமியில் மாழாந்து வீழ்ந்து மூர்ச்சை புகுந்த புலோமசை கணவன், கனவில், ஜகந்நாதன் தோன்றி, ஆகண்டல! தாய் பெற்றுள்ள வரபலத்தால் தண்டகன், தனது தேயத்தன்றி, மற்றெங்கும் உயிர் மாளான் என்றுரைப்ப, மூர்ச்சை தெளிந்தெழுந்த சுரபதி, கனவினைக் கருதி வியப்படைந்து, அக்கினிதேவனை நோக்கி, சொப்பனத்தைச் சொல்லுதலும், தீக்கடவுளுந் தேவர்கோனுஞ் சிறிது போது ஆலோசித்துப், பின்பு, அக்கினிதேவன், ஓர் அதிதி வடிவங்கொண்டு கங்கைகொண்டபுரம் புகுத, தண்டகன் எதிர்கொண்டு வணங்கி அழைத்துவந்து ஆசனத்திருத்தி, உபசரித்து, அடிகாள்! ஈங்கு எழுந்தவாறென்னை? யாது வேட்டுப் போந்தீர்? புகல்கென்ன, அதிதி புத்திரரை வென்ற அவுணர்கோவே! பசிநோயலைப்ப, அதிதியென நின்மாட்டு அன்னம்

வேட்டு வந்தேன்; அளி என்று இரப்ப, அவுணர்கோன் களிப்பெய்தி, அக்கணமே, பாயச பக்ஷணங்களுடன், அறுசுவையுண்டி படைத்தலும், மாய அதிதி, அசுரனை நோக்கி, எனக்கா முண்டியன் றிது, ஆமுணவறிந்து அளித்தாயேல், உண்பன் நானென்ன, தண்டகன் அச்சுற்று, பெரிய! உனக்கு உகப்பாய உணவினையுரைப்பாய்; அருமருந்தெனினும் அளித்திடுவேன் என்று அறைதலும், அதிதி கேட்டுச், சில்லிகை புதல்வ! காட்டெருமை யிறைச்சி அருந்தக் கருதிக் காதலித்து வந்தேன். நான், நாட்டெருமை மாங்கிசமும் நயவேன் என்ன, அவுணன், அதிதியை நோக்கி, ஐய! அதிதிகளை நாடி, அவரைக் குலதெய்வம்போற் பேணி, அருச்சித்து அன்னார் நினைவ அனைத்துந் தந்து, அவர் நிகழ்த்தும் நெறிகடவாது நின்று, ஊட்டி உபசரித்தலே இல்லறமாகலால், நீ சேட்டவண்ணமே ஊட்டுவன் என்று, அப்போதே கையில் வில்லேந்தி, அம்பு புட்டிலை முதுகிற் றூங்கி, சதுரங்க சேனைகள் சூழக் காட்டினை நாடி, மேதியைத் தேடி, வேட்டையாடக்கோலி, விரைந்து சென்றான். இந்திரன் ஆங்கு, மாயக்காட்டெருமை ஒன்று செய்து, தண்டகன் காண விடுத்துத், தான் ஒரு வனவேடனாய், வில்லம்பு கொண்டு, மேதியைத் தொடர்ந்து வந்தான். மாயக் காட்டெருமையைக் கண்ட தண்டகன் மகிழ்ந்து, வில்லை வளைத்து நாணேற்றி அம்புகள் கோத்து எய்ய, எருமை அவ்வம்புகளிற் றப்பி, நெடுந்தூரம் அகன்று தண்டகனுக்குரிய நாட்டிடை அணுகலும், அசுரர் கோன், அதனை விடாது பின்றொடர்ந்து சென்று, வில்லில், வல்ல பகழி கோத்து, எருமை மேல் எய்தனன். மாயவேடனான இந்திரனுங் கூடவே வந்து, அம்மகிஷத்தின்மேல் சரந்தெறித்துத், தண்டகனை நோக்கி, ஆங்காணும், இதுவும் ஒரு வீரமாமோ? நான் தொடர்ந்து வந்து எய்த இவ்வெருமையை நீயுந் தொடர்ந்து அம்பு எய்தாய். நன்று நன்று, உன் ஆண்மை என்று, இருகை புடைத்துச் சிரிப்பத், தண்டகன், சினந்து, அட! வனசரனே! என்ன சொன்னாய்? நான் எய்த பின் எய்தாயன்றி முன்னே எய்தாயல்லை நீ. இதோ உன் தலையையும் பிளந்து அதிதிக்குப் பலியிடுகின்றேன், பார் என்று வீரவாதம் பேசி, வேடன் மீது சரமாரி பொழிந்தான். அப்போது இந்திரன், வில்லில் பல அம்புகள் கோத்து விடுத்துத் தடுத்து, தனது உண்மை வடிவைக் காட்டி, தண்டகா! நீ இன்று இக்காட்டில் அகப்பட்டாய், இனி கெட்டாய் என்று, பொருதலும்,

தண்டகன், சினந்து, இந்திர! முன் பட்டது மறந்தாயோ? என்று எதிர்த்துப் போர்புரிந்தான். தேவரும் அசுரருங் கைகலந்து எண்டிசையும் நடுங்கப் போர்புரியுங்கால், தேவசேனை, தண்டகனால் அடிபட்டோடவே, தேவராசன் சீறி, வச்சிரப்படையை ஓச்சலும், அது, அரக்கர் அசுரர் பூத பிசாச கணங்கள்தம் உயிர்களை யுண்டு, தண்டகன்மேல் தாவித் தலையைத் துமிப்ப, அவன் உடலினின்று புவியில் விழும் ஒவ்வொரு இரத்தத்துளியும் பல தண்டகர்களாக, அவர்களையும் மற்றும் அசுரப்படையையும், குலிசப்படை, உண்பது, தின்பது, தீய்ப்பது, மாய்ப்பது செய்ய, அவ்வுடல்களினின்று ஒழுகும் இரத்தத் துளிகள், ஒன்று ஒருகோடி தண்டகராய் உலகெங்கும் நிறைந்து, சுரகணங்கள் அழியச் சவட்டி, இந்திரனையுங் குமைத்துக் கொக்கரித்துக் கூத்தாடக் கண்டு, மனிசரும், முனிவரும், தேவரும், சாப்பாரார்? என்று ஏங்கித் தவிப்ப, இந்திரன் ஓடி யொளிப்ப, மூவுலகினும் நிறைந்த தண்டகர், கண்படுஞ் சராசரங்களை அள்ளி வாய்களில் இட்டு, உண்டு, வருங்காலத்து, பிரமன் சிவன் இந்திரன் என்னுமூவரும், மற்றியாவரும் ஏங்கி, எங்கணுநிறைந்தருள் இலகுமிநாத! அபயம்! அபயம்! காத்தருள்க என்று முறையிட்டார்கள்.

---

## ஸ்ரீ பூவராகர் எழுந்தருளிய படலம்.

அரனே! அமலானந்த தற்பரன் தயைகூர்ந்து, பூ நின்றெழும் அவசரமாக, கோடி கோடி யுவா (பௌணர்மி) சந்திரர்களும் ஒவ்வாத சுவேத வராக சொரூபங் கொண்டு, தெற்கு முகமாக மேற்கே நோக்கிச், சங்கு சக்கரங் கொண்ட அங்கைகள் இரண்டும் மருங்கிலே பொருந்தவைத்து, ஆங்கு நின்றான். பூநின் றவதரித்த பூவராகப்பெருமான், மூவுலகெங்கும் நெக்குற, நிறைந்த தண்டகர்களைக் கண்டு, அவர்கள் உடல்களினின்றும் ஒரு சிறு துளி யிரத்தமுஞ் சிந்தாவண்ணம், தன்முகத்து எழுங் காற்றினாலும் கண்களினின்று எழுங் காலாக்கினியாலும், அன்னோர் யாவரும் இமைப்பொழுதில் உயிர் நீங்கிச் சாம்பரிற் சாய்ந்தொழியுமாறு செய்தலும், மூர்ச்சைபுகுந்த இந்திரன் தெளிந்தெழுந்து, உயிர் நீங்கிய தண்டகனுடலைக் குலிசப்படையாற் சேதித்துத், தண்

டகனைக் கொன்றான் தானேயென்ன, மதித்து இறுமாப்பெய்தி, தற்புகழ்ந்து, தலை கால் தெரியாமல் நின்று துள்ள, அஃதறிந்த தற்பரன், இந்திரன் இறுமாப்பு அவிப்பான், மூவுலகும் நிறைந்த தண்டகர்களும் முரண்வலிச் சேனைகளும் எழுந்து வருமாறு திருவுள்ளத்தில் எண்ணுதலும், முன்போல், எண்ணிறந்த தண்டகர்களும், அரக்கர் அசுரரும், பூதபிசாச கணங்களும், இந்திரனுள்ளிட்டயாவரும் காண எழுந்து ஆரவாரித்துத், தேவகணங்களெல்லாந் திசைதோறும் ஓடச் செகுத்துத் தொந்தொந்தொமென்று கூத்தாடி, இந்திரனை நாடி எதிர்த்து வரவே, பாகசாதனன், பாரிடை விழுந்து பதைபதைத்து, முசித்து, அந்தோ! நான் என்னும் இறுமாப்பினால் நலிந்தேன், பூவராகப் பரம்பொருளே! ஒரேகாலத்து, அளவில்லாத கோடாகோடி அசுரர் எழுந்து, தேவர்களைக் குமைத்து, என்னை எதிர்த்து ஆரவாரித்து வாராநின்றார். என்செய்வேன்? அப்பனே! சரணம், சரணம், ஆண்டருள்வாய் என்று கரஞ்சிரங் கூப்பி, அலறிப்புலம்ப, சேவனும் பூவனும் திகைத்துத் துதிப்ப, முனிவர்கள், போற்றி, இனி இவ்வசுரர் இமைப்பொழுதின் மாளாதிருப்பின் இவ்வுலகம் அழியத் தட்டின்றாம். ஏனமாய இறைவனே! இன்னருள் செய் என்று வாழ்த்தத் திருவுள்ள முவந்து பூவராகப்பெருமான், முன்போல் தன்முகத்தெழு காற்றாலும் கண்ணெழு கனலாலும், அளவிறந்த கோடாகோடி அசுரர் இராக்கத பூத பிசாச கணங்களெல்லாம் புலர்ந்து அழிந்து போம்படி மாய்க்கக், கருவிலே நாரதன் அருட்டிருவுடைய, தண்டகாசுரன் கண்டு, மெய்ஞ்ஞானம் ஓங்க, ஏனவுருக்கொடு நிற்பான் இறைவன் என்றுணர்ந்து, மனோவாக்காயங்களைச் சேமித்து, மூலமென்றழைத்த யானை முன்னின்ற முழுமுதலே! இறைவன் நீயே என்றுணர்ந்தும் இலிங்கமதத்திற் பட்டுக் கெட்டேன். தேவதேவேச! நல்லொழுக்கத்தை விட்டேன். முண்டகனோடு, முக்கண்ணனோடு, இவ்வண்டமெல்லாம் உண்டருளொருவ! மண்டைகொண்டிரந்தான் மாபாவம் பாற்றியருளிய மாதவ! சீவர்களை எல்லாம் மாயக் கயிற்றிலாட்டும் மாமாய! நீசனான, என் பிழைகளையெல்லாம் பொறுத்து ஆட்கொண்டு அருள் புரிதல் நின் கடனேயாம் என்று துதித்தலும், அவ்வயின் தண்டகன் உடலினின்று, ஈரேழுலகும் விழுங்கும் பெருஞ்சோதி யொன்று, கண்டார் கண்கள் வழுக்குற எழுந்து, ஸ்ரீவராகப் பரஞ்சோ

திவ்ய வலமாக வந்து, அப்பன் திருமேனியில் அடங்கியது. அவ்வற்புதத்தைக் கண்ட வானோரும், ஏனோரும், இறும்பூதெய்தி, தன்னையே ஓம்பும் அடியாரைத் தன்னையே ஒக்க அருள்செய்வான் தற்பரன் என்னும் ஈது சரதமாக் கண்டோம் ஈண்டென்று, கற்பகப் பூமழை சொரிந்து, பல்லாண்டு கூறி, உவகைபிரேரிக்க, முழுமுதல் முகோல்லாச கைங்கரிய காமராய், சிலர், திருவெண்கொற்றக்குடை கவிக்க, சிலர் சாமரை யிரட்ட, சிலர் எச்சரிக்கை இயம்ப, சேனைமுதலியார் பொற்பிரம்பேந்திக் கோஷ்டி விலக்க, அப்பன், திருவடி பெயர்த்து நடந்து, ஸ்ரீமுட்டம் போந்து, அசுவத்த நாராயண மாமரத் தடிக்கீழ், தேவர்கள் அஞ்சலியஸ்தராய்ப்போற்றித் துதிக்க எழுந்தருளினான்.

---

## சில்லிகை முத்திபெற்ற படலம்.

கேளாய் பிஞ்ஞக! இன்ன செவ்வியிற் சில்லிகை தன்மகன் இறந்தவா கேட்டுத் துன்பக்கடலுட் பட்டு, வயிறலைத்துப் பதறி, ஸ்ரீபூவராகப்பிரான் திருவடிகளை ஏத்தி, ஐயோ! பெற்ற வயிறு பற்றியெரிகின்றதே என்செய்வேன்; என்மைந்தனைப் பறிகொடுத்து, இனி இவ்வுலகில் உயிர்வாழ்வேனோ! ஏனமாய் உலகிடந்த எந்தாய், நின் திருவடிக்கே உரிமைபூண்டு, வீரவைணவனாய் வாழ்ந்திருந்த என் மகனைப் பாஷண்டியாக்கிப் பாழ்பட்டேன். அசுரர் இராக்கதர் போதனையிற் சிக்கி எனது அருமைக் குமரனைச் சைவத்திற் போக்கி, உனக்கும் பகையாக்கிக் கொன்றேன், உய்வழி காணேன், காணேன் என்று புலம்பி அழுங்கலும், ஸ்ரீபூவராக மூர்த்தி கருணைகூர்ந்து, சில்லிகையே! அழாதே; நின்மகன் என்னையே ஒப்ப ஈறிலாச் சுகத்துளான்; அவன் பொருட்டு ஏங்கி அழுங்கல் அழகன்று என்ன, சில்லிகை தொழுது, அகடிதகடன! முத்தியடைந்த என் மைந்தனை நத்திக் காண்பான், பித்துறுகின்றது என்மனம்; இறைவ! அவனை இதுபோது கண்ணாரக் கண்டு மகிழுமாறு, கருணை செய் என வேண்டலும், பகவான், அவ்வண்ணமே காட்டுவேன் என்று, சில்லிகைக்கு ஞானவிழி தந்து, சூரிகளுட் பொலியுஞ் சுதனைச் சேணிற்காணச் சித்தத்தில் நினைத்தான். சில்லிகை, ஆகாயத்தில், கமலக்கண்களும், தாமரையன்ன

கை கால் முகங்களும், நான்கு புயங்களும், காயாம்பூ மேனியும், பஞ்சாயுதங்களும், ஆர கேயூர குண்டல கங்கணங்களும், நிரதிசயானந்த நீர்மையும், விளங்க, நாராயணனே போன்று மிளிரும், நல்ல மைந்தனைக் கண்டு, ஆராக் களிகொண்டு, தேவநாத! அற்புதச் சுக ஆனந்த மைந்தனைக் கண்டேன்; பாசபந்தமும் விண்டேன். அமலானந்த வீட்டிலிருக்க யானும் அவா கொண்டேன்; இனி இமைப்பொழுதும் ஆற்றகில்லேன்; ஈந்தருள் முத்தி என்று இனிதுவேண்ட, ஞானவராகவுருநாதன், சில்லிகைக்கும் மோக்ஷமளித்துத் தண்டகன் மகன், இரணசித்துவைக் கங்கைகொண்டபுரத்துக்கு அரசாக்கி, இரண்டற்புத ஆண்டுகள், வைணவனாய், தேவர்கட்கு அன்பாய், இவ்வுலகாண்டு, பின், தேவகற்பத்தளவுஞ் சுவர்க்கத்திருந்து, நலமிந்தமில்லதோர் நன்னுடெய்துமாறு வரந்தந்து, சில்லிகை தவஞ்செய்த அவ்வனத்துக்கு, இன்று தொட்டுச், சில்லிகாவனம் என்று பெயராகக்கடவது என்று செப்பி, அருள்புரிந்தான். இரணசித்தென்பான், பூவராகதேவை மறவாது ஞான பத்தி வைராக்கியங்களுடன், வைணவனாய்ப், பல வேள்விகள் செய்து, தேவரும் மற்றியாவருங் கொண்டாட, கங்கை கொண்டபுரத்தில் அரசியற்றிவந்தான்.

---

## இமயவராகர் எழுந்தருளிய படலம்

மாமுவாள! ஸ்ரீஅச்சுத வராகப்பெருமான், அசுவத்தநாராயணமாமரத்தடிக்கண், வேதாந்த அத்தாணிமீது எழுந்தருளி, பிரமன் முதலாந் தேவபிருந்தங்களை இருப்ப நவின்று, அயனை நோக்கி, இந்தத் திருமுட்டக்ஷேத்திரம், மிகச் சிறந்ததாகும். உந்தி பூத்தோய்! நித்தர்க்கும் முத்தர்க்கும் நமக்கும் இத்தலத்துக்கு மேலாய ஒப்பிகந்த தலம் ஒன்றிலது. நீயும், இத்தலத்திலிருந்து வேதமந்திரங்களால் எம்மை அருச்சிக்கக்கடவாய் என்ன, மலரோன், நாயன்றே, மாபாக்கியமென்று மகிழ்வெய்த, மாதவன், கண்ணுதலைக் கடாக்ஷித்து, உமைபாக! வாகைசூடிய தைத்தியர் மங்கி அழியுமாறு, எமது ஆணைகொண்டு, வெந்தார் என்புமாலை சூடி, பிணநீறு பூசி, மண்டையோடேந்தி, ஆத்தி ஊமத்தை அறுகணிந்து, உன்னைப் பரப்பிரமமென அசுரர் ஓம்ப, நீ நவின்ற, மோகனப் பொய்யாகமங்களை நம்பி, அவ்வசுரர் இராக்க

தர் எவரும், பாம்பின் வாய்ப்பட்ட மண்டூகம்போல், அவைதிக பாசுபத சைவாதி சமயங்களிற் சிக்கி, வேதபாகியராய், என்னை விட்டு, உன்னை வழிபட்டு, பவசாகரத்து அழுந்திப், பாவகாரிகளாய் அருநரகிற் புக்கனர், அன்னார்செய்த தீவினை உன்னையும் வெளவிச் சூழ்ந்துளது. அவ்வினை தீர விளம்புவன் ஒன்றுகேள்: உருத்திர! இத்திருமுட்டத்துக்கு வாயுதிக்கில், எனக்கு உகப்பாந்தலம் ஒன்றுளது. அது காசிக்கு மேலாயது; அதன்பெயர் விருத்தாசலமென்பது. பிந்துமாதவ க்ஷேத்திரமானது. அவ்விடம், நீ நின்மனைவி, மக்கள், மருகிமார், தமருடன் போந்து வாழக்கடவாய் என்று திருப்பவளச்சோதிவாய் மலர்ந்து அருளிச்செய்ய, மலைமகள்நாதன், தன்னியனானேன் நான்; பாக்கியம், பாக்கியம், என்று மகிழ்ந்தான். பின்னும் பகவான் ஏனைத் திக்குப்பாலகரை நோக்கி, உமது இஷ்டங்களெல்லாம் ஈந்தருள்வன்; நீவிரும் இங்கு இருமின் என்று அருள்புரிந்து, கருடனை விளித்து, உவண! உனக்கொன்று பணிப்பன், இத்தலத்திடை உயிர் வீடும் பேறுற்றோர் அந்திமகாலத்தில், நீ, ஆசாரியனாக மேவி, பிரமவித்தை என்னும் துவயமந்திரோபதேசம் செய்து அவரை எமது அந்தமில் சுகவீட்டின்கண் இருத்துவாயாக என்று அருளிச்செய்து, நித்தர் முத்தரைக் கணிசித்து, நீவிரும் உகப்பாய உருக்கொண்டு, ஈங்குறைமின் என்றுரைத்துப், பின்னரும் பிரமனை நோக்கி, தனய! நின்னூர்க்குச் சுயம்பு அரங்க விமானம்; இவ்வூர்க்குச் சுயம்பு வராகவிமானமாகும். இவ்விமானம் மாயையற்ற சீமான்கட்கன்றி, மற்றோர் கண்களுக்குப் புலப்படாது. ஆகலால், ஈண்டு, மனிதருந் தரிசித்து, மாயை கடந்து வைகுந்தம் மேவுமாறு செவ்வே சேவை தரும் ஸ்ரீவராகவிமானந் திகழ அமைப்பாயாக. மைந்த! முன்னாள் வாயுவுக்கு சுவேத வராகச் சுயம்பு விமானமொன்று தந்தேன். அவன் அவ்விமானத்தை இமயமலை உச்சியில் கங்கையாற்றங்கரையில் பதிட்டை செய்து இன்றும் ஆராதித்து வருகின்றான். நான்முக! அவனிடத்து, நீ வேண்டி, அவ்விமானத்தை ஈங்கு, ஸ்தாபித்துப் பலிசெய்வாய் என்று அருளிச்செய்து மறைந்தருளினான். பிரமன் உய்ந்தேன்! உய்ந்தேன்! என்றெழுந்து, வாயுவை விளித்து, சமீரண! நீ, இமயத்திட்டு ஏத்திவரும், சுவேதவராகச் சுயம்பு விக்கிரகத்தைத் திருமுட்டத்து அமைக்கச் சீதரனிட்ட ஆணையின்படி ஆங்குப் பதிட்டைசெய் என்று பணிப்ப, வாயு, இமயத் துச்சியினி

ன்ற ஏனத்தப்பனை, விமானத்தோடு சிரமேற் கொண்டுவந்து அளிப்பத், திசைமுகன், அவ்விமானத்தைப் பாஞ்சராத்திர முறையில், திருமுட்டத்திற் பதிட்டைசெய்து, விதிவழி பலிபுரிந்து ஆகாயமளாவிய மூன்று மதில்களும், நான்கு கோபுரங்களும் கருப்பகிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், வாசனமண்டபம், அலங்காரமண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், முதலாய பல மண்டபங்களும், ஒப்புயர்வற்ற திருமுட்ட நகரமும் நிருமித்து, ஸ்ரீபூவராகசுவாமிக்குப் பிரமோற்சவஞ் செய்வான் எண்ணி, மாசிமாதம், பரணிநாளில், பாஞ்சராத்திர விதிப்படி திருவிழவு தொடங்கி, திருமுளையிட்டு, உலகிடந்த அப்பனை உபயநாய்ச்சிமாரோடுந் திருமஞ்னமாட்டி, நவரத்தின பூஷணங்களால் அலங்கரித்து, இருகுடைகவிப்ப, இருமருங்குஞ் சாமரையிரட்ட, கொடிகள் பிடிக்க, ஒட்டைகள் முன்னடக்க, பேரி, நாகசுரம், குழல் முதலிய பலவகை வாச்சியங்கள், விண்ணும் மண்ணும் செவிடுபட முழங்க, திருப்பல்லக்கு, தண்டிகை, திருவனந்தாழ்வான், சூரியன், சந்திரன், யாளி, சிங்கம், யானை, அனுமான், கருடாழ்வான் முதலிய வாகனங்களில் எழுந்தருளப்பண்ணி, பகலிரா இருவேளையினும், ஊர்வசி, மேனகை, திலோத்தமை, அரம்பையாதி மங்கையர் திவ்விய கானத்தோடு நிருத்தஞ் செய்ய, சீயர்கள், வேதசிஷ்டர்கள், இருகைகள் யாத்துத் தென்மறையோதி முன்னே செல்லத், தூமறையோர் வடவேதமோதி, பின்னே தொடர, நாளும், திருவீதிகள்தோறும் புறப்பாடுசெய்வித்து, ஏழாநாள் இரதோற்சவம் இனிதே கண்டருளப் பண்ணி, எட்டாநாள், சீதேவி பூதேவியோடும், சீவராகமூர்த்தியைச் சிவிகையிலேற்றித் திருவீதிவலமாகக் கீழ்க்கடலை நோக்கி எழச்செய்து, சிவன் இந்திரனுள்ளிட்ட தேவகணங்களொடும், முனிவர் குழாத்தொடும், திருமேனியைப் பாதுகாத்துக்கொண்டு, வழியில், அவ்வவ்வூரிலுள்ளார் சேவித்துச் சிறப்ப, அசுவோற்சவம் ஆற்றுவித்து, ஒன்பதாநாள், கீழ்கடலிற் றீர்த்தங் கண்டருளச்செய்து, ஆங்குநின்றுந் திருமுட்டம் எழுந்தருளப்பண்ணி, உற்சவத்தைச் சாத்துசெய்து, வசந்தோற்சவங்களும் இயற்றி, நறும்புகை காட்டித், தீபகற்பூரம் ஏற்றி, ஆலாத்தி சுழற்றித், ததீயாராதனமுஞ் செய்து, திருவிழாவை முற்றுவித்துத், தேவபிருந்தங்களுடன் தண்டமாகச் சேவித்துக் கையாத்து, சந்நிதிமுன் நின்று துதித்தலும், இமையோரப்பன், அயனை நோக்கி, இரணியகருப்ப! பெற்றியி

னியற்றிய பிரமோற்சவம் உகந்தேன். இவ்வுற்சவத்தைத் தவ ருது உடன் நின்று சேவிப்போர், தாய் முலைப்பால் அருந்தார். வேட்பன எய்தி வீடும் பெறுவர் என்று ஸ்ரீ பாததீர்த்தம், திருத் துழாய், சடாரி, முத்தக்காசு (கோரைக்கிழங்கு) சூரணம் முத லாம் பிரசாதங்களுந் தந்தருளத், திசைமுகன், தேவருடன் பெற்று மகிழ்ந்து, நிச்சலுந் தொண்டுபூண்டு, நித்தியோற்சவம் முதலிய திவ்வியோற்சவங்களைச் செய்து, ஆங்கண் வாழ்ந்திருந்தான். என்று நாராயணருஷி நச்கனுக்கு நவின்றவாறு சூதமுனிவர் சௌனகாதியர்க்குச் சொல்லி, மேல் விளம்பலுற்றார்.

---

## திருமுட்டநகரப் படலம்.

கலைகளெல்லா முணர்ந்து, கமலைகேள்வனையே தொழுங் கவீஞ்சர்காள்! கேண்மின்: ஆங்கிரச மாதவன், ஸ்ரீமுட்டச் சிறப்பைக் கேட்க விழைந்த, பரத்துவாச முனியை நோக்கிப் பகருமாறு: முனிவர்காள்! திருமுட்டச் சிறப்பை யுரைக்க என் தரமன்று. அவ்வயின், தேவதேவ ஸ்ரீமனைப் பரவு மாந்தர் தூமனம்போல் வெண்ணிறத்த மேகங்கள், சென்று, கடன்மேய்ந்து, வேற்றுத்தேவைப் பரவுமாக்கள் தீமனம் போற் கருநிறத்தவாய், மீண்டு வான்வழி எழுந்து, வராகக் கிரிமேற் படர்ந்து, மழைபொழிய, அது நீத்தமாய், காடுகள் மலைகளை அலைத்து, மடுக்கள், ஆறுகள், ஏரிகள், குளங்கள், கூவங் களை நிறைத்துச், கடலை எதிர்த்துக் கால்கள்தோறும் பரவிப் பெரு கக்கண்ட உழவர், மகிழ்ந்து, இயமன் பகடனைய கடாக்களைக் கட் டி, எண்ணிறந்த கலப்பைகளை நாட்டி, நிலங்களை யுழுது, செந் நெல் முதலியன வித்தி, நட்டுக் களையெறிந்து, ஓம்பி, கற்பார் கல்விபோற் காத்து, விளைகதிர்களைக் கொய்து, களப்படுத்தி, நெல் லுதிர்த்து, கடாவடியிட்டுத் தூற்றி, அறிஞர் வறிஞர்க்கு உதவி, பண்டிகளில் ஏற்றி, இல்லஞ்சேர்த்து, தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல் ஓம்பி, ஆறிலொருகடமை அரசனுக்களித்து, உண்டுகளிப்பார். அவ்வூர், நவரத்தினங்கள் இழைத்த பொற் சுவர்களை யுடைத்தாய், வைரத்தினுற் கதவுகள் அமைக்கப்பெற்று, சங்கு சக்கரத் திருமட்புண்டரக் குறிகளைக் கொண்டு, வானோங் கிய எண்ணிறந்த அழகிய எழுநிலைமாடங்கள் இருமருங்கும் நில

வும் பலவீதிகளை யுடையது. வண்டினமுரலும், பலா, வாழை, மா, தெங்கு முதலிய விருக்ஷங்கள் அடர்ந்த சோலைகளாற் சூழ்ந்தது. அந்நகர்ப் பெண்கள், அன்னமன்ன நடையுங், கிளிபோன்மொழியும், செவ்வரிபரந்து காதளவும் நீண்ட செந்தாமரை யொத்த கண்களும், பூவனைய மேனியும், இரதியும் வெள்கும் அழகும் உடையார். தத்தங் கணவனையன்றி வேறு தெய்வமும் பேணார். அவர்கள் பெருமையைப் பகரவல்லாரார்? அந்நகருறை மாந்தர், செல்வத்தில் தனதனை யொப்பார், சீவகாருணியத்தில், சடபரதனை யொப்பார். கொடையிற் கன்னனை யொப்பார். அந்நகரெங்கணும், பகவந்நாமசங்கீர்த்தனஞ் செய்யும் ஓசையும் இருமறைப்பாராயண ஓசையும் நிறைந்து விளங்கும். அப்பதிக்கண், மாதவன்றன் ஐம்படைக்குறிகள் அணிந்துள்ள மறையவரும், அரிபாதாகிருதியாக அழகிய திருமட்புண்டரம் அணிந்துள்ள அந்தணரும், இருவிபூதி ஏய்ந்த இராமநாமம் ஏத்தும் வேதியரும், பூவராகனை நாளும் போற்றி வாழ்வார். ஆங்கு பற்பல பறவைகள் ஒலியும், யானைகள், குதிரைகள், எருமைகள், ஆநிரைகளின் அரவமும், செந்தாமரை, குமுதம், செங்கழுநீர், நீலோற்பலம், முதலிய மதுமணப் பூக்கள் அலர்ந்த பல தீர்த்தங்களின் ஒலியும், அத்தீர்த்தங்களில் ஆடுவார் கலிப்பும், யாகஞ் செய் ஓதையும், கலைபயில்வார் ஓசையும், தானவொலியும், மணவொலியும், கடலொலி கடுப்ப நிறைந்து, மிகுந்து, ஒலிக்கும். இந்த க்ஷேத்திரத்திருப்பு, இவர்க்கு இயைந்தது, என்ன மாதவத்தின் பயனும் என்று இறும்பூதுற்று, ஆங்கு, அன்னவாகனனும், ஆவின் வாகனனும், ஆகுவாகனனும் மேகவாகனனும், ஏனைத்தேவரும் எண்டிசைப்பாலரும், தாமரைப்பறவை முதலிய உருவெடுத்துச் சஞ்சரிப்பார். கொண்ட பெண்டிர் மக்களைக் கூடி மகிழ்ந்து குறைவொன்றில்லாது நல்ல பதத்தால் மனைவாழ்வார் ஒருசார். ஆரணங்களும் அருந்தவ முனிவரும்,யாவரும் விரும்புந் திருவஷ்டாக்ஷர மந்திரப்பொருள் அறைவார் ஒருசார். பகவத்கீதை அருத்தத்தைப் பகர்ந்து பத்தியில் பயில்வார் ஒருசார். துவாதசாக்ஷர, ஷடக்ஷர மந்திரப் பொருள் சாற்றுவார் ஒருசார். காவியம், நாடகம், அலங்காரம், சத்தம், தருக்கம் மீமாம்சை ஓதி வாதப்போரிடுவார் ஒருசார். ஓவியம்போலிருந்து யோகுசெய்வார் ஒருசார். கருமயோக பத்தியோகத்திற் கலந்து அனுஷ்டிப்பார் ஒருசார். நான் எனது என்னல் மாற்றிப் பிரபத்திநிலை எய்தி, சாதகம்போல் நாதனருளை நோக்கு

வார் ஒருசார். தத்துவமசியாதி நான்கு வாக்கியங்களிற் பேதஞ் சொல்வார் சிலபேர். அபேதங்கூறுவார் சிலபேர். பேத அபேதம் இரண்டையுங் கூட்டி, சித்து அசித்து என்னும் விசேடணங்களோடு சிறந்துள்ள விசேடியமாகும் ஈசுவரனும் சீவனும் என விசிஷ்டங் காட்டி, முத்தியில் ஆனந்தம் ஒன்றுமென்பார் சிலபேர். அத்தலத்தோர், திருமாலடியார் தம்மை ஊட்டுதற்கே தினந்தோறும் அடிசில் சமைப்பார். திவ்விய தேச யாத்திரை செய்வார்க்கு அளிப்பதற்கே பொருள் தேடுவார். பிதுர்க்கடன் கழிப்பான் புத்திரரைப்பெறுதற்கும் யாகாதியியற்றுதற்குமே தத்தமது குவிமுலை மடவாரொடுங் கூடுவார். பரத்துவாச! இத்தலத்தை இடந்தருளிய உத்தமன் உகந்த அத்தல மாட்சிமை கூற அரிதரிது. இம்மட்டிற் சுருக்கி மேல் செல்வன்.

---

## இலக்குமியும் உமையும் அவதரித்த படலம்.

கேளாய் வேதிய! திருமுட்ட க்ஷேத்திரத்துக்கு வடக்கே, சில்லிகை யீன்ற, மணிமாலை, முத்துமாலை என்னும் மங்கையர் இருவரும் மதங்கமாதவர் புதல்வர் தத்திலமுனி, கோகலமுனி என்னும் இருவரையும் மணந்து, சிலநாள் கூடியிருந்து, பின்னர் பூவராகனை மனக்கண் நிறுவிப் பொறிபுலன்கள் அடக்கி, ஊணுறக்க மொழித்து, யாவரும் புகழத் தவஞ்செய்து, அத் தவப்பயனாக, பூவராகமூர்த்தி திருவாராதனத்துக்கு இயைந்த கிருஷ்ணநதி, சுக்கிலநதி என்னும் இரண்டாறுகளாக மருவிப் பெருகுவார். அவ்வாறுகள் இரண்டும் மணிமுத்தாநதி, சுவேதநதி என்று, இன்றும் விளங்காநின்றன. மணிமுத்தாநதிக்கு வடக்கே, வலயமாதேவி என்னும் மாட்சிமைபெற்ற ஸ்தலமொன்றுண்டு. அப்பதிக்கண் காத்தியாயன புஷ்கரணி ஒன்றுளது. அதன் பெருமை அளவிறந்தது, காத்தியாயன முனிவன், ஏனத்துருவப்பனை இதயத்திருத்தி, அக்குளக்கரையிற் சிரகாலந் தவமிழைத்து, புஷ்கரணியிற் குளித்து, குருத்துரோகத்தினின்று நீங்கினன். ஆகவே, அதன் கரைக்கண் பர்ணசாலையொன்று அமைத்து, நாளும் பிரியா துறைந்தான். ஆரியர்க்குப் பிழைசெய்தோர், அக்குளத்தின் மூழ்கி வேதநாராயணப் பெயரால் செய்கடன் செய்யின், அப்பிழையினின்று அகன்று, நினைப்பெல்லாம் எய்தி, மோக்ஷமும்

பெறுவார். முனிவர்காள்! வலயமாதேவி என்னும் அலூர்க்கண் வசிக்கும், காத்தியாயனமுனிவன், புத்திரப்பேறு இன்றி, வருந்தி, மகவில்லார்க்குச் சுகவில்லம் இன்றென்று சொல்லும் நூல்கள்; சகமும் பழிக்கும்; என்செய்கேன் என்று மனம் நைந்து அழுங்கி, அங்கு, சந்நிதி ஒன்று அமைத்து, அதன்கண் வேதநாராயணனை வேதசிரம் எனும் பாஞ்சராத்திர முறைப்படி, பதிட்டை செய்து, பரிசனபரிவாரங்களை ஸ்தாபித்து, தேவரும்முனிவருங் கூடி, சித்தத்தே வைத்துத் தொழுது களிப்புறத் திருவாராதனம் புரிந்துவந்தான். அவ்வண்ணஞ் செய்தும், தன் வேட்கை பெறுனாக, வெதும்பி அழுங்கிப் பின்னும் பூவராகனை எண்ணிச் சகத்திரநாம அருச்சனை செய்து, பற்பல நோன்புகள் இழைத்து, யாகமும் முற்றி, தானதருமங்கள் பல செய்தும், மகவெய்தாது, பெருந் துன்புற்று, அழுது, குருவுக்கியற்றிய குற்றம் அகற்றிய அப்பன், குழவியைத் தந்திலன், என்னே? என்றிரங்கி, உலகில், தந்தையினுந் தாய் அருள் மிக்கதன்றே? இனி, பிள்ளை கலி தீர, பெரியபிராட்டியாரை வழிபடுதல், பெற்றியாம் என்று எண்ணி, உணவொழித்து, ஐம்பொறிக் கதவடைத்து, புலன்களை ஒடுக்கிப், பிராணயாமம் பண்ணி, யோகவிஞ்சையின் வழிபட்டு, இலக்குமிதேவியை, இதயகமலத்து இருத்தித் துதித்தான்.

வெண்மலைக் கிழத்தி பொன்மலர்க் கிழத்தி வேய்வளர் கன்மலைக் கிழத்தி, கண்மலைக் கற்ப காடவிக் கிழத்தி கடவுளர் முனிவர்களுகர், மண்மலி மனிசர் கிழத்திகட் கெல்லாம் மங்கலங் களைத்தருங் கிழத்தி, தண்மலை யமுத வாரிமா தேவி சரணநிற் கெனையருள் புரியே.

நான்மறைப் பயனு மேழிசைச் சுவைக்கு நாயகி நாதவேதாந்தந், தான்மறைந் தொளிருந் தற்பரன் மார்பி னுயகி தாவமின் மோக்க, வான்மறை வனச நாயகி யகில நாயகி வல்லுளி வடிவாங், கோன்மறைந் தகலங் சொள்ளுமா தேவி யான்விரும் பலைக் கொடுத் தருளே.

ஒளிச்சுவை யம்மை மணச்சுவை யம்மை யோங்கிசைச் சுவையெனு மம்மை, களிச்சுவை யம்மை மெய்ச்சுவை யம்மை ககனங்கா னிரெரிப் பூவாழ், நளிச்சுவை யம்மை யவைக்குமே லாய நவில்குணச் சுவைதரு மம்மை, யளிச்சுவை யம்மை வலய மா தேவி யமர்சுவை யம்மையெற் கருளே.

தாணுமா லயனைப் பெற்றருளென்றாய் தாலமுண் டளந்து மிழ் பரன்பாற், காணுமா லென்றாய் கவிசொலு நாவ லோர்த மைத் தருஞ்சனி வுறுதாய், பூணருளென்றாய் புஞ்சமீ யென்றாய் புங்கவர் தாய்முனி வரர்தாய், வேணருளென்றாய் வலயமா தேவி மேவிடுந் தாயெனக் கருளே.

அட்டமா சித்தி யளித்திடு மாய்ச்சி யட்டபாக் கியந்தரு மாய்ச்சி, நட்டமாம் பொருளை நாட்டிடு மாய்ச்சி நான்மறை யாய்ச்சியா ணவத்திற், கட்டுணு முயிருக் காக்கையீ யாய்ச்சி கதிபத விகளரு ளாய்ச்சி, மட்டொணு மாதே விப்பெய ராய்ச்சி மாதவ ராய்ச்சியெற் கருளே.

இவ்வாறு அக்காத்தியாயனமுனிவன், என்குலம் விளங்கக் கோத்திரப்பேர் சொல்லும் குழவி யில்லாது குறைந்தேன். அக் குறைதீர மகவைக் கொடுத்து ஆண்டருள், அம்மே! என்று மிக்க ஆர்த்தியோடு துதிபுரிந்து, யோகுசெய்து தீக்கடைகோலால் யாகத்தீக் கடையுங்காலை, தெய்வநாயகன் நிறம் வளர் செங்கமலப் பாவை உகந்து, தானே அவதரிக்க நினைவிட்டு, யாகத்தீக்கடை கோலின் நுனியில், பிரம வுருத்திரேந்திராதி தேவர்கள் பூமாரி பொழிந்து, துந்துபி முழக்கித் துதிப்பக், குழவியாக அவதரித் தாள். காத்தியாயனமுனிவன் கண்டு, பிள்ளைகலி விண்டு, பேரா னந்தங் கொண்டு, என்னம்மே! வருக, என் சொம்மே! வருக, என்னைப்பெற்ற தாயே! வருக, என் நிதியே! வருக, என் மதியே! வருக, என் குலவிளக்கே! வருக, என் மங்கலமணியே! வருக, என் கிளியே! வருக, என் குயிலே! வருக, அன்னமே! வருக, மலருறையளியே! வருக, மாதவர்க்கருள்புரி வாழ்வே! வருக, வருக, என்று வாரி அணைத்தான். மூக்குறிந்தான். மணிமுத்தந் தந்தான். கன்னத்தை அள்ளிக் கிள்ளினன். உள்ள முருகினன். உலக மாதாவைப் பெற்றெடுத்த அன்னன் பேருவகைத் திறத்தை யாரே பேசுவார்? பின்னர், அத்தீக்கடைகோலின் அடிப்பாகத் தில், பார்வதி ஓர் மகவாய் உதித்தாள். காத்தியாயனமுனிவன் களிப்பெய்தி, தீக்கடைகோலிற் பிறந்த, திருமகளையும் பார்வதி யையும் மிக்க செல்வமாக அருமைபாராட்டி, சீராட்டி, காத்தியா யனிகள் என்று பெயரிட்டு, நற்கருமங்களெல்லாம் நன்கியற்றி, இனிது வளர்க்கக் கமலவல்லித்தாய் தங்கையொடு, தந்தை களிப்பெய்தத், தவிழ்ந்து, ஊர்ந்து, இருந்து, எழுந்து, நடந்து,

நாளொருமேனி பொழுதொருவண்ணமாக வளர்ந்து வருநாள், பருவஞ் சார்தலும், ஈமத்சாடியீசன்வந்து, உமாதை மணந்து கைலைமேவி வாழ்ந்தான்.

## இலக்குமி தவமியற்றிய படலம்.

கேளாய்பாரத்துவாச! கமலவல்லித்தாய், தந்தையைவிளித்து, என்னைப்பெற்ற ஐய! மானிடர் மற்றைத்தேவர்க்கு என்று பேச்சுப்படில் வாழகில்லேன், நான் நால்வேத விளக்காய், திருவஷ்டாக்ஷரப் பொருளாய், அகார வாச்சியனாய், அகிலமெல்லாம் அள்ளி, உண்டு, உமிழ்ந்து, அளந்து, காத்து, ஏந்திய அம்மானாய், விளங்கும், பூவராகசாமியையே வேட்டுப் புகழெய்துவேன் என்று விளம்பி, தண்ணளியுருவாய, ஜகன்மாதா தவஞ்செய்ய ஒருப்பட்டு, மணிமுத்தாநதியின் பாங்கர், மரங்கள் அடர்ந்த பெருங்காட்டிடைப் பதுமாசனமிட்டுத் திருமேனியைச் சித்திரம்போற் சமைத்துக், காற்றையடக்கி மூக்கினுனி யூன்றக் கண்ணை விழித்து, கற்றவருஞ் சாணுக் கமலக்கண்ணைப் பன்னிரண்டங்குல வெளியிற் கண்டு, ரேசக, பூரக, கும்பகங்கள், மாறிச் சமாதி வாய்ந்து, யோகசாஸ்திர நெறியில் அருந்தவம் இழைத்தாள். அம்மை திருமேனியில், வெயில் படாவண்ணம், விகங்சங்க (பறவைக) ளெல்லாங் கூடி, மேலே சிறைகளை விரித்து நிழல் செய்தன. சிங்கங்கள், புலிகள் முதலிய மிருகங்களெல்லாம் மாதேவிக்கு ஓர் இன்னலும் புகுதாமல், வலங்கிடந்து சூழ்ந்து காத்திருந்தன. இவ்வண்ணம் பறவைகளும் விலங்குகளுந் தொண்டு பூண்டிருக்குமேல், வாணியனும், வண்ணானும், செட்டியும், சக்கிரியும் தொழும்பு செய்திருந்தன ரென்பது சொல்லாமே யமையும்.

## உற்பலமாலினி தூதுசென்ற படலம்.

அந்தண! பறவைகளும், மிருகங்களும், தேவரும், மற்றியாவருந் தொண்டுசெய்யத் தவமியற்றும் அம்மை சண்காண, பூவராக புருஷோத்தமன், அக்காட்டில் எய்தி நின்று, பையச் செல்லக், காத்தியாயனி, ஆண்டான் அழகு என்னும் மது வுண்டு, குறை

யெல்லாந் தீரக் கண்டு, புது மணாளனைக் காணும் பூவைபோல், நாணங்கொண்டு, முகத்தைக் கோட்டிக், கடைக்கண்ணால், ஐயன் அழகைப் பருகிக்கொண்டிருந்தாள். ஏனத்திருவெந்தை, பிராட்டியை ஏறெடுத்துப் பாராதே, வந்த சொந்த வேலையை நாடிச் செல்வான்போல் செல்லுதலும், அம்மை, உற்பலமாலினி, என்னுந் தோழியை நோக்கிக், கண்டாயே, தோழீ! நங்காதலன் வந்து செல்லும் காட்சி. நீ சென்று அவ்வழகனை இங்கு அழைத்துவா, விரைந்துபோ, என்று உரைப்ப, இகுளை, ஓடி, எம்பிரானைவணங்கி எதிரே நிற்க, ஐயன் புன்னகைபுரிந்து, பெண்ணே, நீயார்? நான் போம்வழி மறித்து எதிரே நிற்றல் என்னை? என்னலும், உற்பலமாலினி, அழக! காத்தியாயனமுனிவன் பெற்ற கட்டழகியின் தோழி நான், என் தலைவி தவஞ்செய்யும் ஆச்சிரமம் இது. நாத! எமது நாயகி உன்னை அழைத்துவரத் தூது விடுத்தாள். என்னை, நீ, என் ஆய்ச்சியிடம் அண்மி, தீர்த்தப் பிரசாத பக்ஷணங்கள் அருந்திச், சற்றே இளைப்பாறி யிருந்து, அருள்புரிந்தேகுதல் நன்காகும். வருக வருக, என்று அழைப்ப, அழகன் கேட்டுப், பாவாய்! நாட்டிலுள்ள பண்டங்களும் உணவுகளும், வேண்டேன் நான். வேதக்காட்டிற் கரந்துறைவேன். பத்திக் கிழங்குண்டு களிப்பேன். ஆர்த்தியாம் அள்ளலில் ஆடுவேன். மெய்ஞ்ஞானப் புதரிற் றூங்குவேன். உண்மையிது. உன் தலைவி அறியப் போய் இயம்புவாய் என்றான். தோழி, தேவிமாட்டோடிச், சுகுணமூர்த்தி சொன்னபடி சொற்றலும், உலகீன்ற அன்னை, கேட்டு, தோழீ! இன்னும் நீ, என் அழகன்பால் அணுகிச் சொல்லுவதொன்று உண்டு: அது யாதென்னில், காட்டின்கண் அவர் உண்ணுங் கனிவான பொருள்களும், நாட்டின்கண் உண்டு. நாட்டின்கண் அவர் நாடியுண்ணும் பொருள்களுங் காட்டின்கண் உண்டு. நாடு நகருறை மனிதருண்பது, காடுறை கந்த மூல பலாதிகளன்றோ? காடுறை மிருகங்களுண்பது, நாடுறை மனிசர், ஆடுமுதலாமன்றோ? ஆகலால், நியதியில்லைகாண் என்று நிகழ்த்துவாய். இது நிற்ப, பூவுக்கும் மணத்துக்கும், எள்ளுக்கும் நெய்க்கும், விளக்குக்கும் ஒளிக்கும், பாலுக்கும் சுவைக்கும், கரும்புக்கும் சாற்றுக்கும், பாவுக்கும் பொருளுக்கும், உயிருக்கும் உடலுக்கும், சந்திரனுக்கும் சீதளத்துக்கும், சூரியனுக்கும் வெய்யலுக்கும், உள்ள பொருத்தம்போல் அவ்வழகனுக்கும் எனக்கும் ஒழிக்க வொழியாத உறவும் உண்டு. உற்பலமாலினி! உத்தமர்க்குள் அவரே புருஷோத்தமராவார்.

பத்தினிகட்குள் யானே அரும்பத்தினி யாவேன். அந்நாராயணனுக்கும், நாரங்கட்கும் உள்ள, நவவித சம்பந்தங்கள், இங்கு எனக்கும் உண்டு. இதை அவர் திருள்ளம் பட இயம்புவாய் பாவாய் போவாய் விரைந்து என்று ஏவினாள். இகுளை, சென்று, இறைவனைப் போற்றித், தலைவி சொன்ன எல்லாஞ் சொல்லி, தயைகூர்ந்து எழுந்தருள்க என்ன, விதியுஞ் சிவனுங் காணா வேதநாயகன், மின்னல்போல் ஆங்கு மறைந்தான். தோழி, ஏங்கி, மீண்டு, தேவிபாற் போந்து, தாயே! நீ கூறிய எல்லாங் கூறினேன். கோலத்துருக் கோமான், கேட்டு, நகைத்து, நிமைக்குள் மாயமாக மறைந்தான். என்செய்கேன்? என்ன, பிராட்டி, கேட்டு, உள்ளம் நைந்து, என்னீர்மை அறியாத எம்பிராற்கு, என் சொல்லி இணக்குகேன்? எவ்வாறு காண்கேன்? என்று, கன்றிக் கன்றிக் கதறி, என்புருகக் கரைந்து, ஏனத்துருவாய ஞானப்பிரானைத் தான் கண்டவண்ணஞ் செவ்வனே ஓர் படத்தின்கண் எழுதி, கண்களாரக் கண்டாள். கண்ணாற் கலநீர் சொட்டினாள். இருகையால் எடுத்துக் கண்களில் ஒத்தினாள். தலைமேலிட்டுத் தளர்ந்தாள். மார்பில் அணைத்தாள். முத்தமிட்டாள். அபினிவேசங்கொண்டு அடிமுதல் முடிகாறும் ஒவ்வொரு திவ்விய அவயவங்களையும் நோக்கி, நெட்டுயிர்ப்பாள், ஆருயிர் பதைப்ப அயிர்ப்பாள். இவ்வண்ணம் ஏழுநாட்கள் காறும் ஏங்கும் இலக்குமியம்மையைக் கண்ட காத்தியாயன முனிவன், கலங்கி, அன்னாய்! அஞர்படக் காரணம் என்னென வினவ, அம்மை நிகழ்ந்தன அறைதலும், தாயே! வருந்தற்க. பூவராகசாமி வந்து உன்னை மணம்புணர்வான் என்று கண்ணீர் துடைத்துத் தேற்றி, ஞானப்பிரானைத் துதித்தான்.

## அயன் அன்னமாய்த் தூதுசென்ற படலம்.

கேளாய் பாரத்துவாச! அதுபோது, கோலப்பிரான் பிரமனை நினைத்தான். அயன் வந்து வணங்கிக் கையாத்து எதிரே நிற்க, நோக்கிப், பிள்ளாய்! காத்தியாயன ருஷி பெற்ற கமலவல்லியின் மனவூக்கத்தை எவர்க்கும் உணர்த்துவான், நீ தூது போ என்று தொன்முதல் ஏவ, பிரமன், அன்னமாய் உருக்கொண்டு, காத்தியாயனமுனி பர்ணசாலைக்கண் வந்து, முனிவனை விளித்துத்

தாபத! உனது புதல்வி வருந்தக் காரணம் என்னென்ன, முனி, நிகழ்ந்த யாவுஞ் சொற்றலும், அன்ன வடிவத்து அயன், காத்தியாயனித்தாயை நோக்கி, அம்மே! நன்மை பயக்கும் என் சொல்லைக் கேள்: நான் ஒரு பறவை என்று எண்ணாதே. சத்தியமான இச் சகத்தைப் படைத்தேன் நானே. நால்வேதமுங் கற்ற நாவினேன். தற்பரன் உந்தித்தாமரையில் உதித்தேன். முக்காலமும் உணர்ந்துரைக்க வல்லேன். தாயே! உன்னைத் தன் மோகவலைப்படுத்தி, முன்னின்று மறைந்த அம்மூர்த்தியின், மாமாயஞ் சொல்லத், தேவரானும் முனிவரானும் மற்றியாவரானும் ஆகாதுகாண். அன்னாய்! அவன் தனக்கென்று ஒரு தேசம், ஒரு நாடு, ஓரூர், ஒரு மனையும் இல்லாதான். யாண்டும் இருப்பான். இல்லானும் ஆவான். வேதியர் குல விளக்கே! நீ வேட்ட அன்னான், குலகோத்திரம் இல்லாதான். நாற்பாற்குலத்துள் ஓர் தாயுமில்லான். தந்தையுமில்லான். பிறப்பில்லான். சுர நர திரியக்கு ஸ்தாவரமாம் யாவுமாப் பிறப்பான். சகாயாபேக்ஷை யில்லான். சோறென்பது ஒருநாளும் உண்டறியான். நீரும் பருகி யறியான். அணுமல்லான், பெண்ணுமல்லான். அலியுமல்லான். யாவுமாவான். தல்லீ! உலகில் பெண்களெல்லாம், ஊர், மனை, பொருள், குலம், தாய், தந்தை, சுற்றம், அனைத்துமுள்ள மணவாளனை விரும்புவார்கள். அவ்வொன்றும் இல்லா ஒருவனை வேட்டாயே நீ. அந்த மாமாயன், முகத்தில் இறைப்பொழுது விழித்தார், கொண்ட பெண்டிர், சுற்றம், மக்கள் முகத்தில் என்றும் விழியார். அம்மம்ம! மாலே தரும் அம்மணாளன் மாயவலையுட் சிக்கினையே! ஐயோ! மண்ணை யுண்ட மாயக் கோனை வேட்டாயேல், உண்ண உணவேது? உடுக்க உடையேது? பூணப் பூஷணமேது? மாதாவே! இவை யொன்றுமின்றி, அவனைக் காணுங் காலமெல்லாங் கண்ணுங் கண்ணீருமாகக் கலங்க வேண்டுங்காண். உத்தம பத்தினி! யாவுந் துறந்தா ரிடும் பூவிலை விரும்பி, அன்னார் பத்திவலைப்பட்டு, அவர் தரும் பிச்சைக் கேங்குவான் நீ வேட்ட மாயப்பித்தன். சமுசாரிகள் ஒருநாளும் அவனை விரும்பிச் சாரார். என்ன பயித்தியம் உனக்கு. கட்டழகுள்ள கன்னி! அவன் ஆசையை விடு விடு. சொன்னேன் உண்மையென்று எம்மான் சொருப ரூப குணங்களைச் சிலேடையாக வடித்துச் சொல்லக், காத்தியாயனியம்மை, கேட்டுக் கண்கள் சிவப்ப வெகுண்டு, அன்னமே! நீக்கமில்லாப் பரஞ்சோதியை நிந்தைகூறினாய், நின்றலையை யறுப்பதே சருமமாயினும், நீ, அருமறைக்குல அன்ன

மாகலால், நின் பிழையெல்லாம் பொறுத்து வாளாவிடுத்தேன். எனது குலமறைக் கொழுந்தின் கலியாணகுணங்களைக் குற்றமாகக் குழறினாய். இனி என்முன் இறைப்பொழுதும் நீ, நிற்கத்தகாய். அப்பாற் போ, என முனிந்து, எழுந்து, பர்ணசாலைக்குட்புகுதலும், அதுபோது, அமல வராகரூபத்தழகன், ஆங்கு மறைந்திருந்து, அம்மையின் நானக்கருங்குழலை களிர்மலர்க்கையாற் பற்ற, அகம்புகு மாய்ச்சி, திரும்பி, தன் காதல் மணவாளனைக் கண்டு, புன்முறுவல் பூத்து, நாணத்தொடு முகங்கோட்டி உள்ளேபுகப், பரமன், வாயிற்படி நின்று, காத்தியாயனிதேவி கைம்மலர் பற்றினான்.

---

## திருக்கலியாணப் படலம்.

கேளாய் முனிவர! மதனனும் வெள்கும் அழகுருவுடன் திருவடிமுதல் திருவடியீறாக அணிந்துள்ள நவமணிகளிழைத்த செம்பொன்னாலாய, ஆர, கேயூர, மகுட, குண்டல, கிண்கிணி, கங்கண, வீரசங்கிலி தொடக்கத்த பலவித திவ்விய பூஷணங்கள் திகழ, இடையிற் பீதாம்பரம் இலங்க, அஸ்தங்களில் ஐம்படைகள் துலங்கப் புன்னகை காட்டிக், கருணைமழை கொட்டுந் திருக்கண்களால் அம்மை திருவுருவத்தை மாறாது நோக்கிக்கொண்டு, பர்ணசாலை வாயிற்படிக்கண் வந்து நிற்கும் பூவராகப் பரம்பொருளைக் காத்தியாயனமுனிவன் கண்டு, அளவறுமானந்தங் கொண்டு, ஆடினான். அங்குமிங்கும் ஓடினான். உய்ந்தேன் உய்ந்தேன் என்று பாடினான். ஆட்கொளப்பனே! என்று அழுதான். அடியிணைகளில் வீழ்ந்து தொழுதான். என் பொற்கொடியைத் திருமணம் புணர்ந்தருள்க என்று போற்றினான். ஈரெட்டுபசாரங்கள் ஆற்றினனாக, முகத்தை வணக்கி, உடையைத் தொடைநடு விடுக்கி, இடக்கையாத்து வலக்கரத்தால் வாய்பொத்தி, முன்னிற்ப, எம்பிரான், முனிவ! நீயும் நின் செல்வப்புதல்வியுஞ் செய்த தவத்தை மெச்சி, இன்றே இத்திருவைத் திருமணம் புணர வந்தேன் என்று, பிரமனையும், சிவனையும், மற்றுந் தேவரையும், முனிவரையும் நினைத்தலும், அன்னோர், யாவரும் வந்து வணங்கி, நிற்ப, ஐயன், பிரமனை நோக்கிக், குழந்தாய்! இத்தேவர்கள், ஆவன செய்ய, நீ புரோகிதனாக இருந்து, நமது திருமணவினை நடத்து என்ன, நான்முகன், தன்னி

யனேன் என்று, ஆங்கு அம் மணவினைக்கு வேண்டும் உபகரணங்களெல்லாம் வந்து நிறைவான் நினைவிட்டு, மகிழ்ந்து, கலியாண, கயிங்கரியங்களில் ஒருப்பட்டு, ஆவன செய்தான். ஏகாதசவுருத்திரர், துவாதசாதித்தர், அஷ்டதிக்குப்பாலகர், அஷ்டவசுக்கள், ஏழுமருத்தேவர், தேவேந்திரன், தேவசேனாபதியான கந்தவேள், ஏனைத்தேவர்கள், எல்லாருந் தத்தம் பத்தினிகளொடும் போந்து, தாசோக விதிப்படி, மாணிக்கக் காவணமிட்டுத் திருக்கலியாண நவரத்தின மண்டபங் கோடித்துப், பலவகைச் செம்பொன் மாடகூடச் சாலைகள் சமைத்துத் தொண்டுகள் செய்தார்கள். சித்தர்கள் வந்து நிலவினார்கள். முனிவர்கள் மொய்த்து வாழ்த்தினார்கள். அதுபோது சரஸ்வதியும், பார்வதியும், புலோமசையும், அம்மையைத் தொட அஞ்சி, அஞ்சலியுடன், அருகில் நின்று சோபனம் பாட, சூத்திரவதி முதலான சூரிபத்தினிகள்,, கைலாகு கொடுத்து, மங்கலச் சங்குகள் ஆர்ப்பரிப்பத், துந்துபி, பேரி முதலிய பல வாச்சியங்கள் துவைப்ப, அம்புஜவல்லித்தாயை எழுந்தருளச்செய்து, திருமஞ்சனமாட்டி, பொன்னுடை யுடுத்தி, திருக்குழலிற் கற்பக மலர்கள் சூட்டி, அழகுக்கழகுசெய்வபோல், அம்மைக்கு, அடிமுதல் முடிகாறும் திவ்விய ரத்தின பூஷணங்களைப் பூட்டி அலங்கரித்து, நலங்கெல்லாமிட்டு, திருக்கலியாண மண்டபத்தில், வைபவத்துடன் சேர்ப்ப, அம்புஜவல்லியம்மை, அணிமணியாதனத்து ஏறி வீற்றிருந்தாள். ஏனத்துருவிறைவனும், தேவர்கள் ஏவல் செய்யத் திருமஞ்சனமாடி, திருப்பீதாம்பர முடுத்து, கலவை பூசி, நறுமலர் சூடி, ஆர கேயூர குண்டலங்கள் முதலாம் பூஷணங்கள் அணிந்து, வானவரெவருந் தொழுது வாழ்த்த, சித்தர்கள் பல்லாண்டு பாட, மணமண்டபம் எய்தி, ஆதனத்தில் எழுந்தருளினான். பிரமனும் புரோகிதன், திருமணவினை தொடங்கி, அப்பனுக்கும் அம்மைக்கும் காப்பிட்டு, வேதவிதிப்படி அனலோம்பி, சடங்கெல்லாந் தவறுதியற்ற, தேவதுந்துபி யார்ப்ப, அரம்பையர்கள் நிருத்தமாட, வாணி பவானி அயிராணிகள் சோபனம் பாட, ஐயன், உலகீன்றவம்மை திருக்கழுத்தில் மும்முடியிட்டுத் திருமாங்கலிய தாரணஞ் செய்து, மாலை மாற்றிப், பொறியிறைத்துப், பாணிக்கிரகணஞ் செய்து, தீவலம்வந்து, அம்மி மிதித்து, மற்றும் செய்வன செய்து, அம்மையும் அப்பனுஞ் சிறப்புடன் எழுந்தருளியிருத்தலும், தேவமாதர் மங்கலம்பாட, தேவரும் முனிவரும் பூவிறைத்துப், பொற்

சுண்ணமெறிந்து, நான்மறை நவின்று, ஈரெட்டுபசாரங்களியற்றி, ஏத்தித்துதித்து, அறுசுவை திவ்வியான்ன திவ்வியோகரை பக்ஷணங்கள், ஐயற்கும் அன்னைக்கு மூட்டி, சேஷமான தீர்த்தப்பிரசாதங்கள் உட்கொண்டு, நறுங்கலவை பூசி, நளிர்மலர் சூடி, அடைகாய் நுகர்ந்து, யாவரும் எதிரே நின்று, ஏனமாய ஞானப்பிரானை நோக்கி, எமதப்பனே! நீ, இக்காத்தியாயன தீர்த்தக்கரையில், வேதநாராயணன் என்னும் பெயர்கொண்டு, கமலவல்லித்தாயோடு கலந்து, அனந்த கொத்துப் பரிசனங்களுடன், பின்னுனர் வணங்கும் பெற்றிசேர் அருச்சையாய் அமர்ந்து, அருள்செய் என்று இரப்ப, அமலன், அவ்வாறே, வரந்தந்து அருள்புரிந்தான். தேவரும் முனிவரும் விடைபெற்றுத் தத்தம் இருப்பிடஞ் சென்றார். காத்தியாயன முனிவன், அப்போது, மரணம், மூப்பு முதலிய போக்கும் பேரொளி பெற்றதும், சூரியனால் முன்பு தனக்குத் தரப்பட்டதுமான, வலயமென்னும் பெயரிய, மாமணிகள் குயிற்றிய செம்பொன் பூஷணமொன்று, தான்பெற்ற அம்புஜவல்லித்தாய்க்குக் கொடுத்தான். வலயமென்னும் பூண்பெற்று அணிந்துகந்த மாதேவி அவதரித்த, அவ்வூர்க்கு வலயமாதேவி என்று பெயர் ஆயது. பின்னர் அம்முனிவன் தனது புஷ்கரணிக்கு வாயுதிக்கில் மணிப்பொன்னுற் கோயில் அமைத்து அதில் வேதநாராயணப் பெயர் அப்பனையும்கமலவல்லித் தாயையும், பரிசன பரிவாரங்களுடன் ஸ்தாபித்து, பாஞ்சராத்திர நியமப்படி ஆராதனை புரிந்து, சருவோற்சவங்களையுஞ் செய்து வாழ்ந்திருந்தான் என்று பரத்துவாசமுனிக்கு ஆங்கீரச முனி கூறியவாறு நைமிசாரணிய முனிவர்க்குச் சூதபுராணிகர் புகன்றனர்.

முதலாவது மூர்த்திமான்மிய•காண்டம் முற்றிற்று.

ஸ்ரீமதேவரவராய பரமதயாகுரவேநம:

ஸ்ரீதேவதேவ ஸ்ரீபூவராக பரப்ரஹ்மணேநம:



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

இரண்டாவது

# க்ஷேத்திர மான்மிய காண்டம்.

## ஆலயச் சிறப்புப் படலம்.

---

வேதவியாசபகவான் அருள்பெற்ற சூதமாமுனிவர் நைமிசாரணிய ருஷிகளை நோக்கிப் பின்னும் கூறுமாறு: வேத நாவர்காள்! முன்னாள் மரீசிமுனிவன், வேதசொரூபனும் கருடபகவானை வணங்கி, முன்னின்று, வாய்பொத்தி, தேவ! முற்றுமுணர்ந்தாரில் நின்னைப்பா ரார்? உனது மாணாக்கனும் எனது சங்கை யாவும் மாற்றி ஆட்கொண்டருள்க; பூவுலகின்கண் நிலவும் மூர்த்தி தீர்த்த க்ஷேத்திரங்களுள் முந்திச் சிறந்தது எது? எனக்கடாவ, அஞ்சிறைப்புள்ளரையனார், அகமகிழ்ந்து, விடைதருவா ராயினார். மரீசி! சருவஜகத்காரணனை, அரியாலும், அடியராலுமாய சுயம்பு, தெய்வதம், சித்தசம், ஆர்ஷம், மானுஷம் என்னும் ஐந்துவகை க்ஷேத்திரங்களுள் நூற்றெட்டுச் சிறந்தனவாகும். அவற்றுள், ஆதிக்கமுற்று உலகுக்கெல்லாந் திலகமாத்திகழ்கின்றது ஒன்று. அது ஆனந்தபவன க்ஷேத்திரமென்று அறிஞரால் கொண்டாடப்பட்டுளது. சீமுட்டமென்னுந் திவ்விய நாமத்தது. ஆதியிரணியாக்கனையும், திதிபெற்ற இரணியாக்கனையும் தொலைத்துத் தராதலத்தை உத்தரிப்பித்த, சாமி வராகநயினார் எழுந்தருளியுள்ள அத்தலத்தின் வீறு கூற, எவர் தரமாகும்? நீ, என்னப்பனுக்கு அப்பனாதலின் அன்புடன் சொல்வேன் கேள்: மாதவ! அந்நாள் மூலப்பிருகிருதியில், சிறைகள் முறிந்த பறவைகள் போல், கரண களேபரங்களின்றி உருமாய்ந்து உறங்கும் உயிர்களைக் கடாக்ஷித்து, அருள்சேராதிபகவன், இவ்வண்டத்தைப் படைத்து, அதனுள் தனது உந்திப்பூவிடைப் பிரமனைப் படைப்ப, நான்முகன், மண் விண் எங்கும் நோக்கி, ஒன்றுங் காணாது உட்கி, ஓவென் றலறி அழுங்காலத்து, அப்பரஞ்சுடர்ப் பகவான், அயன் காண நின்று, குழந்தாய்! மாயையின் உறங்கும் ஆன்மாக்களுக்குத் தனு கரண புவன போகங்கள் அளிப்பான் உன்னைப் படைத்தேன். நீ படைப்புத்தொழில் புரிவாய் என்று விஞ்சை தந்ததும், இப்பதியின்கண்ணேயாம். வேதிய! அத்திசைமுகன், அயக்கிரீவதேவன் மாட்டு அனந்தமான

வேதங்களோதி, மச்சமாய மாதவன்பால் இலக்கணங்களும் சத கோடி பிரவிஸ்தரமான இராமாயணமும் படித்து, சிம்சுமாரச் சிபதியிடம் சோதிடங் கற்று, சங்கர்ஷணக்கடவுள் வயின் வைதிக கருமசாஸ்திரங்கள் வாசித்துப், பிரத்தியும்னப்பிரானிடம், காலவித்தை, ஆராதன வித்தை தெளிந்து, அனிருத்தப்பெருமான் மாட்டு அத்தியாத்துமவித்தை அறிந்து, வியூக வாசுதேவன்பால், யோகவித்தை, ஞானபத்திவித்தை யுணர்ந்து, பின்பு பீதகவாடைப் பெருமானை இதயப்போதிகண் வைத்து, வேதாந்த வித்தையால் துதித்தலும், ஜகந்நாதன் உவந்து, மைந்த! உனது ஒருநாட்போதை எட்டுக்காலமாக்கி, அப்பகற்கண், எனது திருவரங்கம், சீவராதம், திருவேங்கடம், பதரிகாசிரமம், சாளக்கிராமம், அகோபிலம், ஜகந்நாதம், தோதாத்திரி என்று எட்டாகுஞ் சுயம்பு விமானங்களை அவ்வெட்டுக் காலங்களினும் ஏத்தித் தொழுவாய் நீ என்று மூர்த்தி தீர்த்த க்ஷேத்திரங்களை அடைவே காட்டி, அப்ப! எத்தனையூழிகள் பேரினும் எனது இச்சையிலாய இவ்வெட்டுச் சுயம்புவிமானங்களுக்கு அழிவில்லை. பிள்ளாய்! இச்சுயம்புவிமானங்கள் பகுதிகடந்த, நித்தர் முத்தர் பணிவதெட்டு. பகுதிகடவா விகுதியுள்ளோர், தரிசித்து, விதிகடக்க விளங்குமெட்டு. ஆக ஈரெட்டு விமானங்களுங் காண்பாய் நீ என்று காட்டி, இரணியசருப்ப! இவ்விருவகைச் சுயம்பு விமானங்களுள் பிராகிருத விமானங்கள் எட்டினையும், உனது உலகின்கண் சிரகால மிட்டேத்திப், பின் பூவிலுயர்ந்த நாவலந்தீவில் பதிட்டைசெய்து, பலிசெய்யக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருளி, மின்னென மறைந்தான். அப்பிராகிருத சுயம்பு விக்கிரகங்கள் எட்டும் மாயைகடந்த சிமோன்கட்கன்றி இருள் தரு மாஞாலத்தார்க்கு எவ்வாற்றானு மிலங்கா. ஏனைய பிராகிருத சுயம்பு விக்கிரகங்கள் எட்டையும் எம்பிரான் ஆணையின்படி, பிரமன் தன்னுலகினில் வைத்தேத்திப், பின்னர் இவ்வுலகினில் விளங்கப் பதிட்டைசெய்தான். மரீசியே! அவற்றுள், காவேரியாற்றுக்கு வடக்கு, கருடநதிக்குத் தெற்கு, கீழ்க்கடலுக்கு மேற்கு, ருஷிவந்தியத்துக்குக் கிழக்காய இவ்வெல்லைக்குள், ஐந்து யோசனை அகன்று, ஆயிரத்தெட்டுத் தீர்த்தங்களார்ந்து நிலவுமது ஆனந்தபவனமாகும். ஆங்கு சராகமலரோன் வராகவிமானத்தை மேற்கு முகமாக ஸ்தாபித்தான். மூன்று வியாகிருதிகள் மூன்று பிராகாரங்களாகவும், வேதச்சுருக்கான பிரணவமே சிரமாகவும், காயத்திரிமனு, ஏனைமந்திரங்கள், நாசி தோள்கள் மார்

பாகவும், யோகவருக்கம் இருப்புகளாகவும், புருஷசூக்த ஸ்ரீசூக்த ஸ்மிருதிதிசாச புராணங்களாய சாஸ்திரங்கள், மகாமண்டபம் வசந்தமண்டபம், அலங்காரமண்டபம், சயனமண்டபம், வாகன மண்டபம், நூற்றுக்கால்மண்டபம், ஆயிரக்கால்மண்டபம், ஆதியா ய பலவித மண்டபங்களாகவும், மூலப்பிரகிருதி பலிபீடமாகவும், ஏனைத் தத்துவங்கள் ஆவயின் காவல்செய்யும் மூர்த்திகளாகவும், நான்கு வேதங்கள் நான்கு கோபுரங்களாகவுஞ் சமைத்தான். விமானத்துக்கு வடக்கே சேனைமுதலியார் திருக்கோயிலமைத்தா ன். அக்கினிதிக்கில் தீர்த்தக்கிணறும் திருமடைப்பள்ளியுஞ் செ ய்தான். பரிஜன பரிவாரங்களை முறைப்படி ஸ்தாபித்தான். இந்தி ரன் முதலாந் தேவரை எட்டுத்திக்கினுங் காவலாற்றினன். எண் டோள் பகவதி என்னுஞ் சத்தியை இராப்பகல் இமைகொட்டா மற் காவல்செய்ய இருத்தினன். காலைப்பூசைக்கு வெள்ளாற்றின் நீர்த்த மிட்டான். திருமஞ்சனத்துக்கு நித்திய புஷ்கரணியின் தீர் த்தம் வகுத்தான். பாஞ்சராத்திர விதிப்படி சச்சிதானந்த பர ஞ்சோதி விக்கிரகத்து அழகிய வராகவுருவப்பனை அம்புஜவல்லித் தாயை நடுவே பதிட்டைசெய்தான். சனகன், அத்திரி, பிருகு, கர்த்தமன், தக்ஷன், வசிஷ்டன், புலஸ்தியன் முதலாம் புத்திரர், திக்குப்பாலகர், மற்றைத்தேவர், முனிவர் துள்ளித்துள்ளி ஆனந்த க்கூத்தாடித் தொழுதேத்தத் திருவாராதனஞ் செய்தான். அப் பன் அருணைக்கமுதம் பருகினன். நெக்குருகினன். தண்டென விழுந்தான். எழுந்தான். இருகை கூப்பித் தொழுதான். அழுதா ன். மெய்ம்மறந்து சாம்பினன். தேம்பினன். இவ்வாறு பத்தி சிரத்தையோடு, கண்கணீர்சோர ஏத்தியேத்திப் பரவசமுற்றுக் கீழே விழுந்து புரளும் பங்கயனை எனத்தெம்பிரான் எடுத்தணைத் து, மைந்த! உன் இஷ்டங் கேள் என்ன, அவனும், நீ, இப்பதிக்கண் ஊழியூழிதொறும் என் தாயுடன் எழுந்தருளியிருந்து, உலகோர் விருப்பங்களெல்லாம் அளித்து, ஒளிர்தரும் வரந் தருவாய் என்ன, தம்பிரான் ஓமென்று கருணைசெய்தான். அனந்தரம் உந்திபூத் தோன், ஸ்ரீவராகசாமிக்குப் பிரமோற்சவம் புரிவானெண்ணி, மா சிமாதம் பரணிநாளில், பாஞ்சராத்திர விதிப்படி துவஜாரோகண ஞ் செய்து, ஏழா நாள் திருத்தேருற்சவமும் மகநாட் பௌர் ணமியில் கீழ்க்கடற் றீர்த்தோற்சவமும் புரிந்து, அவபிருதம் மு ற்றி, அவரோகணமுமாற்றி, ஆனந்தக்கடலுள் அழுந்தி, ஆராதி த்துவந்தான்.

---

# துருமராசன் சுவர்க்கம்புகுந்த படலம்.

கேளாய், மரிசிமுனிவ! ஆதி சுவாயம்பு மனுவந்தரத்தில், அம்மனுமரபில் உதித்தானாய், தருமனென்று ஒரு அரசன் இருந்தான். அன்னான், தானம், தவம், தருமம், புகழ், நல்லொழுக்கங்களிற் சிறந்தான், வேதம் முதலிய பன்னான்கு வித்தைக்கடலைக் கடந்தான். அஸ்திர சஸ்திர வித்தையிற் கைதேர்ந்தான். சாதுசங்கந் தணவாதான். சதுரங்கசேனை வெள்ளத்தான். உலகெல்லாம் ஒரு சோற்கீழ் ஒடுக்கி, மனுநகரத்திருந்து, அரசு செலுத்திவரும் இவ்வரசன், அசுவமேதந் தொடங்கி, அனைவரும் புகழக் குறைவற ஆற்றி, அகில உலகுஞ் சென்றுலாவும் ஆற்றல் மிக்கானாய் வாழுங்காலத்து, ஒருநாள் சுவர்க்கலோகஞ் சென்று, ஆங்கு முப்பத்துமுக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் மகருஷிகளும் வாழ்த்த, அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி முதலிய அமரமாதர் ஆட, தும்புருநாரதர் இசைபாட, ஐந்தருக்களும் வேட்கையீந்து அடிதொழ, சுதர்மமென்னுஞ் சபைக்கண் திவ்விய சிங்காதனத்தில் தேவேந்திரன் வீற்றிருக்கக் கண்டு, சாலவும் வியந்து, அருகிற் போய் அடிபணிந்து, ஏத்தி, எதிரே நின்றான். தேவராசன் கண்டும், எதிரே நிற்கும் மன்னனை, வா என்று ஓர் வார்த்தை சொன்னானல்லன். இந்த ஆசனத்தில் இரு என்றும் இயம்பினானல்லன். நீ யார்? எந்த வூர்? என்று கேட்டானுமல்லன். செல்வச்செருக்கினான் வாளாவிருப்பத் தருமன் சற்று நேரம் நின்று, மிக்க நாணங் கொண்டு, மனம் பதைபதைப்ப அவ்விடம் விட்டு அகன்று, தன் நகரஞ் சென்று, இரவெல்லாம் உறக்கமின்றித், தன் மானம் போயதும் சசிபதி இறுமாப்பும் எண்ணியெண்ணி ஏங்கிச், செங்கண்மால் மார்பிற்சேர், சிதேவி, தான்றரும் அவ்விந்திரன் செல்வமன்றோ நம்மைச் சீர்குலைத்தது. வேத சிரம் வாழ் சீதரனை நோக்கித் தவஞ்செய்து, இந்திரன் அலக்கண்பட்டு, மானங்கெட்டு, முதுகிடப்பாற்றி அவன் செல்வமனைத்தும் வௌவி இந்திராதிபத்தியத்தையும் பெறக்கடவோம் என்று உள்ளம் மதித்து, விடிந்தவாறே, மந்திரிமுதலானாரை விளித்து, உள்ளக் கருத்தோதி, தன் தலைமகனுக்கு முடிசூட்டிக், காட்டின் கண் வந்து, ஊண் ஒழித்து, புலனைக் காவலில் வைத்து, பொறிக்கதவடைத்து, உலகெலாம் உண்டுமிழ்ந்தருள் ஒருபெருங்கடவுளை உள்ளத்திட்டு,

யோகமே வரித்து, துவாதசாக்ஷர திருமந்திரத்தை ஜபித்து மூன்றுண்டுகள் சமாதியில் இருந்தான், அப்போது, ஆகாயத்தில் அசரீரி, அரச! நீ இப்போதே, சீமுட்டமென்னுந் திருப்பதியேகி நித்தியபுஷ்கரணியிற் குடைந்து, பூவராகனைக் கருதித் தவமிழைத்தாயேல், நின் கருத்து முற்றுமெனக், கேட்ட நிருபன், மகிழ்ந்து, காடுகள், மலைகள், நதி நதங்களெல்லாங் கடந்து, சீமுட்டத்தலத்தைச் சார்ந்து, கோலவராகப்பெருமான் கோயிற் கோபுரநயினுர்களைக் கண்டு, தண்டமாகச் சேவித்து, நகரை வலங்கொண்டு, நித்திய புஷ்கரணியில் நீராடி, திருமட்புண்டரந் தரித்து, பூப்பிராட்டி பொன்னங்கோயிலைச் சேர்ந்து, பாபநாசன தீர்த்தக் குளத்துக்குக் கீழ்பால் பொறிபுலன்களை அவித்துப் பூவராகனை இதயம் வைத்துத் தவத்தில் அமர்ந்தான். வெயிற்காலத்தில் ஆடையின்றிப், பஞ்சாக்கினியின் நடுவே நின்றும், மழைக்காலத்தில் குளிர்ந்த நீர்க்குளத்தில் நின்றும், இவனைப்போல் தவஞ்செய்தார் இன்றென்று எவரும் வியப்ப, அருந்தவம் புரிந்தான். அண்டமாகிய குகையிடை அகிலத்தையடைத்த, ஆதிவராகனை உள்ளத்தமைத்து, ஆகண்டலன் பதத்தை அவாவிச் செய்யும் அவ்வரசன் அருந்தவத்தினின்று, பெருந்தணல் எழுந்து, அண்டருலகங் கொளுத்தவே, இமையோரெல்லாம் இந்திரன்பால் முறையிட, இந்திரன், அத்தவ மழிக்க எண்ணி, அரம்பையர் முதலானுரை ஏவினுன். நிருபன் சற்றுஞ் சலியா நிலையிலிருப்ப, ஆகண்டலன், தான் செய்த தந்திரங்கள் பலவும் அவலமாகக் கண்டு, இன்னும் இறைப்பொழுது இவன் தவங்கெடாதாயின், உலகெலாம் எரிந்துபோம் ஆகலின், இவன் தலையை அறுப்பதே கருமமென்றெண்ணிச் சீறிச்சினந்து, வச்சிரப்படையை விடுத்தான், அரசன் தலையை அறுக்கவரும் அப்படைமேல், அச்சுதவராகன், திருவாழியை ஏவ, தீயிற்பொலிகின்ற செஞ்சுடர்ச் சக்கரத்தாழ்வான், ஆயிரங் கிரணங்களைப் பரப்பி, உலகெலாஞ் சுழன்றோட எழுந்து வைரப்படையின் வீறுகெடுத்து, வானவர்மேல் எதிர்த்து வருதலும், இந்திரன், நடுநடுங்கி, ஏதேது? இனி நாம் பிழைப்பதில்லை, செய்வதென்னென்று ஓடினுன், ஐராவதமும் பிளிறிட்டோடியது. மற்றைத் திக்குப்பாலகர் எல்லாரும் மாழாந்தோடினுர்கள். தேவசேனுபதியான கந்தனும் மயிலேறிக் கடுகியோடினுன், ஈமத்தாடியும் எருதேறி ஓடினுன். இவ்வாறு, சிவன், இந்திரன், முருகன் முதலாந் தேவரெல்லாந் திடுக்கிட்டோட, எம்மான் வடிவார் சோதி வலத்துறை

யுஞ் செஞ்சுடர்த் திகிரிப்படைத்தேவன், எங்கேகினும் விடாதெ ரிப்பன் இவரை என்று, கூடவே தொடரக், காப்பாரார் இவ்விட த்தென்று கலங்கிக், கைலாசனுதி தேவர் கமலாசனன் அடியில் போய் விழுந்து, அபயம் அபயம் என்று கதறத், திசைமுகனும் அஞ்சி, அமரரோடு திருப்பாற்கடல் சென்று, தேவதேவ! சிறி யார் செய்த பிழைபொறுத்துத் திருவருள்செய்க என்று சரணம் புக, அப்பன், அருள்சுரந்து, அஞ்சேன்மின், திருவாழியாழ்வான் உம்மைச் சிலுகு செய்யான். அபயந் தந்தேன் என்னத், தேவர் கள் திருவாழியிற் றப்பிச், சீபதியைப் போற்றித் தம்மூர் சேர்ந்து வாழ்ந்தார்கள்.

---

## துருமன் வேள்விசெய்த படலம்.

கேளாய் முனிவர! அருந்தவமுனுற்றுமரசன், ஐயன் எழா க்குறை யாதோ? என்று அஞரெய்தி, பாதாளத்தளவும் ஓர் பள்ளம் வெட்டி, அதிற் செங்கனல் கொட்டி, வேள்வி செய்யத் தொடங் கிப் பலபகல் பேணியாற்றியும், அப்பன் எழாஞக, அரசன், தன் உடம்பின் தசையைக் கொய்து கொய்து, தணல்முகத்தில் சமித் தாக எரித்தான். தனது இரத்தத்தை அள்ளி நெய்யாகச் சொரி ந்தான். இனி தன் கழுத்தை அறுத்துத் தலையைக் கனலிடை இடுவதே கடைப்பிடியென மதித்துக், கையில் வாளை உருவினுன். அப்போது ஞானவராகப்பெருமான், முன்னின்று, மன்னனது வா ட்கையைப் பிடித்துக், கருணையூற்றும் மலர்க்கண்களால், ஊன் குறைந்த உடலை நோக்கி நோக்கி உருகி, உவந்து, நிமலப் பூங்கை களால் நீவுதலும், ஊனும் இரத்தமும் ஓங்கி வளர்ந்து, முன்னுரு ப்பொலியச் செழிப்ப, அரசன் கண்டு, காதலேறக், கண்களில் நீர் சோரப், புவியில் விழுந்தான். எழுந்தான். அற்புதக்காட்சியைக் கண்டு சண்டு கரைந்தான். நாயினுங் கடையேனை ஆட்கொள்ள வந்த நாதனே! என்ருன். பெற்றேன் பெரும்பேறு எனத் துள்ளினு ன். ஆயிர நாமங்களைச் சொல்லி ஆடினுன். பல்லாண்டு பல்லாண் டென்று பாடினுன். இவ்வண்ணந் தோத்திரம் புரிந்து, உருகுந் துருமனை நோக்கி, அப்பன், நீ செய் தவத்தால் உவந்தேன். உன் நினைவெல்லாம் அளிக்க நினைந்தேன். மன்ன! என்னைத் தாமத யாகத்திற் களிக்குஞ் சழக்குத்தேவரின் எண்ணி, நீ புரி, தவவேள்

வித் தீயில், உன்னுடற்றசை அறுத்தெரித்து, இரத்தத்தை யூற்றிப், பூரணாகுதி வழங்கிப் பலியியற்றினாய். ஆகலால், நீ நினைத்த பலமான, இந்திராதிபத்தியத்தை, மேல்வரும் யுகத்திற் பெற்றுத், தேவராஜனாய் வாழ வரந்தந்தேன். அரச! என்னை அசுரயாகத்தால் பலி புரிந்த நீ, பலி என்னும் அசுரனாத் தோன்றி, உன்னைக் கண்டு, உபசாரஞ் செய்யாத உம்பர்கோனான இந்திரன் துயர்க்கடல் மூழ்கி, ஓவா அல்லலுழப்பச் செய்து, அவன் செல்வமனைத்தும் கவர்ந்து, சுகமெய்தி வாழக்கடவாய். அதுபோது, உன் யாகசாலைக்கு எழுந்து, மூன்றடிமண் தானமேற்று, மூவுலகும் அளந்து அவ்விந்திரனுக் கீவன் நான். பின்னர், நீ, தேவேந்திரனாய், நெடுங்காலஞ் சேணுலகத்தை அரசாண்டிருந்து, அவ்வாக்கையைப் போக்கி, அந்தமில் சுகவீடடைவாய் என்று அருளிச்செய்து, மறைந்தருளினான். அருள்பெற்ற தருமராஜன், அகமகிழ்ந்து, தனது நகரஞ்சென்று, அரசரெவருந் தொழ அமர்ந்திருந்தான். மாதவ! அவன்காண், பிரகலாத வுத்தமனது பெருங்குலத்துதித்து, இந்திரனையும் வென்று, தாதா என்று யாவரும் ஏத்த மூவுலகாண்ட மாவலியென்பான் என்று சொல்லி, மேற் கூறலுற்றார்.

---

## ஏமகேசன் வரம்பெற்ற படலம்.



கேளாய் விதிசுத! சீமுட்ட க்ஷேத்திரத்துக்கு வடபால், நீர்வளம் முதலிய செழிப்புள்ள, கரஞ்சி யென்று ஒரு நகரமுண்டு. அந்நகரத்தைத் தருமகோசனென்னும் ஓர் அரசன் நீதி வழுவாது அரசாண்டுவந்தான். அவனுக்குக் களத்திரம் இரண்டுண்டு. மூத்தவட்குச் சீர்த்தரிற் சிறந்த ஏமகேசனென்று ஒரு புத்திரன் உதித்தான். இளையவட்குத் தூர்த்தரிற் சிறந்த தருமகோசனென்று ஒரு புதல்வன் பிறந்தான். அவ்விருவரில், ஏமகேசனென்பான் தானம், தருமம், ஞானம், சாந்தம், நல்லொழுக்கம், பெரியார் கேண்மை, கல்விகேள்விகளிற் சிறந்தான். அவன், வாணாளை வீணிற் போக்காது, சத்துவிசாரசாதுகோட்டியிற் கூடி, வஸ்து விஷ்ணுவென நாடிப், பத்தியிற் பயிலுஞான்று, மதங்கமாமுனி கேண்மை பலித்தலும், நாணாளுந் தத்துவ விசார ஞான நிஷ்டனாய் சாராசார விவேக சதுரனாய், அரி திருவடிக்கே அநன்னிய சேஷபூதனாய்,

அம்முனிவன்மாட்டுத் துவாதசாக்ஷரத் திருமந்திரோபதேசம் பெற்று, மணிமுத்தாநதியின் வடபால் அகக்கரண புறக்கரணங்களை அடக்கி, ஏனத்தொருவனை எதிர்நோக்கி, இருகண்களும் மூக்கின் நுனியிருப்பவாக்கி, தூங்காமற்றூங்கி யோகசமாதியில் இருந்தான். ஓராண்டு கடந்தபின், ஒருநாள் கோலமாதவன், அரசன் சொப்பனத்து எழுந்தருளி, மன்ன! நந் திருவடிகளை மறவாது நண்ணி எண்ணிணையாயின், நீ சித்தியையடைதல் திண்ணம் என்றுரைப்ப, ஏமகேசன், கனவில் கண்ட காட்சியை எண்ணிக் கசிந்துருகித் தன் பாங்கர் வந்த, சுதர்மனென்னுந் தனது புரோகிதனை விளித்து, சொப்பனத்தைச் சொல்லப், புரோகிதன் கேட்டுப் புளகமுற்றுப், புரவல! கனலிக்கடவுள்காண் உன் கனவிற் காட்சிதந்தான். அத்தற்பரன் வாழுந் திருமுட்டத்தலஞ் சென்று, தவம்புரிவாயாயின் எண்ணிய அனைத்தும் எய்தி இகபரசுகமும் பெறுவாய் என்னக், காவலன், சிந்தை மகிழ்ந்து, அங்குநின்று, அந்தணன் சொற்படி திருமுட்டத் திருப்பதியைச் சார்ந்து, நித்திய புஷ்கரணிக்கரையின் அரசமரத்தடியில், நிருவிகற்பச் சமாதிநிலைபெற நிறுத்தி, நீக்கமில் பரஞ்சோதி தாட்டுணைமலரை நெஞ்சினிலிருத்தி, அன்னம் நீர் சருகு மூலம் காற்று இவையொன்றும் அருந்தாது, நிச்சலமாக அருந்தவஞ் செய்தான். மரிசிமுனியே! அத்தவத்துக் குகந்து, பத்துடையடியார்க் கெளியனாய பரமன், திரேதாயுகத்தில், வைகாசிமாதத்தில் பௌர்ணமிநாளில், தேவர்கள், பூமாரிபெய்து துதிவழங்க, தேவதுந்துபி முழங்க, நித்தியர் பல்லாண்டுகூற, நித்தியபுஷ்கரணியின் மேல், ஆகாயத்தில், அரசன் காண எழுந்தருளினான். நிருபன் கண்டு, நிமலானந்த நீத்தத்துள் மூழ்கினான். தண்டமாக வீழ்ந்து சேவித்தான். சச்சிதானந்தத் திருவுருவைப் பாவித்தான். பம்பரம்போற் சுழன்று நட்டமிட்டான். மெய்யர்க்குமெய்யனே! என்று விம்மி அழுதான். விதியிலாப் பொய்யர்க்குப் பொய்யனே! என்று தொழுதான். விதி சிவன் காணு வேதநாயகனே! என்றான். கரஞ்சிரங் கூப்பித் தோத்திரம் புரிந்து போற்றினனாகக் கனிந்துருகுங் காவலனை நோக்கி, அன்ப! உன் வேட்கை என்னென்று விமலன் வினவ, அரசன் கேட்டு, உலகெலாம் அளித்து ஓம்பி அழிக்குந் திருவிளையாட்டுடைய உத்தம! நின் தேனேமலருந் திருவடித்தாமரைகளை இறைப்பொழுதும் மறவாது எண்ணி ஏத்துஞ் சிந்தையும், உன்கோயிலி லிருந்து என்றுங் குடிகுடி ஆட்செய்யுங் குணமும், நாள்நாளும் உனக்குத் திருவா

ராதனம் நடத்தித் தீர்த்தப் பிரசாதம் ஏற்று, அதன்பின், நான் உண்ணும் நலமும், உனது திவ்விய மங்கள விக்கிரக சேவை யொழிய மற்றொன்றிற் செல்லா மனமும், எனக்கு அளித்தருள்வாய் என்றான். அப்பன், புன்னகை பூத்து, மைந்த! உனது அன்பு வலைப்பட்டேன். நீ கேட்டவண்ணமே நினக்கு எய்தத் திருவுள்ளமிட்டேன். நல்லோய்! நீ, என்கண் மறவாத சிந்தையனாய், இன்னுஞ் சிலநாள் இவ்வுலகாண்டு, எண்ணிய வெல்லாம் எய்தி, இன்பநுகர்ந்து, பின்னர், நமது ஈறிலாச் சுகவீடு எய்தி, இன்பத் திருவெள்ளம் படிந்து வாழ்வாயாக. மன்ன! நீ உன் நகரஞ்சென்று நிதம் இங்கு வந்து, என் அடி பணிந்து போமாறு நிகழ்த்துவன் கேள்: அப்ப! உன் நகரத்து ஈசானதிக்கி லிருந்து, இவ்வூரளவும், ஒன்றரை யோசனைக்குக் கீழேவரும் பிலமொன்றுண்டு. அது ஐந்நூறடி அகன்று, ஒன்றரையோசனை நீண்டுள்ளது. காத்தியாயினி பிலமென்று யாவருங் கழறுவார்கள். அது இன்றும் இராநின்றது. அப்பிலத்தின் வழியாக நாளும் வந்து, நம்மையும் பூவின்மிசை நங்கையையும், சேவித்துத் தீர்த்தப்பிரசாதம் பெற்றுச் செல்லக்கடவாய், குழந்தாய்! அந்தப் பிலத்தின் வழிக்கண், ஆரிருள் சூழ்ந்துள்ளது. அவ்விருள் அகலவேண்டுமாயின், அருக்கனிற் பொலியும் இவ்வகளங்க மணியைக் கொண்டு, அணிவாயாக. இது வருணனால் முன் காத்தியாயனிக்கு அளிக்கப்பெற்றது என்று, அகளங்கமணியைத் தொடுத்தருளி, வானின் மின்போல் மறைந்தான். அரசன், ஐடன் அளித்த, அகளங்கப்பெயர் இரத்தினத்தை அணிந்துகொண்டு, ஆனந்த பரவசனாய், நித்தியபுஷ்கரணியில் நீராடித் திருமண் தரித்து, வலம்வந்து, அம்புஜவல்லித் தாயை, பூவராகவப்பனை வணங்கி விடைபெற்றுப் புரோகிதர், அமைச்சர், படைத்தலைவர், கல்வியாளர், யாவரும் எதிர்கொண்டு உபசரிப்ப, மிகச்சிறப்போடு கரஞ்சி என்னுந் தன் நகரஞ்சென்று, வலமாகத் தனதுமணிமாளிகை புகுந்து, பூவராகனை மறவாமல், நித்தமும் பிலத்தின்வழியே போய்ச் சேவித்து வந்து, மனுநெறி தவறாது, அரசாட்சி செய்துகொண்டிருந்தான்.

---

# தருமகோசன் சங்கரனை நினைத்துத் தவஞ்செய்த படலம்.



மரீசிமுனிவ! ஏமகேசன் திருமுட்டத்தெம்பிராற்கு அடியனாய், சித்திபெற்றுத், தேவரும் வேதநாவரும் புகழச் செங்கோல் செலுத்திவருநாள், தருமகோசன் என்பான், வெகுளி, காமம், ஈரிஷை, அநீதி, மோகம், கொலை, களவு, கள், பொய், வஞ்சம், அடங்காமை முதலிய சழக்கெலாந் தழைப்பக் கொண்டு, நேம நிஷ்டைகளை நீக்கி, நீசனாய், பகவத் பாகவத துவேஷியாய், ஏமகேசனாந் தமையனை இகலி, எனக்குரிய பாதிநாடு ஈயென்ன, ஏமகேசன் மறுமாற்றஞ் சொல்லாது, இன்புடன் பாதிநாடு ஈதலும், தருமகோசன், தன் பங்கைப் பெற்று, வெள்ளாற்றங் கரையில் விளங்கும் புவனகிரி என்னும் நகரத்தை, மந்திரி பிரதானிகள் படைத்தலைவர் சூழ, நால்வகைச் சேனைகளோடு முடிசூடி, ஆண்டு அரசு செலுத்திவந்தான். அவன், தீயோர் கேண்மை கொண்டு, தன் தமையன், திருமுட்டத்து அரியை வழிபட்டுச் சித்திபெற்று, பரமபாகவதோத்தமன் என்று தேசமெங்கும் புகழ, அளவில் செல்வந் திகழ வாழ்தல் கண்டு, பொறாமைகொண்டு, பழமலை மேவும் பரசிவத்தை வழிபட்டுப், பங்காளி தலையைத் துணித்து, அவன் பாக்கியமெல்லாங் கவர்ந்து, வாழ்தலே கடைப்பிடி யென்று எண்ணி, மரவுரி தரித்துத், தலைமுதல் கால்வரையில் உடம்பெங்கும் பூதிபூசிச், சிவபத்தனாய், மணிமுத்தா நதியின் தென்பால் வந்து, அரகர, சிவசிவ, சங்கர சம்புவே! என்று ஏத்தி, இந்திரியங்களை அவித்து, சோறு, நீர், இலை, கிழங்கு, ஒன்றுந் துய்க்காது, பார்வதி பங்கனை மனக்கண் பதித்துப் பஞ்சாக்ஷர மந்திரத்தைச் சபித்து, இரண்டு கைகளையும் பூமியில் ஊன்றி, இரண்டு கால்களையும் ஆகாயத்தில் நீட்டித், தலைகீழாகத் தவஞ்செய்தான். தேவரும் பிறருங் கண்டு, இரணியன், இராவணன், வாலி தொடக்கத்தாரும், தவத்தில் இவனுக்கு ஒப்பாகார். அம்மம்ம! என்னதவ மிதுவென்று இறும்பூதெய்த, இரண்டு மாதங்கள் இண்டைச் சடைமுடி ஈசனை மறவாமல் தருமகோசன் தவமியற்றலும், முக்கட்பிரான், உண்மகிழ்ந்து, ஒருநாள் இரவில், திக்கெல்லாம் ஒளி செய்யச், சிவகணங்கள் ஏத்த, எருதேறி வந்து, முன்னின்று, மன்ன! நின் ஒப்பில்லாத் தவத்துக்கு உகந்தேன். என்ன வரம் வேண்டும்? இயம்பு

வாய் என்ன, தருமகோசன், கண்டு, புளகங்கொண்டு, துள்ளினன். கைகூப்பித் தொழுதான். மெய்ம்மறந்து ஆடினன். பாடினன். சந்திரசேகர, சம்போ, சிவசிவ, சங்கர, கங்காதர, நீலகண்ட, அந்திவண்ண, அரவாபரண, பாவைபங்காள, ஈமத்தாடி, அரகர, புரகர, அருள்புரிக என்று ஏத்தித் துதித்தானய், ஐய! எனக்குப் பகையானர் இரிந்து, மாண்டு ஒழியுமாறு, இகலில் வெற்றியும், எவ்வுலகினும் என்னைக் கொல்வார் இலராகவும், பரந்த செல்வமும், பகைவரை வெல்லும் படையும் தந்து பாதுகாத்தருள்க என்று பிரார்த்தித்தலும், ஏற்றுவாகனன், அன்ப! அவ்வண்ணமேயாக வரமளித்தேன் என்று, படையுந் தந்து மறைந்தான். புராரி அருள்பெற்ற புரவலன், தன்னைத் தானே புகழ்ந்து, புவனநாம நகரி வந்து, தவிசேறி மகிழ்ந்திருந்தான்.

---

## விருத்தாசலேசன் வெந்நிட்ட படலம்.



கேளாய் வேதிய! அனந்தரம், தருமகோசன், தன் தமையனது அரியை வணங்குந் தலையை அறுத்துச் செல்வமும் நாடுங் கவர்ந்து, தானே அரசாள எண்ணிச், சேனைகளைப் போர்க்கெழ ஆணையிட்டுப், போர்க்கோலங் கொண்டு, தேரேறி, நால்வகைப் படைகளோடு, இரணபேரிகை முழங்கப், புறப்பட்டுக் கரஞ்சி நகரைச் சூழ்ந்து, ஏமகேசனோடு எதிர்த்து, ஏழுநாட்கள் இராப்பகல் ஓயாமல், அமர் புரிந்து, அரியடியானது, சதுரங்கசேனைகளைத் தாக்கிக் குருதிவெள்ள மோட, நரி காக்கை கழுகுகள் உண்ணப், பிணமலை குவித்துக் கொன்றான். ஏமகேசன், தன் படைகள் தொலையக் கண்டு, ஏங்கி, அத்துஷ்டனை எதிர்த்து, இகல் செய்யும் வலியற்று, இடுக்கணுற்றுப், பிலத்துவாரத்தால், பூவராகப்பெருமான் திருமுன் சென்று, பூவிடந்த பொற்சுடரே! தருமகோசன் சங்கர வரபலத்தால் எனது தானையெல்லாங் கொன்றான். அவனோடு பொர வலியற்று நொந்தேன். அப்ப! நின் சந்நிதிமுன் வந்தேன் என்று அழுதான். பூதர மூர்த்தி, முறுவல் புரிந்து, அரச! அழுங்கேல் நீ. உன்னை எதிர்த்தார் எமபுரஞ் சேர்வார். அஞ்சாதே என்று, தனது தோள்களை இரண்டு பராக்கிரம தேவராக்கி, நீவிர் நம்மடியான் பின் சென்று, இவன் பகைஞரை யெல்லாம் இன்றே கொன்று வருவீராக என்று பகர்ந்தருளலும், செந்

தாமரைக் கண்களும், செம்பொன்னுடையும் கோதண்ட மேந்திய கையும், அருக்கனிற் காந்தம் மணிப்பூண்களும், விதி சிவன் குகன் இந்திரன் வந்து எதிர்ப்பினும், விளையாட்டாக வெல்லும் வீரமும் கதாதரன் சார்ங்கதரன் என்னும் பெயருடைய எம்பிரான் தோள்களாய அவ்விமையோர், ஏமகேசனை நோக்கி, எமது அப்பனுக்கினிய, உன்னை எதிர்த்த கொடியர் எங்கே? காட்டுவாயாக; நொடிப்பொழுதில் நூக்கிக் கொல்வேம் என்று, அகளங்கமாணிக்க மணிந்த அரசன் பின் பிலத்துவாரத்தாற் சென்று, போர்க்களஞ் சேர்ந்து, இறந்து கிடந்த ஏமகேசன் சேனைகளை எழுப்பி, இரைந்து நிற்கத், தருமகோசன் கண்டு, தணவாச் சினங் கொண்டு, சிவன் தருவரத்தாற் செருக்கடைந்து, சார்ங்கக்கர மூர்த்திமேல், தனது படையெலாந் திரண்டு பொர ஏவித், தான் கதாதரமூர்த்தியை எதிர்த்துப் போர்செய்தான். அப்போது கதாதரப்பெருமான் தன்னை எதிர்த்த கண்ணுதலடியானைக் கொன்று கதமாறினான். சார்ங்கக்கரப்பெருமான் தன்னை எதிர்த்த சைனியங்களையெல்லாஞ் சவட்டிக் கோபந்தணிந்தான். விருத்தகிரியீசன் தொண்டனையும், அவனது சேனைகளையும், விளையாட்டிற் கொன்ற வீரதேவர் இருவரும் ஏமகேசனை நோக்கி, மைந்த! நீ, வாகைசூடி, ஒகையோடு வாழக்கடவாய் என்று வாழ்த்திச் சீமுட்டத்தேவன்பாற் சென்றார். விருத்தாசலேசன், தான் தந்த வரமெல்லாம் வீணாய்த், தன்னடியன் விடியதுணர்ந்து, மனம் நொந்து, என் சம்பந்தனே! உன் சாமர்த்தியமெல்லாந் தொலைந்து சாய்ந்தாயோ? அப்பனே! நீ அழிந்தாய் கொல்லோ? சுந்தரமூர்த்தியான தொண்டனே! ஆவி துறந்து சோர்ந்தாயோ? என் மைந்தா! மாணிக்கவாசகனே! நான் தந்த வரங்கள் பாழ்பட்டு மாய்ந்தாயோ? அந்தரத்தாரெல்லாம் இரணியன் இராவணன் கதியானுயென்று அகமகிழ்ந்தார்களோ? என்று, இரங்கி, வெகுண்டு, என் மைந்தனான கந்தனே! வீரபத்திர! சாத்தனே! வடுகா! ஐங்கரனே! விரைந்து வாரீர், வாரீர், நமக்கடியனாய தருமகோசனைக் கொன்ற வராகனை நலிவோம் என்று நவின்று போர்க்கோலம் பூண்டு, பூத, வேதாள, கூஷ்மாண்ட, பிசாச கணங்கள் புடைசூழ்ந்துவரப் போர்க்குப் புறப்பட்டான். முருகன் முதலானுருந் தத்தம் வாகனங்களில் ஏறிச் சூழ்ந்தார்கள். அதுபோது, இரணபேரிகை முழக்குஞ் சிலபேய்கள். பம்பைகொட்டிப் பதைக்கு மொருபேய். தாளந்தட்டு மொருபேய். முழவங்கொட்டி முன்னேயோடு மோர்பேய். குழையூதிக் கொக்கரிக்கு மொரு

பேய். தம்பட்டமடிக்கு மொருபேய். பிணந்தின்னும் பெட்பிற் றுள்ளித்துள்ளிப் பாடும் பலபேய்கள். இவ்வித கோலாகலத்துடன், சிவனும் சிவகணங்களும், இரணகளஞ் சேர்ந்து, இமையோரப்பன் அடியன் என்று எண்ணுமல், ஏமகேசனை எதிர்த்து, இகல் செய்யுங்காலை, திருமுட்டத் தேவாதிதேவன் தேர்ந்து, நம்மாயை, நன்று, நன்று என்று நகைத்து, நந்திமேலிருந்த நக்கன்முன்னர் ஒரு பன்றியுருவாக வந்து, நின்று, நாம் வெகுண்டு எதிர்ப்போமாயின், விளிவான் இவனென்று எண்ணி, விளையாட்டாகத் தனது வெள்ளிய நீண்ட கோட்டினில், மங்கைபாகனை மாட்டுடன் மாயாவண்ணங் கோத்தெடுத்துக் குலுக்கிக்கீழ்த்திசைவிழ எறிந்தான். சிதிகண்டச்சிவன் நந்தியோடே, சித்திரகூடப் பாங்கர் போய் விழுந்து, மொத்துண்டு, நெடுநேரம் மூர்ச்சைபுகுந்து, தெளிந்து, முகிழ்த்த கண்ணைத் திறந்து, சாய்ந்து, எழுந்து, நிமிர்ந்து பார்த்தான். அவ்விடம், முன், காளியான சிவகாமி வழக்குத் தீர்க்கத் தேவாதிதேவன் எழுந்தருளிய தில்லைப்பதியென்று தேர்ந்து, கோயிலுக்குட் புகுந்து, அணிமணியாசனத்திருந்த அம்மான் சந்நிதிமுன் சென்று, பன்னகசயனமும் பரமனடிக்கீழ் தானிடும் பரதமுங் கண்டு, தண்டமாக வீழ்ந்தெழுந்து நின்று, பத்தியோடு பழிச்சினுன்.

இழித்தன னென்னை யானே யெம்பிரா னின்மேன் மோதிப்
பழித்தன னென்னை யானே பங்கய நயன போற்றி
வழுத்தனை யியற்று மென்னை வதைத்திடா தாண்டாய் போற்றி
பிழைத்தன னினிமே னின்மேற் பிழைசோலேன் பேணி
போற்றி.

ஒருவனே யொப்பில் லானே யோதநீ ரூறங்கி முட்டம்
வருசுயம் பாம்வ ராக வரதனே வன்னப் பொன்னுல்
தருசுயம் பாய தில்லைத் தானத்திற் சேவை தந்து
மருவிடு பூவ ராக வத்துவே போற்றி போற்றி.

தில்லையிற் றிகழுஞ் சாமி சீவன்யான் சிவனு யுற்றும்
அல்லலை யடைந்தன் ளேடு மமர்செய்வா னமைந்து விட்டே
வல்லதம் பிதாவைத் தாளான் மதிக்கினு மகவின் பாலே [ன்
கொல்லலின் றதுபோ லுயேன் குப்புற வீழ்ந்தே னுள்வாய்.

அம்பலத் தரசே நாயேன் ஆடெடுத் தாடக் காட்டும்
உம்பலைக் காத்தற் கோடு மொளிர்மலர்ப் பதங்கள் போற்றி
வம்பலர் புண்ட ரீகக மகிழட்டாக் சரசோ பானத்
தெம்பிரான் றகரா தாயத் திறைவபொன் னரங்க போற்றி.

இவ்விதம் பழிச்சி ஏத்தி, அப்ப! என் கரிசெல்லாம் பொறுத்துக் காத்தல் நின்கடன் என்று, தன் கன்னத்திற் புடைத்துக் கைகூப்பிக், கண்ணீர்வார நிற்குங் கண்ணுதலைக் கடாக்ஷித்து, தேவதேவன், கேளாய் விடபத்துவச! நீ, தாமதப்பெருக்கால், செய்த தவறனைத்தும் பொறுத்து, நீ செய், தாண்டவத்தால் தயை செய்ய எண்ணினேன். உனக்கென்ன வேண்டும், இயம்பென்ன, ஈசன் கேட்டுப் பேரருளாள! சிறியேற்கு, நின், திருவடிகளிற் றிறம்பா ஞானமும்; தீவிர பத்தியும், தணவாத் தாண்டவமும் தந்தருள்வாய் என்னலும், தில்லைக் கோவிந்தராச தேவாதிதேவன், அவ்வண்ணமே ஆகுக என்று, புன்னகை புரிந்து, உமைபாக! உனக்கு இன்னும் ஓர் வரந் தர எண்ணினேன். நமது விமானத்துக்கு வாயுதிக்கில், நீ உன் மனைவி மக்களோடு, இனிதேயிருந்து, அங்கு இறப்பார் காதில், பிரமதாரக மந்திரத்தை உபதேசித்து, முத்திப்பேறுறச் செய்வாய், நாகபூஷண! உனக்கு அந்தரியாமியாய், உன்னையன்றி நானிலேன். எனக்குச் சரீரமாய் என்னையன்றி நீயிலை. ஆகலால் உனக்கும் எனக்கும் வேற்றுமை யாண்டுண்டு? நீருள் உப்பும், உப்புள் நீரும் போல், யாருள்ளும் நானுளன்; என்னுள் எவருமுளர். இதை, விமல ஞானவிசிஷ்டரே தேர்வார். உலகெலாங் காணும் ஆன்மாவுக்கும், உள்ளுறையும் யானென பரமான்மாவுக்கும், பேதமுள்ளது எவ்வாற்றுலென்று உணராது, வாளா உன்னையும் என்னையும் பேதமுரைப்பார், உண்மை தேரார் என்றுரைத்தான். சிவன் தன்னியனுனேன் எனத் தாழ்ந்து விடைபெற்று விருத்தாசலத்துக்கேகி வாழ்ந்தான் என்று விளம்பி மேற்கூறுவார்.

---

## பிரமன் வேள்விப் படலம்.

கேளாய் அந்தண! கங்கை, காளிந்தி, சரஸ்வதி ஆகிய மூன்று நதிகளுஞ் சேர்ந்திலங்கும், புண்ணியத் தலமாகிய பிரயாகைக்கண் முன்னொரு காலத்தில், தேவகணங்களும், பரமருஷிகளும், வேதமோம்பும் வித்தகரும் மொய்ப்பச், சதுமுகக்கடவுள் அசுவமேதந் தொடங்கி ஆற்றிவருநாள், தீர்க்கதரிசிகள் யாவரும் கூடி, சாஸ்திரவாதம் செய்துகொண்டிருப்ப, அச்சபை நடுவே சதானந்தமுனிவன் எழுந்து, அறிஞர்காள்! முத்தி பெறுதற்குச் சாதனமான கருமங்கள், நித்தியம், நைமித்திகம், காமியம் என்று

மூன்றுவகைப்படுமென்றே? இம்மூன்றினுள், தீர்த்த யாத்திரை எக்கருமத்தது? அதனாற் பயனென்ன? ஐயமற அருளிச்செய்வீர் என்று வினவத், தம்பிரான் உந்திவந்த சதுமுகன், சதானந்தமுனியை நோக்கி, முனிவ! அம்மூன்றெனுங் கருமத்துள், சமுசாரத்துக்கு இடந்தரலால், காமியகருமம் முமுக்ஷுக்களுக்குத் தியாச்சியமாகும். நித்திய, நைமித்திக கருமங்கள், சமுசாரத்தை மாய்த்து, நிபிடானந்த பதமுந் தரலால், சாதன புத்தியின்றி, முமுக்ஷுக்களுக்குக் கர்த்தவ்வியமாகும். தீர்த்தயாத்திரை இவ்விருவகையினுஞ் சேரும். கோடி யாகங்கள் செய்த பலன் தீர்த்தயாத்திரையிற் கூடும். தீர்த்தயாத்திரையால், கோடி ஜன்மத்தில் போக்கப்படாத பாவகோடிகளெல்லாம் குமைந்துபோம். முமுக்ஷுக்களே, நதி நதமாதி தீர்த்தங்களை நாடி மூழ்குவார். அத்தீர்த்தங்கள் மூன்றரைக்கோடி என்ப, அவற்றுள் கங்காதீர்த்தம் அதிகமாகும். அந்த நதியோடு, மூன்றரைக்கோடி தீர்த்தங்களும் சென்று ஒன்றாகச் சேர்ந்து, நித்தியபுஷ்கரணி என்று நிகழும். அது ஸ்ரீமுஷ்ணக்ஷேத்திரத்தில் உள்ளது. அதைச் சொன்னார், கேட்டார், சென்று குளித்தார், கொண்டார், கண்டார், அவ்வயின் இருந்தார் எவரேனுமாம், அவர், பாவராசிகளெல்லாம், அப்போதே அனல்முகப் பஞ்சாகும். க்ஷேத்திரங்கள் அனைத்தினுஞ் சீமுட்டம் சிரேஷ்டமென்னப்படும். தென்திருப்பதிகளுள், திருமுட்டம் தலையாயது. அதன் கண் ஆவி நீப்போர், இறுவரம்பின், உவணகுரு உபதேசம் பெற்றுப் பிறப்பற்றவ ராவார் என்று சொற்றலும், மகருஷிகள் யாவரும் வியப்புற்று, யாகத்தை முற்றுவித்து, விடைபெற்றுத், தென்றிசை நோக்கிக், காவதம் பல காடுகள், ஆறுகள், மலைகள் கடந்து, வராகக்ஷேத்திரங் கண்டு, வளர் சாலியின் வீழ்ந்து, சீமுட்டங்கண்டோம் கண்டோம், ஜன்ம துக்கம் விண்டோம், விண்டோம் என்று துள்ளி, நித்தியபுஷ்கரணியில் நீராடி, அக்குளக்கரையில், துவாதச ஊர்த்துவபுண்டரங்கள் அணிந்து, திருத்துழாய்மணி, தாமரைமணி, பவித்திரமணிகள் திகழுந் தாழ்வடங்கள் பூண்டு, தமதாரியன் திருவடி நிலைகளைச் சிரந்தாங்கி, திருமந்திரஞ் செபித்து, சிபாததீர்த்தம் உட்கொண்டு, சேவைமுறைப்படி, பூவராகனைச் சேவித்து, தீர்த்தம், சடாரி, திருமாலை, பிரசாதமெல்லாம் என்று, உள்ளங் குளிர்ந்து, திசைமுகன் செப்பிய மான்மியமெல்லாஞ் சிந்தை செய்திருந்தார். அருக்கனும் அஸ்தமித்தான்.

---

## கள்வர் முத்திபெற்ற படலம்.



வேதிய! அப்போது, எம்பிரான் அடியாரை இழித்துக் கூறி ஞர் பாவமொப்ப இருளானது எங்கும் பரந்தது. அவ்விரவில், பொல்லாத கள்வர்கள் புகுந்து, பூவராகன் சேவைக்கு வந்துள்ள முனிவர்கள், நடுங்கப் புகுந்து, பற்றி, அவரிடத்துள்ள பொருள் முழுதுங் கவர்ந்து, அம்மட்டில் விடாமல் அப்புண்ணியரைப் புடைத்துக், குருதியொழுகச் சிதைத்து, அகன்று, காட்டிற் புகுந் தார்கள். வைகறையானவாறே, அத்தலத்து அரசன் உணர்ந்து, துன்புற்று, மந்திரி முதலானரோடு, இருண்ட காட்டுள் சென்று, கள்வரைத் துருவிக் கண்டு, யாத்து, ஈர்த்துக்கொண்டு வந்து, விசாரித்து, அவர்கள் தலைகளைத் துணிக்கத் தண்டனை விதித்தான். கொலையாளர், குழுமி, சண்டாளராகிய, தஸ்கர(திருட)ரைப் போர்க்களங் கொண்டுபோய், கூரிய வாளால், வீசிச், சோரர்தம் ஆவி பறக்கத் தலைகளைக் கொய்து எறிந்தார்கள். அவ்வயின் விக ங்கபதி எழுந்து வீந்திடுந் தீயோர் செவிவழித் திருமனு ஓத, அப் பாதகர் தம் உடலை யொருவி, பன்னிரண்டு சூரியர்கள் ஓர் பகல் உதித்தாற்போல், பரவும் பசுஞ்சுடர்ச் சோதித் திவ்விய தேகம் பெற்று, சருவ லக்ஷண சம்பன்னராய், சுத்தசத்துவத் தூய தேவ ராய், ககனத்தில், இமையோர் வாழ்த்தக், கதிர்மணி விமானங்க ளில் ஏறிக் கரங்களைக் குவித்து, ஏனத்தரு இறைவனருளை, எண் ணி யெண்ணிப், பல்லாண்டு பாடி ஏத்த, முனிவர்கள் நோக்கி, அற்புதம் அற்புதம் ஈது என்று ஆச்சரியமுற்று, கமலாசனன் சொன்ன சீமுட்ட மான்மியத்தைக் கண்கூடாகக் கண்டோம் என் று மகிழ்ந்து கொடிய திருடர்க்கும் சுகபதவி கொடுக்குமென்னி ல், இத்தலமாட்சிமை சொல்லத் தரமோ? என்று நெடும்பொழு து ஏத்தி நிற்ப, அக்கள்வர்கள் சூரியமண்டலத்தைப் பிளவுகொ ண்டு, நந்தாச் சுகவீடு அடைந்தார்கள். சிஷ்டர்களாய முனிவர் கள், சீமுட்டத்திற் பாழிசெய்து, பூவராகனுக்குச் சருவ வித சயி ங்சரியங்களும் இயற்றிப் பலபகல் வாழ்ந்திருந்தார்கள் என்று மரீசிக்குக் கருடபகவான் வழங்கிய காதையைச் சௌனகாதி பரம ருஷிகளுக்குச் சூதபுராணிகர் புகன்று, மேலுங் கூறுவார்.

---

## கந்தருவன் பிரகலாதனுய படலம்.

கேளீர் நேமிவன முனிவீர்! ஆங்கீரசமுனிவன் பரத்துவா சனை நோக்கி அறைந்ததும் சொல்வேன்: ஆங்கிரசன் பாரத்துவாச னை நோக்கி, முனிவர! சீமுட்டப் பெருமைக்குச் சீமையில்லை எனினும், சில செப்புவன் கேள்: முன்னாள் சித்திரரதன் என்னும் ஒரு கந்தருவன், இமயமலைப் பாங்கர் அரசியற்றி வருநாள், அவ னுக்கு மண்ணும் விண்ணும் ஏங்க ஒரு மகன் பிறந்தான். அப்புத ல்வன் சிவனை நோக்கித் தவஞ்செய்து, பல வரமுந் திறமும் பெ ற்றுக், கொடுந் துஷ்டனாய் உலகெலாம் அஞ்சத் தீயொழுக்கத்தில் ஓங்கி வளர்ந்தான். மூவுலகினும் உள்ள பெண்களைக் கவர்ந்து, அவர்களெல்லாருங் கலங்கக் கற்பினை அழித்தான். பிறர் பொரு ளெல்லாங் கொள்ளைகொண்டு பேருலகத்து உயிரை யெல்லாம், வதைத்து மகிழ்ந்தான். அவன் கண்படற்கு அஞ்சி மிருகங்களும் பறவைகளுங் கரந்துறையும். கொலை, களவு, கள், காமம், பொய், வஞ்சகம், ஈரிஷை, கோபம், முதலிய தீக்குணங்களிற் கொழுத் தான். எண்ணிறந்த நகரங்கள், ஊர்கள், மனிதர்கள், விலங்குகள், பறவைகளையெல்லாம் வளைத்து, எரித்து, அக்கினிக்கிரை யூட்டிக் கண்குளிர நோக்கிக் களிப்பான். சங்கரன் தந்த சூலத்தால், வேதியர் தாபதர்தம்மை யெல்லாம், குத்தி மேலே தூக்கிக் கர கரவென்று சுழற்றி எறிவான். தந்தை தாய் பெரியோர் சொல் லெல்லாந் தணந்து காற்கடைகொண்டான். நெடுங்காலம் இவ் வாறு நிதநிதமுந் தீமையே புரிந்து வரும் அந்தக் கொடிய நெடிய மாபாதகன், அரண்மனைக்கு, ஒருநாள் தேவருஷியாகிய நாரதபக வான், நெற்றிமுதற் பன்னிரண்டிடங்களில் பன்னிரண்டு திருமண் புண்டரங்கள் நிலவத், துளசி நளிநாக்ஷமாலைகள் மார்பில் இலங்க, வீணையைக் கரங்கொண்டு எழுந்தருளி, அவன் தனது அரும் பெ ரும் பாவங்களை உன்னி, ஐயோ! இவன் ஆரு நரகுக்கு, ஆளானனே என்று இரங்கி, இவனைத் திருத்தித் திருமகள் கேள்வனுக்கு அடி மையாக்குதல் சீரியதென்று எண்ணிக் கருணைகூர்ந்து, அப்பதக னை நோக்கிக், கேளாய் கந்தருவ! தேடுதற்கரிய, அனந்தகோடி புண்ணியத்தால் பெறுதற்கரிய, தேவ கந்தருவ ஜன்மத்தைப் பெ ற்றும், அவத்தே அருமந்த காலத்தைக் கழித்தாய். உனது வா ணாளெல்லாம் வீணாய், நமன் வாய் விழுந்து, நாசமாங் காலம்

ணுகிற்று. ஆந்தோ! சிவன் அருள் பெற்ற திறல்வலி அரசே! அமுதமுண்டோம் நாம்; நமக்கு அழிவில்லை என்று இறுமாந்துள்ளாய். வீர! நீ, அருந்திய அது அமுதமன்று; கடுநரகிற் கவிழ்க்குங் கள்ளேயாம். வானோர் உனக்கு மருந்து என்று மதுவைத் தந்தார். நீ, இதுகாறும் எள்ளளவேனும் அறஞ்செய்தாயல்லை; பாவமே செய்து பாவியானாய். ஐயோ பாவமே! உனக்கு, அதோகதியில் வீழ்ந்து அழியுங் காலம், அணித்தது. நற்கதி பெறவேண்டுமாயின், நான் சொல்லும், நன்னெறி நாடுவாய் என்று நவின்றருளினார். பரமதயாளுவாகும் பாகவதோத்தமனான நாரதபகவான் கடாக்ஷத்துக்கு இலக்கான கந்தருவன் மருண்மாறித் தான் செய்த, ஈடெடுப்பில்லாப் பாவச்செயல்களை எண்ணி, ஆ வென்று அலறி, தேவமுனி திருவடிகளில் வீழ்ந்து, வெறிதே அருள்செய்ய எழுந்த வீணைப் பெரியோய்! நான் அதோகதி புகாது, அருள் புரிக என்று அழுதான். மாதவர்கோன் கருணை கூர்ந்து, மன்ன! முமுக்ஷுக்களுக்கு உபாசியன், மூவுலகு உண்டுமிழ்ந்த மொய்துழாய் முகுந்தனுவான். அவனே வேதாந்த விழுப்பொருள். பிரணவத்தொளிரும் பெருஞ்சுடர். அண்டகோடிகளெல்லாம் ஆக்கி அளித்து அழிக்கும் ஈசுவரன் அவனே. சிவன் பிரமனுதியர் சீவரேயாவார். உலகோர் செய்யும் பாவங்களை யொழித்து, ஒப்பறும் வீடு அளித்தற்கே, அவன் திவ்வியதேசங்களை உகந்துள்ளான். அந்த க்ஷேத்திரங்களுள் ஸ்ரீமுட்டஞ் சிரமாயது. அனந்தகோடி ஜன்மங்களிற் போக்கப்படாத பாவங்கள் அனைத்தையும் போக்கத் தக்கது. அத்தலத்துக்கு ஏகி, சாமிவராகனைத் தாழ்ந்து போற்றுவாய் என்னின், நின் பாவங்களெல்லாம் பொரிந்து பாறிப்போம், மோக்ஷமும் அடைவாய். அம் முத்தித்தலம், காவேரிக்கு வடக்கும், கருடநதிக்குத் தெற்கும், கீழ்க்கடலுக்கு மேற்குமாய் உளது. போ என்று அருள்புரிந்து சிஷ்டர்கள் ஏத்தக் கைலாயத்தை நோக்கிச் சென்றான். பரம சற்குருவாகிய நாரதபகவான் நல்வார்த்தை, பசுமரத்தாணிபோற் கந்தருவன் உளம் பதியத், தான் செய்த பாவங்களை எண்ணியெண்ணிப் பதறி, எரி விழு புழுப்போல் வெம்பி, அந்த க்ஷணமே, தனது, கனதனப் பொருள்களை யெல்லாம் தான தருமங்கள் செய்து, தன்னூர்விட்டு அகன்று, திருமுட்டத்தை நோக்கித் தண்டமாக வீழ்ந்து சேவித்துச், சிரமேற் கரங் கூப்பிக், காடுசெள், பலவாம் நாடு நகரங்கள் கடந்து, திருமுட்டத் தலத்தை நாடித் தீவிரமாக வந்து, மகாமகத்தில், மாசிமாத சுக்கி

லபக்ஷப் பௌர்ணமியில், சூரியோதயத்தில் நெடுமால் திருவடி தீர்த்தமாகிய கீழ்க்கடலில் ஆடி, நடுப்பகலில், தில்லைச் சித்திர கூடஞ் சென்று, அப்பிர சாசினிற் படிந்து, சிவபெருமானது தாண்டவங் கண்டருளும் தேவாதிதேவனைச் சேவித்து, அன்றிரவில் திருமுட்டஞ் சேர்ந்து, நித்திய புஷ்கரணியில் நீராடி, பாலம் முதற் பன்னிரண்டிடங்களில் பன்னிரண்டு சித்திரோர்த்துவ புண்டரங்கள் அணிந்து, துளசி தாமரை மணிமாலைகள் கழுத்திற் புனைந்து, கோயிலை வலமாக வந்து, சில்லிகாவனத்து மூலகாரணக் கோலவராகப்பெருமான் சந்நிதியிற் சென்று, சாஷ்டாங்கமாகச் சேவித்து, உடல் பனித்து, ஆர்த்தி மேலிட்டுக், கண்களில் ஆனந்த நீர் சோரச், சிரமேற் கரங் கூப்பி நின்று, ஆசன பதுமத்தில் அழுத்திய திருவடியிணைகளும், இடையில் அமைத்த இரண்டு திருக்கைத் தலங்களும், அக்கரங்களிற் கொண்ட சங்கு சக்கரங்களும், மணித் தடத் திருமார்பும், திருத்தோள்களும், தெற்குமுகமா மேற்கு நோக்குற்ற திருவழகும் சேவித்து, நாத்தழும்பேறப் போற்றி செய்தான்.

முடைமலக் கூடென் றரிவைய ருடலை முகந்துகண் டுண்டு கேட் டிருந்துங், கடையனைக் கடுப்ப வவர்கண்வா யிடைமெய் கால்காஞ் சிரமல்கு லசையும், நடைநொடி மொழிவெண் ணகை நகை முலையூ ராதிக ளாகுநஞ் சினையான், இடையரு துண்டே யுனக்குமஞ் சாதென் றுரமழிந் திருந்தன னெருவா.

முறைவழு நீதி வழுவென வரினு மோகவி காரமார் மாதர், கறைவழு நிரயக் கனற்கொரு துரும்பாக் கரிந்துணர் வழிந்தனன கடையேன், நிறைவழி யவர்த நேயமாஞ் சுழிவீழ்ந் தவரெனும் பேய்க்குநான் பயந்தேன், இறைவவ னவர்தொண் டாகிமாண் டொழிந்தே னெம்பிரான் புரந்தரு ளெனையே.

புற்றர வல்கு லெனுங்கொடும் பாம்பு சீறியே வெண்மதி புலம்பப், பற்றிமுன் விழுங்கிற் றென்பொறி யதனைப் படுத்திடு சூபப்பெருங் கற்கள், எற்றியே புடைத்தன் னவர்விழி வாட்க ளிலங்குறுங் காணத்தைத் துமித்த, கற்றவன் னவர்வஞ் சகமென தகன்ற கல்வியுண் டொழிந்தன காணேன்.

நிறைந்தருள் புரிநின் னுயிர்களை யனலி னூறின னுணையின் காலில், அறைந்தனன் செக்கி லறைத்தனன் கடலி லழுத்தினன் கழுக்கொழு வேற்றிக், குறைந்தன னரவம் புலிமுத லுண்ணக் கொடுத்தனன் சொலைவிளை யாட்டால், உறைந்திடு நாளை யோட்டினன் கருணை யொழிபெரும் பாவியேற் கருளே.

அருள்புரி யவனி யம்மையர்க் கருளு மமலமெய்ஞ் ஞானப்பி ரானே, கருணைசெ யென்றீ வினையைநின் னருளுக் கிலக்கமென் றுகந்தருங் கனலி, யுருவனே குணத்தி லுத்தமத்தோனே யுருவரு வொன்றுமில் லானே, சருவனே சுருதிச் சுயம்புவே சம்பு கும்பிடு தம்பிரான் சரணே.

அவன் இவ்வாறு துதிசெய்து, தீர்த்த சடகோபப் பிரசாதங் கள் கொண்டு, அகமகிழ்ந்தான். ஆங்கு, அவன் பூவராகனைப் போற்றி வழிபட்டுச் சிலநாளிருந்து, மரணகாலத்து உயிர் நீங்கும் போது, பெரியதிருவடி எழுந்தருளி, பிரம வித்தையைச் செவிவழி உபதேசிக்க இறந்து, பூவராகன் அருளால் பாவங்களெல்லாம் பறந் தொழியச் சுவர்க்கலோகஞ் சென்றான். பரத்துவாசியே! அந்தக் கந்தருவன் அவ்வுலகுறு பலபல இன்பங்கள் நுகர்ந்து, அதன்பின் முத்திபெற எண்ணி ஆவியை விட்டன னாதலால், ஏனமாய தற் பரன் இச்சையின் வண்ணம், சுவர்க்கம் புகுந்து, சிரகாலஞ் சுரர் சுகந் துய்த்து, மாண்டு, பின்னர், இரணியன் வீரியத்து அமைந் திருந்து, தாய்வயிற்றிற் கருப்பமுற்று, கருவிலே திருவடைந் திருக்குங்கால், நாரதமுனிவன் எழுந்தருளி, திதி முன்னிலையில், அவள் வயிற்றுள்ள சிசுவுக்குக் கருப்பதீக்ஷை செய்து, அரிபரத்து வமும் அருத்தபஞ்சகமும் உபதேசித்து, ஞானபத்தி வைராக்கியங் கள், நாள்நாளும் வளர அருள் புரிந்து சென்றான். முனிவா! திதி வயிற்றிருந்த அச்சிறுவன், வேதம் முதலிய கலைகளெல்லாம் கைக் கனியென்ன உணர்ந்து, உலகெலாம் உய்யப் பிரகலாதன் என்று அவதரித்தான். மறையவ! இந்த அறிஞர்சேகரன், அவதரிக் காதிருப்பனேல், சருவ சேதனாசேதனங்களின் உள்ளும் புறம்பும் பரந்து சருவ பரிபூரணனாய், சகல ஜகத்காரணனாய், சருவ நியந் தாவாயுள்ள சருவேசுரன் அரியே என்று இவ்வுலகு எவ்வா றறியும்? கற்றோய்! சொற்கடந்த தூய ஞானியாகும் இப் பிரக லாதன் உதித்துத் தூணிடை நரசிங்கப்பிரானைத் தோற்றுவியா னேல், சுருதித்தொகைகளேது? சிவனயன் முதலாந் தேவர் களேது? அவர்களை வழிபடுஞ் சிறுத்தொண்டர்தாமேது? அறிஞ! ஸ்ரீமுட்டத்தெம்மான் ஜாயமானகால கடாக்ஷத்தால், திதி வயிற்று உதித்த பிரகலாதன் உலகோர் ஏத்த அறச்செங்கோ லோச்சி, அந்தமில் இன்பவீடடைந்தான்.

# பகுப்பிரதனென்னுஞ் சூத்திரன் பிரியவிரதனான படலம்.

பரத்துவாசமுனிவ! பிரமனது பூர்வகற்பத்தில் பகுப்பிரதனென்றொரு சூத்திர னிருந்தான். அவன், நாளொன்றுக்கு, ஆயிரம்படி நறுநெய் சேரும் அவ்வளவு பசுக்களையுடையான். வருக்கொண்ணுத் தனத்திற் கனத்தான். நவதானியங்கள் மலிந்த பற்பல சேர்களையுடைய வளத்தான். தானும் உண்ணான்; உடுக்கான்; தருமத்தைப் பகையாக எண்ணுவான்; மனைவி மக்கட்கும் ஒன்றும் ஈந்தறியான்; ஒப்பற்ற உலோபன். அவன்மாட்டு, பஞ்சகவ்வியந் தரும் பசு ஒன்று விலைக்குக் கொள்வான் விரும்பி ஒரு நாள் கௌதமன குலத்துதித்த பதுமபந்து என்னும் முக்கண்ணனைப் பொருவும் ஒரு முனிவன் அணுகி, தாசனே! உயிர்கட்கு, அறத்தினும் உயர்ந்த பெருக்கம் ஒன்றில்லை. அதை மறத்தலினும் பெருங் கேட்டைத் தருவதொன்றில்லை. நீயோ, தார புத்திர தாச வருக்கமும், மிக்க தனமும், பற்பல பூமியும், எண்ணிறந்த பாற்பசுக்களும் இருந்தும், ஈகையை இழந்தாய்; அந்தோ! கொடாத உலோபனை யாவரும் இழிப்பார். கிருபணனை இரவலர் பழி, நிந்தை, நரகம், இழிபிறப்பு, வயிற்றுவலி, காசநோய் முதலானவைகள் நீங்காவாம். உலுத்தனை ஈன்ற தாய், தந்தை, குரு, தெய்வம், பிதுர்க்கள், சுற்றம், மனைவி, மக்கள், மாதவர், மன்னர், மற்றவரும் சீறிக் கைவிடுவார்கள். சூத்திர! அறஞ்செய்யாதானுக்குப் பல்லாயிர குணங்கள் இருப்பினும், பழுதேயாம். உலோபர்கள், பிணங் காக்கும் பூதம்போல், பணத்தைக் காத்துப் பிச்சையும் இடாது பணப்பேய் என்னும் பெயர் படைப்பார். இயமன் வருநாள் இப்பணந் துணையாமோ? என்று இயம்புதலும், அவ்வசனம் அரி அருளால் அகம்பதிய, பகுப்பிரதன், பயந்து, எழுந்து பதுமபந்துவின் பாதங்களில் வீழ்ந்து, சற்குருவே! நான் கெடுமனமும், உலோபகுணமும், சமுசாரமும், ஜன்மமும், நரகத்துன்பமும், பாவத்தொகையும் அற்று நற்கதி பெறுமாறு, என்னைப் புரந்தருள்க. ஐய! நான் எவ்வறஞ்செய்வது என்றான். பதுமபந்து, உவந்து, பகவத்கடாக்ஷம் இவனுக்குப் பலித்ததென்று தன் திருவுள்ளத்தில் எண்ணி, பகுப்பிரதனை நோக்கிப் பிள்ளாய்! நீ, ஈறில்லாத பேரின்பத்தை அடையவேண்டில் என் சொற்படி நட.

அப்பா அண்டமெல்லாம் உண்டு உமிழ்ந்து காக்கும் அரியே தற்பரன். அவன் திருவுள்ளம் உவப்பச் செய்தலே, சிறந்த அறமாம். இது, சிவன் தவமிருந்து உமைக்குச் செப்பியது. அவ்வறம், கௌணம், முக்கியம் என்று இரண்டாகும். அவற்றுள், தமது வருணாசிரமங்களை நாடிச் செய்வது கௌணமாகும். அது: நீர் வற்றுக்குளம், ஏரி கூவஞ் செய்தல், நந்தனவனம் அமைத்தல், வழிப்போக்கர்க்கு அன்னமிடுதல், தடம், நடப்போர் தங்கச் சாவடி சமைத்தல், அன்ன சத்திரம் அமைத்தல் முதலிய முப்பத்திரண்டாம். முக்கட்கடவுள், வேதன் முதலோர் செய்துயர்ந்தது முக்கியமாகும். அது: வேதாத்தியயனஞ் செய்வித்தல், தருமசாஸ்திரங்களைப் பயிற்றுவித்தல், சருவ வேதாந்த பிரதிபாத்தியனான சீகாந்தன் உகந்த சுயம்பு க்ஷேத்திரங்களில் திருப்பிரதிஷ்டை, திருமதிள், திருவாராதனபாத்திரங்கள், திவ்விய பூஷணங்கள், திருப்பரியட்டம், தீர்த்தக்குளம், திருமண்டபங்கள், திருவிமானம், தீபம், வாச்சியம், திருக்கோபுரம், திருமாலை, திருக்கலவை, திருத்தேர், வாகனங்கள் இவை செய்தல், திருவலகிடுதல், திருக்கோலந் தீட்டுதல், சீவைணவர்க்குத் திருமாளிகைகள் திருத்திச் சமர்ப்பித்தல், பஞ்சபருவோற்சவங்கள், பிரமோற்சவம் பாங்காகச்செய்தல், முதலியனவாகும். பாக்கியவானே! சுயம்பு க்ஷேத்திரங்களுள் திருமுட்டஞ் சாலவுஞ் சிறந்ததாகும். நீ, திருமுட்டத்திருப்பதி சென்று, ஸ்ரீபூவராகன் திருவடிகளில் திறம்பாத பத்தியோடு, சருவவித கயிங்கரியங்களுஞ் செய்து, சச்சிதானந்த பதம் பெறுவாய் என்று, செய்வன செய்து, அருள்புரிந்து சென்றான். பகுப்பிரதன், பதுமபந்து என்னும் பரமகுரு பதமலர் பணிந்து, மனைவி மக்கட்கெல்லாம் மாதவன் அருள் உரைத்துத், தனது பொருள் முழுதும், பற்பல எருதுகள், பண்டிகள், சிவிகைகள், தேர்கள் மீதேற்றிக்கொண்டு, கண்ணுக்கெட்டாத பாற்பசு மந்தைகள், கணங்கணமாகப் பின்னே தொடர்ந்துவர, மனைவி மக்களோடு வழிநடந்து, திருமுட்டத்தலஞ் சேர்ந்து, பணிந்து உள்ளம் மகிழ்ந்தான். சுகுண சம்பன்னனான அச்சூத்திரன், தன் கிளையொடு நித்திய புஷ்கரணியில் நீராடி, ஈராறிடங்களில், திருமண்ணைத் திருச்சூரணத்தொடுந் தரித்து, வலமாக வந்து, வராகசாமி அழகைக்கண்டு தண்டென வீழ்ந்து, கண் புனல்வார நின்று, கைகூப்பித் தென்கலைத்தொகுதி பாடி யாடி, தீர்த்தந் துளசி திருமாலை சடகோ

பன் பெற்றுக் களித்தான். அவன் அத்தலத்தின்கண் நித்தியவாசனாய், பூவராகப் பெருமானது பூசைக்கு எஞ்சாத தானியம் விளையும் வளம் மிக்க பற்பல காணியாட்சியுள்ள பல ஊர்கள் சமர்ப்பித்தான். ஸ்ரீவைணவர்கட்குத் திருமாளிகைகள் இட்டுக் கொடுத்தான். சீயர் வாழ் மடங்கள், ததீயாராதன மண்டபங்கள், சத்திரம் பலவுஞ் செய்தான். பூவராகசாமிக்கு, நவரத்தினங்களால் பற்பல வாகனங்கள் செய்து அளித்தான். செம்பொன் மணிகளால் திருத்தேர் செய்தான். தேவர்தம்பிரானுக்குச், சித்திரை மாதத்தில் பூசநாளில், பாஞ்சராத்திர முறைப்படி துவசாரோகணஞ் செய்து, பரிந்து, உற்சவம் புரிந்தான். ஏழாநாள் திருத்தேருற்சவம் இயற்றினன். ஒன்பதாநாள் விசாகத்தில், நித்தியபுஷ்கரணியில் தீர்த்தவாரி செய்து, அவரோகணம் புரிந்து, உற்சவத்தை முற்றுவித்து, மற்றும் செய்வன செய்து, சிந்தை மகிழ்ந்து இருந்தான். அப்போது, பிரமசற்பம் என்னும் பிரளய காலமாய், வாணிகேள்வன், அம்பிகைபாகன், சசிபதியாதி தேவர், மனிதர், மிருகங்கள், பறவைகள், பருவதங்கள் எழுவாகச் சராசரங்கள் எல்லாம் மாண்டு, சச்சிதானந்த சக்கரக்கைத் தற்பரன் வயிற்றில் சங்காரசாலமெல்லாந் தங்கியிருப்பச், சருவேசுவரன், உயிர்கட்கெல்லாம், சரீரேந்திரியங்களைத் தர எண்ணி, மூலபிரகிருதியினின்று, மகதாதி காரிய தத்துவங்களைத் தன் சங்கற்பத்தால் உண்டாக்கி, அவற்றைக்கொண்டு, அண்டத்தைப் படைத்து, அதற்குள், வியஷ்டி சிருஷ்டி செய்வான், தனது உந்திப்பூவில் விதி என்னும் பிரமனைப் படைத்தான். அவ்வண்டத்துக்குள் சதுர்த்தச புவனங்களையும் நால்வகை யோனிகளையும் படைத்த அப் பிரமன்பால், அவனது பரார்த்தத்தில், முதல் வருஷத்தில், முதல் தினத்தில், முதல் முகூர்த்தத்தில், சுவாயம்புமனு அவதரித்தான். மறையவ! திருமுட்டத்தில் பகவத் பாகவத கயிங்கரியங்கள் செய்த பகுப்பிரதன் என்னும் அச்சூத்திரன், சல பிரளயத்தில் இறந்து, பிரளயகாலமெல்லாம், வாசுதேவன் வயிற்றிருந்து, அப்பன் பேரருளால் அந்த சுவாயம்புமனுவுக்குப் பிரியவிரதன் என்னும் புத்திரனாகப் பிறந்தான். அவன், இவ்வுலக ஆசையை ஒருவித் தவஞ்செய்ய, பிதாமகனான பிரமன் எழுந்து, உலகோம்பும் நன்னெறி உரைத்து முடிசூட்ட, ஏழுகடல்களுடுத்த ஏழு தீவுகளையும், பதினொரு அற்புத சாலம் புரந்து அரசியற்றி, இன்பநுகர்

ந்து, ஏழு புத்திரர்களைப் பெற்று, அவ்வெழுவர்க்கும், ஏழு தீவுகளை யும் புரக்கும் அரசுரிமை தந்து, பின்பு சுவர்க்கம் புகுந்து, சுரர் சுகந் துய்த்து, அழிவிலா இன்பவீடடைந்தான்.

---

## சம்பரன் என்கிற பிராமணன் சிவிச்சக்கரவர்த்தியான படலம்.

பரத்துவாச! ஸ்ரீமுட்டமான்மியஞ் செப்பற்கரிது. இன்னுங் கேள் இயம்புவன்: பூர்வம் திருமுட்டத்தில் சம்பரன் என்று ஒரு பிராமணன் இருந்தான். அவன் பரத்துவாச குலத்தான். சகல சாஸ்திரங்களினும் வல்லான். வராகவப்பனை மறவாதான். ஸ்ரீவை ணவகுல திலகனும் அன்னான், நல்லறமாய இல்லறத்தை மேற்கொ ண்டு, நற்குண நற்செய்கைகளையுடைய மனைவியோடு கூடி, எந்நா ளும், அதிதியாக வரும் மாதவர் தம்மை வணங்கி, அன்னம் ஊட்டி உபசரித்து, அவர் இச்சையெல்லாம் ஈந்து, மிச்சில் உண்டு பூரித்து வாழ்வான். செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான். சரீரத்தைப் பேணான். ஞான பத்தி வைராக்கியங்களிற் சிறந்தான். தரித்திரத்தால் நலிந்தான், அன்றைக்கன்று, அக்ஷயபாத்திரம் ஏந்தி, அகமெங்கும் ஐயமேற்று, அதிதிகளை ஆதரித்து வந்தான். அன் னான், இல்லற நெறி வழாது, மனைவி மைந்தரொடு கூடி, அதிதி களை ஆராதித்துவருநாள், அவனது கிரகதருமம், மெய்ஞ்ஞான பத்தி விரக்திகளை உலகோர் கண்டு உய்ய எண்ணி, அம்புஜவல்லிமணு ளன், ஒரு நாள் இராத்திரி நடுயாமத்தில், பஞ்சகச்சப் பட்டாடை உடுத்து, பன்னிரண்டு திருமண் சாத்தி, மோதிரம், முஞ்சம், முந் நூல் அணிந்து, துளசி நளிநாக்ஷமாலை மார்பில் தொங்க, ஸ்ரீவை ணவ வேடம் பூண்டு, திருவாய்மொழி ஸ்ரீகோசம் ஒன்று கைக் கொண்டு, உமையவள் கூற்றுதித்த துர்க்கையை உள்ளத்தெண்ணி னன். காளிதேவி, தன் உருமாறிச் சிங்க வடிவங் கொண்டு வந்து, தொழுதுநிற்கக், கண்ணன், அச்சிங்கத்தின்மேல் ஏறிச் சம் பரன் திருமாளிகை யருகே சார்ந்து, சிங்கவாகனம்விட்டு இழிந்து, தலைக்கடை நின்று, கதவைத் தட்டினன். வேதியன், விழித்து, ஓடிவந்து, கதவின் காப்பகற்றி, அதிதியாக வந்த ஐயனைக் கண்டு, களிப்பின் மேலீட்டால் கான்மலர் வீழ்ந்து, இல்லத்துட் கொண்டு,

ஓர் ஆசனத்து இருத்தி, மனைவி தரும் புனல்கொடு மலரடி விளக்கி உபசரித்து, அடிகாள்! நள்ளிரவில் இங்கு வருதற்கு என் நிமித்தம்? என்னலும், மாய அதிதி மகிழ்ந்து, வைணவ! அன்னம் வேண்டி நின்மாட்டு வந்தேன் என்றான். அந்தணன் கேட்டு, மனைவிக்கு உரைப்ப, அவ்வுத்தமி, கை நெரித்து, அந்தோ! என் செய்வேன்! என்று பாத்திரத்திருந்த அன்னத்தைப் படைக்க, அண்டகோடிகள் அனந்தம் உண்டு, ஆலிலை துயிலும் அதிதி, அவ்வன்னம் உண்டு, ஐயோ! என் பசி அடங்கினபாடில்லை. பூவராக ஞானப்பிரானே! என்செய்வேன் என்று கூகூவென்று கூவினான். வேதியனும் மனைவியுங் கண்டு மெலிந்து, அவ்விரவில், அகத்திலுள்ள தட்டு முட்டெல்லாம், ஒன்றுக்குப் பாதியாக விற்று, அப்பொருள்கொண்டு அறுசுவை அன்னம், கன்னல் பக்ஷணங்களுடன் அட்டு, அதிதிக்கு ஊட்டலும், அவ்வன்னமெல்லாம் உண்டு, அவ்வதிதி, அப்ப! பசி விட்டது என்னை என்று பகர்ந்து, சற்றே இளைப்பாறி யிருப்ப, அது போது, அவன் ஏறிவந்த சிங்கம், யாவரும் அஞ்சக் கர்ச்சனை செய்து, ஆங்கிருந்த பசுவொன்றைத் தின்பான் பற்றலும், பசு அலறக் கண்ட வேதியன், என்னபாவம் இது? என்று ஏங்கி, சிங்கத்தின் முன்னே சென்று, சிங்கமே! இப்பசுவை விட்டுப் பாது காக்கவேண்டுகிறேன் என்ன, காளியாகிய சிங்கம், பிராமண! இக் கோவை விட்டுவிட்டால், என் குக்ஷி எழுந்த பசி அடங்குமாறு என்னென்ன, மறையோன், சீயமே! என்னைக் கொன்று அருந்து என்று கூறலும், ஆளி, சினந்து, உனது புன் தசை எனது பசிக்குப் போதாது என்று புகல, அந்தணன் தேவி அணுகி, கோளரியே! என்னையுங் கொன்று தின்று, இக்கோவை விட்டுவிடு என்ன, ஆளரி, சீறி, உம்மிருவரைத் தின்றாலும் என் பசி ஓயாது என்ன, வேதியன் புதல்வர்கள் கண்டு, விரைந்து வந்து, சிங்கமே! எங்களையுங் கொன்று தின்று; இந்த ஆவை விடுவாய் என்று எதிர்நின்றார்கள். இவ்வதிசயத்தை, அதிதியாய அம்மான் நோக்கி, கரைபுரண்டோடுங் கருணையுடன், பூவராகப் பொன்னுருவத்தோடு, பெரியபிராட்டியாரும், பூப்பிராட்டியார், காத்தியாயனி பிராட்டியாரும், இருமருங்குந் திகழத், திருவனந்தனும் சேனையர்கோனும் பல்லாண்டு பாட, சிவன், அயன், தேவர்கள் போற்றப், பெரியதிருவடி தோள்மேல் ஆகாயத்தில் தோன்றினான். மாதவர் தலைவன், மனைவி மைந்தரொடு கண்டு, கீழே விழுந்து, ஏத்தி, எரிபடும் இழுது

என்ன நெக்குருகிக், கண்ணீர் சொரிந்து, சிருக்தத்தால் துதிசெய்தான். எம்பிரான் உகந்து, அன்ப! உன் இச்சை என்னென்று வினவ, புண்ணிய மறையோன், பொருளல்லாத என்னைப் பொருளாக்கி, அன்னம் வேட்டு அடிமைசொண்ட பூவராக! எந்நாளும் உன் அடியிணைகளே நினைத்துருகும் ஆர்த்தியையும், உன் கலியாண குணத் தேனையே அருந்துங் காதையும், உன் ஆலயத்தையே வலஞ் செய்யுங் காலையும், உன்னையே தொழுஞ் சிரத்தையுங் கரத்தையும், உனக்கும் உன் அன்பர்க்குமே தொண்டியற்றும் மனத்தையும் தேகத்தையும், எனக்குச் செல்வமாகத் தந்தருள்வாய் என்றான், பத்தருக்கெளிய பரமன், கேட்டுப் புன்னகை பூத்து, பத்தர் சேகர! நீயும் உன் மனைவியும் மைந்தருமாக இவ்வுடலோடு சுவர்க்கலோகம் போய், அமுதமருந்திக் கற்பகத்தரு நீழலில், அளவறுகாலந் தேவபோகம் அனுபவித்திருப்ப நினைத்தேன், போ என்னலும், அந்தணன், நடுங்கி, அருளாள! தேவர்தம் அறிசுகம் வேண்டேன்; நின் திருவடிகள் அருள் என்னத், தம்பிரான் பின்னும் சாதுவை நோக்கி, சமதமாதி ஆன்மகுண சம்பன்ன! இந்தத் திருமுட்டக்ஷேத்திரத்தில், சாதுக்களுக்கு அன்னமிடுவான், நினைவின்றேனும் சுவர்க்கமேகி, தேவபோகங்கள் நுகர்ந்து, நிமலானந்தவீடு அடைவான். தீவினைகள் பல செய்த தீயனேயாயினும், இத்தீர்த்த புஷ்கரணியில் சிரார்த்தஞ் செய்வனேல் அவன் குலமெல்லாம் சூரியமண்டலத்தைப் பேதித்துக்கொண்டு, சுவர்க்கம் புகுந்து சுகமுறும். இத்தலத்தின்கண் தானந் தருவார், பொன்னுலகிற் சதகோடி கற்பகாலம் போகம் நுகர்வார். சீமுட்டமாம் இப்பதிக்கண் தேடி அன்னமிடுவோரைத் தொழுவாருந் தேவராவார். இப்பெரும்பதிக்கண் அன்னமீவான் இருக்குமிடம் பிரயாகைக்கு ஒப்பாகும். அன்னான் மாட்டு அன்போடிருப்பன் நான். இத்தலத்துத் தமர்க்கு, அன்னம், வஸ்திரம், பொன், பூஷணம், விவாகம், வீடு முதலாகத் தந்து உபகரிக்கும் மேலோர், தஞ் சுற்றத்தோடு, சோம சூரியர் உள்ளதனையும், சுகமெலாம் அடைவார். ஆதலால், அப்ப! நீயும் பொன்னுலகம் போய், தேவபோகங்கள் புசித்துப், பின்னர், இப்புவியின்கண் சூரியகுலத்திற் பிறந்து, சிபிச்சக்கரவர்த்தி என்னும் பெயர்கொண்டு, உலகமெல்லாம் ஆண்டு, உடலையுங் கொடுக்கும் உதாரியாய், உம்பரும் வந்தித்து எத்தப் புகழ்பூண்டு, அவ்வுடம்பை யொருவி, நமது நித்திய நிமலானந்த பரவீடு அடைவாய் என்று நிகழ்த்தி மறைந்தருளி

ளுன். அக்கணமே வானோர் வந்து வந்தித்து மறையவனை மனைவி மைந்தரோடும் விமானத்து ஏற்றிக்கொண்டு, அந்தர துந்துபி முழங்க, அமரரூர் சேர்ந்தார்கள்.

---

## கமடன் முத்திபெற்ற படலம்.

கேளாய் அத்திரிபுத்திர! சாச்மீர தேசத்தில், கமடன் என்னும் பெயர்கொண்ட பார்ப்பான் ஒருவன் பஞ்ச மகா பாதகத்தில் தலைவனாய், நாஸ்திகனாய், பந்துக்கள், பாரோர் யாவரும் பழிக்கும்மூடாதிபனாய் இருந்தான். அவன் தன்னை ஊரும் உலகமும் பழி தூற்றலால் ஓரிடத்தினும் இருப்பு அரிதாகிக் காட்டில்புகுந்து கண்படும் விலங்கு பறவைகளைக் கொன்று தின்று கொழுத்தான். பாவத்தில் பழுத்தான். வையமெல்லாம் வைய, அவன் வயானங்க (பறவைக)ளையும் மிருகங்களையும் வதைத்துத் தின்று, வஞ்சகனாய் எங்குந் திரிந்து, நிரேதுசமாகச் சீமுட்டம் வந்து சேர்ந்தான். ஆங்கு அவன் வீதிதோறும் சென்று நிதமும் பிச்சை பிச்சை என்று பெருங்குரலிட்டுக் கூவித் திரியும்போது, ஒருக்கால், வேத பாரகர் சிலர், அரசனொருவன் தன் அல்லலெல்லாம் அகலக் கொள்ள, பூவராகமூர்த்தி, தீர்த்த, க்ஷேத்திர மான்மியங்களையும், துவாதசாக்ஷரத் திருமந்திரப் பிரபாவமும், அதன் பொருளுஞ் சொல்லிக்கொண்டிருக்கக் கண்டு, பஞ்சமா பாதகனான பார்ப்பான், தானும் அக்கோஷ்டியுட் சென்று நின்றான். சிஷ்டர்கள் சொல்லும் துவாதசாக்ஷர மந்திரத் தூய்பொருள் கேட்கவே துணுக்கமுற்றுப் பயந்து, பெரும்பாவியாகிய அப்பிராமணன் அரண்டெழுந்து பதறினன், நல்லறிவுச் சுடர் கொளுத்தப்பட்டான். நான்மறையோர் பாதங்களில் வீழ்ந்து தண்டனிட்டான். இளமையில் தன் பிதா உரைத்த மந்திரம் இதுவாகும் என்று எண்ணினன். தான் செய்த பாவங்களை எண்ணிக் கண்ணினன். இவ்வாறு குழைந்து, நித்திய புஷ்கரணியில் நீராடி, பூவராகப்பெருமானைப் போற்றி, கரைக்கண்ணோங்கும், அரசமரத்தடிக்கீழ், தன் தந்தை ஓதிய, துவாதசாக்ஷர திருமந்திரத்தைச் செபித்து, உரு எண்ணிக்கொண்டிருக்குங் காலத்து, உயிர் துறந்து இறுவாம்பாக, உவண தேவன், வந்து, அம்மந்திரத்தை உபதேசித்தனர். அவ்வயின், எம தூதர் வந்து மறித்துப் பிடிக்க முந்துங்காலைக் கலுழதேவன், சேனையர்கோன் முதலாஞ் சூரிகள் எமபடரைத் தகைந்தார்கள்.

எமதூதர், பயந்து, கையாத்து முன்னின்று, அடிகாள்! நீவிர் எம்மைத் தடுக்க விரகேது? இவனே ஒப்பற்ற மகாபாதகன். கொல்லைப்பல்லிபோல் வேதியர்தங் குலத்துள் விழலாய்ப் பிறந்த நீசன். எமது அரசன் ஆணையின்படி, இவனை நரகத்திட்டு நலிவான் வந்தோம் யாம் என்னலும். நித்தியசூரிகள், எமபடரை நோக்கி, மூடர்காள்! இத்தலத்து இறந்தார், தீயரேயாயினும், இயமன் கைப்படுத லுண்டுகொல்? "திருவடி தன்னாமம் மறந்தும் புறந்தொழா மாந்தரை, யிறைஞ்சிச் சாதவராய்ப் போதுமின், திறம் பேல்மின்" என்று, உமது தேவன் சொன்ன இரகசியம் மறந்தீர் கொல்லோ? எமது எதிரில் நில்லாது, இவனை விட்டேகுமின் என்று இயம்பக், காலதூதர் கைகூப்பி இறைஞ்சி அகன்றார். அகலவே, கமடன் பவித்திரனாகி, சோதி சேர் விமானத்தேறி, சூரிய மண்டலந் தாண்டி, பிரகிருதியைக்கடந்து, பரமபதமடைந்து, பரமானந்த முற்றான்.

## திருவரசை ஆராதித்து வள்ளிமணாளன் வரம் பெற்ற படலம்.



பாரத்துவாச! முன்னொருகாலத்தில் விருத்தாசலத்துள்ள வேலவன், வள்ளிமாதோடு, மயில்வாகனம் ஏறி, விண்வழிச் சென்று, ஆனந்த பவனத்தில் இழிந்து, உவப்பொடு போற்றி, நித்தியபுஷ்கரணிக்கண் சென்று, அதன் மான்மியத்தை மனைவிக்குச் சொல்லி, அவள் முன்றானையையும் தன் உத்தரீயத்தையும் முடிந்து இருவருமாக ஏனத்திறைவனை இதயத்தெண்ணி நீராடிச் சோபானமேறி வெண்பட்டு உடுத்துத் திருநாமப்புண்டரந் தீட்டி, நவரத்தின கசிதபூஷணங்கள் அணிந்து, அசுவத்த நாராயண விருக்ஷத்தை அணுகிப் போற்றிப் பணிந்து பூசை செய்து, வேதியர் களிப்பத் தானம் ஈந்து, பூவனுஞ் சேவனுங் காணாப் பூவராகன் கண்ணெழும் போதித்தேவே! அருள்புரிவாய் என்று பிரார்த்தித்து, செய்கடன் முற்றுஞ் செய்து, திருவரசை வலஞ்செய்து வாழ்த்தி, அந்தத் தம்பதிகள் கோயிலுட் சென்று, கோலப்பெருமானைப் பணிந்து, பாஞ்சராத்திர விதிப்படி நடத்தி, தீர்த்தப் பிரசாதம் ஏற்று, உண்டு, சிந்தை மகிழ்ந்தார்கள். சிவனுக்குக் குருவான

செவ்வேள், எனத்தையன் திருவடிகளை இதயத் திருத்திப், பலிபுரிந்து வள்ளியோடு, எம்மான் அருட்பிரசாதம் உண்டு, தனது வேட்கை முற்றும் நாள் நோக்கி, சீமுட்டத்தின்கண்ணே மகிழ்ந்து வாழ்ந்திருந்தான்.

## கந்தன் அகம்பாவங் கடிந்தருளிய படலம்.

மறைவல்லோய்! தெய்வப் புலவனுகும் அம்முருகேசன், சீமுட்டத்தலத்தில், சிந்தை மகிழ்ந்து, அன்போடு வதிந்து வருநாள், அவன் பால் கல்வி பயில்வான் பலபேர் வந்து வணங்கிக் காமுற, அவர்க்கெல்லாங் கலைகள் ஓதுவித்துக், கனலிக்கடவுளைப் பூசித்து வந்தான். அப்போது தீய அரக்கன் ஒருவன், சாது வடிவங்கொண்டு சிஷ்யனுய் வந்து, கலைவல்ல புலவனைப் பணிந்து, குருசாமி! உன் மாட்டு விஞ்சை வேட்டு வந்தேன் என்னக், கந்தன் உண்மையுணராது, ஓதுவாய் என்று, அவனையும் மாணுக்கனுகக்கொண்டு, கலை பயிற்றிவந்தான். சாது வேஷம் பூண்டு, சரவணபவன்மாட்டுக் கலை பயின்று வரும் அக் கள்ள அரக்கன், நாள்நாளும் இராத்திரி நடுயாமத்தில், தன் உண்மையுருக்கொண்டு பரமருஷிகள் வாழும் பாழிகளினும், பிராமணச் சிரேஷ்டர்கள் வைகுந் திருமாளிகைகளினும் உள்ள கோக்களைப் பற்றிக் கொன்று தின்று, முன்போல் சாதுவேஷம் பூண்டானுய்ச் சண்முகத்தேவன்மாட்டு ஏகுவான். வேதச்செல்வமுடைய பெரியாரெல்லாம், மாழ்கி, மேதினியிடந்த மெய்ப்பொருளே! எமது பசுக்களைக் கவர்ந்துபோம் பாதகப் பட்டியைத் தொலைத்துக் காத்தருளவேண்டும் என்று முறையிடலும், பூவராகப்பிரான், இரவில், கோக்களை எற்றியுண்டு உலாவும் இராக்ஷசப் பையல் முன்னே, சிங்க ஏருகி நின்று, தீவிழித்து வாலை நிமிர்த்துக் கர்ச்சித்து, அவனைக் சொல்வான் வரக்கண்டு, குமரகுரு பரதாசனுன சொடியோன், கண்ணீர்விட்டுக் கதறிச் சிஷ்யவேஷங்கொண்டு தெய்வப்புலவன் பால் ஓடிச், சங்கரன் பெற்ற சற்குருவே! உன் அடிமறவாத என்னை இவ்வாளரி கொல்ல வராநின்றது. நான் இவ்விடரினின்று நீங்கிப் பிழைக்க அருள்செய்வாய் என்று அழுதான். வேல்வலவன் கண்டு, மாணுக்க! அஞ்சாதே, நின் ஆவி தருவன் நான் என்று, சிங்கத்தின் மீது அளவிறந்த அஸ்திர சஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்தான். அப்படைகளெல்

லாம், அரியுருவத் தரியை அணுகற்கு அஞ்சி, ஆகாயத்தில் அணுக்கள் உலாவல்போல் உலாவக்கண்டு, கதிர்வேலான், கதமூளப் பற்கறித்து, உரப்பிப், பல தேவதாஸ்திரங்களை வில்லில் தொடுத்து எய்தான். அவையெல்லாம், ஆளியாய அமலனை வலமாகவந்து அகலவே, மயில்வாகனன் மனங் கொதித்துப் பாசுபதாஸ்திரத்தையும், பிரமாஸ்திரத்தையும் விட, அவையும் பரனை வலமிட்டு அகலக் கண்டு, வெகுண்டு, தனது வேலாயுதத்தை ஏவினன், அது ஐயன் மூச்சுப்படவே சாம்பல்பட்டழிந்தது. அக்கால், சிங்கவுருக்கொண்ட தேவநாதன், அரக்கன் மீது பாய்ந்து, உயிர் வௌவ, அவன் ஆவிபோய் அழிந்தான். ஆறுமுகன், தான் ஏவிய அஸ்திர சஸ்திரங்களெல்லாம், அவலமாய், அரக்கனும் மாண்டொழிந்தது அறிந்து, இது, சிங்கமன்று; இரணியனைக் கீண்ட நரகேசரியே யாம் என்று உணர்ந்து, அரக்கனுக்குப் பரிந்து, அமலன்றன்னோடு எதிர்த்த தனது அறியாமைக் கிரங்கி, சிரமேற் கை கூப்பித் தண்டமாகக் கீழே வீழ்ந்து, தேவதேவ! மாயையால் யாப்புண்டு, நின்னோடு எதிர்த்துப் பொருத எனது மகா அபராதத்தைப் பொறுத்துக் காத்தல் நின்கடனேயாம் என்று பயவாறுகத் தோத்திரம் புரிந்து எதிரே நிற்றலும், அமலன், அம்பிகை புதல்வனை நோக்கி, நாவல! நீ, நின் மனைவியோடு, நந்தலத்து இருந்து இழைத்த நோன்பினாலும், நீ செய்த தோத்திரத்தாலும், மகிழ்ந்து உன் பிழைகளைப் பொறுத்து உனது இச்சையெல்லாம் பெற வரந் தந்தேன் என்று, ஆகாயத்தில், மின்னல்போல் மறைந்தருளினான். வேலன் மகிழ்ந்து, வள்ளிமாதோடு விருத்தாசலத்தின் கண் போந்து வாழ்ந்தான்.

---

## திருவரசு மான்மியப் படலம்.

பரத்துவாசமுனிவர! இரணியாக்ஷனைக் கொன்று பூமியை இடந்து காத்தருளி, தேவரும் மற்றியாவரும் போற்றத் திருமுட்டத்து எழுந்தருளிய சிவராகசாமி, திருமேனியிற் சிதறிய தீர்த்தமே, நித்தியபுஷ்கரணியாயது. அந்தத் தற்பரன் திருமேனிக்கேசங்களினின்று தருப்பை உண்டாயது. உறுப்பினின்று, எழுநான்கு யாகத்துக்கேய்ந்த உபகரணங்கள் பிறந்தன. திருக்கண்மலரினின்று உகப்பினுகுத்த தீர்த்தத்துளி திருத்துளவமாயது. அந்தத்

திருச்துழாயை எக்கியவராகமூர்த்தி, தன் திருமேனியில் அணிந்துகொண்டான். பின்பு வலக்கண்ணினின்று, திருவரசு அவதரித்து, நித்தியபுஷ்கரணி தீர்த்தத்தின் தென்கிழக்கில் திகழ்ந்தது. தேவதேவன்! அந்தத் திருவரசை நோக்கி, அரசமர வடிவாகிய அமலனே! உன்னை எவ்வுலகத்தவரும் என் பெயர் வைத்து, அசுவத்தநாராயணன் என்று ஏத்தி வலஞ்செய்து வணங்கவும், அன்னார், அவாவும் வரங்களெல்லாம் அடையவும், இம்மேன்மை உனக்கேயன்றி உன் இனத்துக்கும் இன்றுதொட்டு உண்டாகவும் அருள் புரிந்தேன். உன் அடிக்கண், யான் என்றும் இருந்து, பலியியற்றி வலஞ்செய்வார் உகந்த எல்லாம் தந்தருள்வன் என்று திருவாய்மலர்ந்தருளி, மரங்கட்கெல்லாம் அரசாக அருள்செய்து திருவபிஷேக மியற்றி, இருத்தினன். அந்த விருக்ஷ அரசு, ஆகாயமளாவ ஓங்கி இன்றும் விளங்குகின்றது, மறையோய்! அன்று தொட்டு உலகிலுள்ள அரசுகளெல்லாம், மாட்சிமைபெற்று எவ்வெவர் எவ்வெவை கருதினரோ, அவ்வவை யெல்லாம் அளிக்கும் ஆற்றலுற்று அவிர்கிற்கும். பகவத்பக்த! திருமுட்டத்தின்கண் திகழும் அசுவத்த விருக்ஷத் தெய்வம், தன்னை வலஞ்செய்து வணங்குவார்க்கு, பிசாசம், சூனியம், வைப்பு, நவக்கிரகதோஷம், பைத்தியம், குஷ்டம், பாண்டு, முதலியன அகற்றி அருள் செய்தல் இன்றும் உண்டு. அந்தத் திருவரசை வலஞ்செய்து வணங்கி, மேதினியோர், நிலம், பொருள், மனைவி, மக்கள், வித்தை, பத்தி, அஷ்டமாசித்தி, சத்துருஜயம், முத்தி, யாவும் பெற்றுயர்ந்தார். தேவரும், வெஃகிய அனைத்தும் மேவப்பெற்றார். கதிரோன் உதயகாலத்தில் திருவரசை நினைத்தார், இஷ்டமெல்லாங் காண்பார். திருவரசைச் சுற்றி வேதிகை சமைத்தார், பரவீடடைவார். அதன் மூலத்தில் நீர்சொரிந்தார், முத்தரேத்தும் சதிர்பெற்று, முகுந்தனைப் பூசித்து, இயமனும் அணுகாமல் நூறாண்டிருந்து இன்பநுகர்வார். அசுவத்த மூர்த்தியைக் குருவாரத்தில் வலமிட்டுப் பூசித்து, அருமறையோர்க்கு அன்னமிட்டார், உலகாளும் அரசராவார். சனிவாரத்தன்று அத்தருவினிடையில் ஆடைசாத்தி வணங்கினார், தாமும் தமரும் எண்ணமெல்லாஞ் சார்வார். சீசூக்தத்தால் பலிசெய்து சேவிப்பார், புருஷார்த்தமெல்லாம் சேரப்பெறுவார். சகஸ்திரநாமத்தால் அருச்சிப்பார், அகண்ட சாம்பிராச்சியத்தைப் பெற்று அரசாள்வார். வியாழன், செவ்வாய் இவ்வாரங்களில் வணங்கினரை வியாகூலம் என்பது அணுகாது. திரு

வரசைச் சிந்தைசெய்து வலஞ்செய்வாரை, விஷஜந்துக்கள், பூத, பிசாச, ராக்ஷச கணங்களெல்லாம். அணுகாமல் சேய்மையில் விலகிப்போம். அறிஞ! ஆயினும் இதற்கு ஓர் சாபம் உண்டு. அஃது என்னென்னில், ஓர்நாள், அசுவத்த மூர்த்தியும், வருணனும் இந்திரனது, சபைக்குச் சென்றார்கள், அப்போது, பிப்பலாத முனிவரும் அங்குப் போந்தார், இந்திரன் மூவர்க்கும் ஒருதரமாக ஆசனமளிப்ப, அசுவத்த தேவனும், வருணனும், தேவேந்திரனை விளித்து, தேவராஜ! இந்தப் பிப்பலாதர், இரணசூதகரா யிருப்பதால், இச்சபைநடு இருப்பதற்கு அகரல்லர் என்னலும், பண்ணவரும் வணங்கும் பிப்பலாதமுனிவர், கேட்டுக் கண்கள் சிவப்ப, நஞ்சுடைய நாகம்போற் சீறி, அசுவத்த தேவனையும் வருணனையும் நோக்கிப், பெரியார் மாட்டு, இரணசூதகம் முதலிய எந்தப் பாவக்குறிகள் இருப்பினும் அவரைப் பழித்து அவமதிக்கலாகாது. பழித்தார், பாதகராய், நரகிற் படுவாரென நூல்கள் பகரும். நீவிர் அறநூல் நெறி கடைப்பிடித்து ஓம்பாது, என்னை அவமதித்தவாற்றால், இன்று தொட்டு, பிரமகத்திக்கு உரியீராகுக என்று சாபமிட்டு, மீண்டுஞ் சீராக் சோபத்தால், ஒரு பூதத்தையும், ஒரு பிரமராக்ஷசனையும் படைத்து, பூதமே! நீ, கடற் கடவுளாகிய இவ்வருணனிடத்தும், பிரமராக்ஷசனே! நீ, இவ்வசுவத்த மூர்த்திமாட்டுமாக, விடாதிருந்து, இவரிடத்து வருவாரை வெருட்டி அலைத்து, உமக்கு உணவாகக் கொண்டு உண்ணக்கடவீர் என்று தூண்டத், திருவரசும் வருணனும் அஞ்சி, முனிவனை நோக்கி, அருந்தவ! நாங்கள் செய்த குற்றத்தைப் பொறுத்தருள்க என்று இரத்தலும், பிப்பலாதமுனிவன் சினந் தணந்து, பூதத்தை நோக்கி, பிசாசமே! நீ, கடற்கண் இருந்து, அச்சமுத்திரத்தில் பௌர்ணமி திதியில், வந்து படிந்து குளிப்பாரைப் பற்றாமல் விட்டு, ஏனைத் திதிகளில் வந்து ஸ்நானஞ் செய்வாரைப் பிடித்து உண்ணக்கடவாய் என்று ஏவி, பிரமராக்ஷசனை நோக்கி, நீ, இந்தத் திருவரசின்கண் இருந்து, சனிக்கிழமை இரவில் அங்கு சார்வாரைப் பற்றி, அவர் தசையை உண்டு வாழ்வாய். சனிதினம் ஒழிந்த மற்ற நாட்கள் இரவில், ஆங்குச் சாருஞ் சனங்கள் பக்கல் அணுகாதே, போ என்று ஏவி, அனுக்கிரகஞ்செய்து, தனது புத்திரியை, அசுவத்த மாமுனிக்கு உதகபூர்வகமாகத் தந்து, திருமுட்டத்தின்கண் சென்று திருவரசை ஆராதிப்பார், செல்வமெல்லாம் பெற்றுச், சிறப்பாக வாழக்கடவார் என்று ஆசிகூறி, மகிழ்ந்து தன் இருப்பிடஞ் சென்றான்.

வதைக்கும். அரசன் செய்த பாவம், புரோகிதனை யடைந்து வருத்தும். சிஷ்யன் செய்த பாவம், குருவைச் சேரும். உலகோர் செய்த பாவமனைத்தும், மன்னவனைச் சேர்ந்தொழிக்கும். புண்ணிய! பொய்த்தவசி யென்று உன்னை நான் கழுமுனை பொருத்தினேன். குற்றமற்ற நின் சிஷ்யர் எழுவரையுங் கொன்றேன். மாதவ! சரணம், சரணம். சழக்கரில் தலையாய நான், அழற்கண் புகாவாறு அருள்புரிவாய் என்று அழுதான். மாண்டவியமாதவன், மனமிரங்கி, மன்ன! அஞ்சாதே, நீ, பன்னிரண்டு வருஷங்கள், பக்தவற்சலனான பகவான் உகந்து எழுந்தருளியுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களை நாடிச்சென்று, தீர்த்தங்களில் குளித்து, மூர்த்திகளை வணங்கி, பத்தியோடு வழிபடுவாயென்னில் பலகோடி, அத்திகளும் பட்டழிந்து, பரமபதமும் பெறுவாய் என்று பகர்ந்தனர்.

---

## சுத்தியும்மணன் முத்திபெற்ற படலம்.

கேளாய் சங்கர! மாண்டவிய மாதவன் சொல் மன்னன் கேட்டு, அருட்குருவே! அவ்வண்ணமே ஆற்றக்கடவேன். அடியேன் செய்யும் விண்ணப்பம் ஒன்று உண்டு. அது யாதென்னில், கழுமுனையில் கவ்வப்பட்ட நீயும், சிரங்களறுந்த நின் சிஷ்யர் எழுவரும் சீவித்திருப்பதற்கு ஏது யாதோ? செப்பியருள்க என்று வினவ, மாண்டவிய மாமுனிவன், மன்னனை நோக்கி, தராதிப! என்னை உன் காவலர் சுழுமுனை ஏற்றிய நாள் முதல், நான் எனது ஊழை நினைத்து, இலக்குமி காந்தனை எண்ணியெண்ணி, இடருற்றிருந்தேன். அப்போது நிகழ்ந்த அதிசயம் ஒன்று, நீயறியுமாறு நிகழ்த்துவன் கேள்: நளன் பெற்றெடுத்த பெண்ணொத்தி நாளாயினி என்பாள், தேவரும் யாவரும் கைகூப்பித் தொழுங் கற்பின் நல்லாள், கட்டழகுடையாள், நற்குண நற்செய்கைகளிற் சிறந்தாள், அவள் மன்மதன் உருக்கொண்டு வந்து மாயஞ்செய்த, மௌத்கல்யன் என்னும் ஓர் மாதவனை வேட்டாள். அம்மாதவன், மனைவி கற்பினைச் சோதிப்பான் குஷ்டரோகத்தை உடற்கண் கொண்டு, புண்கள் வெடித்துச் சீயொழுகிப் புழுக்கள் நெளிய, பொல்லாத துர்க்கந்தம் வீசுமாறு, புவியோரெல்லாம் ஏச, வேஷந் தரித்து நின்றான். அவ்வுத்தம பத்தினி, தன் கொழுநன் பழித்துவையும் நிந்தனையெல்லாம் துதியாகக் கொண்டாள்.

நாள்நாளும் அவன் மையப்புடைக்குந் தழும்புகளையே, நவரத்தின பூஷணங்களாகக் கொண்டாள். அவன் உண்டு கழித்த எச்சிலே அமுதமாக உண்டாள். துர்க்கந்தம் வீசும் அவன் கொடிய நெடிய முடைமலச் சீயையே, தெய்வமணச் சாந்தாகக் கொண்டாள். அக்கட்டழகி தாய்தந்தையும், இவன் இறந்தால் நன்றாமே என்று வெறுக்கத்தக்க, காதவழி வீசுந் துர்க்கந்தம் மிக்க தொழுநோய் கொண்டுள்ள அவனைத் தன் முதுகில் தூக்கி, அவன் சொற்படி அழுகி ஒழுகும் தசையும் சீயும் இரத்தமும் தன் அங்கத்தில் விழச், சற்றேனும் அருவருப்புறாமல், புண்ணிய தீர்த்தங்கள், க்ஷேத்திரங்கள் தோறுஞ் சென்று கணவனை நீராட்டித், தானுங் குளித்துத் தரிசித்துக் கொண்டே இவ்வூர்க்கண் வந்தாள். உனது நகரிலுள்ள, கணிகை ஒருத்தியை, அவள் கணவன் கண்டு காதல் கொண்டு என் ஆசை நிரம்புமாறு என்னென்று உரைப்ப, நளாயினி, அக் கணிகை வீட்டில், பலநாள் தொண்டு செய்து, தன் கணவன் கருத்துரைத்து, வேசி உகப்பைநோக்கி, இரவில் மணாளனைத் தூக்கிப்போய், பரத்தைவீட்டுத் தலைவாயிலில் விடுத்துத் தான் மறைவிடத்திருப்ப, அவன் காமனுருக்கொண்டு, கணிகையைக் கூடி, முன்னுருப்பெற்று மகிழ்ந்தான். ஒருநாள் இராத்திரி, அப் பத்தினிப் பெண்ணரசி, தன் கணவனை முதுகில் தூக்கிக்கொண்டு, என்னைக் கழுவேற்றியிருந்த இவ்வழியாக வரும்போது, அவனுடல் என் காலில் தாக்கலும், பொறுக்கொண்ணாத துன்புற்று, நான் அவளை விளித்து, "கொடியவளே! நின் கொழுநனை முதுகில் கொண்டேகும் நீ, புண்ணிற் குருதியொழுகப் பொல்லாத கழுவிலிருக்கும் என்னை அசைத்து வாதனைபடப் புரிந்தாய். ஆதலால், உனது கணவனுயிர் மாண்டு, காலனூர்க்கேக, விடிந்தவுடன் நீ தாலியறுக்கக்கடவாய்" என்று விளம்பினேன். கற்பினல்லாள், கேட்டு, என்னை நோக்கி, "மாதவ! நான் அறியாமற் செய்த குற்றத்துக்கு, நீ இச்சாபமிட்டனை. எனது திருமங்கலத்தாலி எந்நாளும் இலங்குமாறு, இன்றிரவு விடியாதிருக்கக்கடவது என்று என் வாய் விண்டிசைத்தேன், எவ்வாறு விடியுமோ பார்ப்போம்" என்று சபதஞ் செய்தாள். புரவல! அப்போது சூரியன் இயங்காமை, எங்கும் இருள் மூடி யிருப்ப, மனிசர், விலங்கு, பறவையெல்லாஞ் செயல் மாண்டு, அழியவே, பிரமன் முதலிய தேவர்கள், இவ்வயின் வந்து, நானும், அக்கற்பின்மிக்க காரிகையும், களிகூர அருள்புரிந்து, என்மொழியால், அவள் திருமங்கலத்தாலியோடு

என்றும் இலங்கவும், அவள் மொழியால், சூரியன் தோன்றி விடியவுஞ் செய்து, இவ்வெழுவரையும் எழுப்பிப், பல வரங்களுந் தந்து மறைந்தார்கள், பார்த்திப! நளாயினி என்னும் கற்பினல்லாளால், நானும் என் மாணுக்கரும் உயிர் பெற்றிருந்தோம். பூபதியே! கல்விகேள்விகளில் வல்ல புலவர் சேண்மை யில்லாத நீ, புத்தியின்றி இவ்வாறு செய்தாய். மன்ன! நான் முன் சொன்னபடி, பூவராகன் இடந்த இப்பூமியை, வலம்புரிந்து, புண்ணிய க்ஷேத்திர யாத்திரை செய்து, பன்னிரண்டு வருஷங்கள் காறும் பணிவாயாயின், பாவங்களெல்லாம் பறந்துபோம். நராதிப! இப்படியே, முன்னம், முக்கட்பிரான், பிரமன் சிரங் கிள்ளியதனால், பிரமகத்தி பிடித்துப் பீடிக்கப்பட்டுப், பன்னிரண்டு தேவ வருஷங்கள், புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துத் தீர்த்தங்களிலாடி, மூர்த்திகளைப் போற்றி, ஆங்காங்குப் பிரதிஷ்டைசெய்து, பிரமகத்தியிற் றீர்ந்தான் என்று அருளிச்செய்ய, அரசன் கேட்டு, மாதவனை வணங்கி, விடைபெற்றுத், தன் தேயத்தைவிட்டுத் தாபதர் சிரந் துணித்த சழக்கரோடும், வாகனமொன்றுமின்றிக், கால்நடை நடந்து, திவ்வியதேச யாத்திரை சென்றான். சுத்தியும மண அரசன், மாண்டவிய மாதவன் சொற்படி, திருவரங்கம் முதலிய திவ்விய தேசங்களைச் சேவிப்பான் சிரத்தையுடன் நெடுந் தூரம் நடந்து, ஆனந்தபவனத்தின்கண் வந்த காலத்து, நீரும் பருகாது, அன்னம் முதலாம் ஆகாரம் ஒன்றும் இல்லானாய், நடை மெலிந்து, காது மூடி, அறிவிழந்து, ஒரு மரத்தின் நீழலில் தரையில் விழுந்து, மையல் மேவி, மூர்ச்சையாகக் கிடந்தான். அப்போது, திருமுட்டத்தலம் ஏகி, ஸ்ரீ பூவராகனைச் சேவித்து, மீண்டு, அவ்வழியே தன் ஊர்க்குச் செல்லும் ஓர் பூசுரன், ஆங்கு மருவி, அரசன் கிடக்கக் கண்டு, அருகே சென்று, அன்னமின்றி மெலிந்தானென் றெண்ணி, இன்னருளால், அவன், திருப்புற்கூடையின்கண் போற்றி வைத்திருந்த, பசையற்றுக் காய்ந்து, உலர்ந்த, பகவத் பிரசாதமான சிறிய பக்ஷணத்தைப், பரிவோடு, அரசன் வாயில் தந்தான். அசைவற்றயர்ந்த அரசன், அதை நாவிலிடுங்காலை, அவனுடலில் நின்ற உயிர் ஓய்ந்து, பிரசாதம் வாயிற் கிடப்ப, மறைந்து மாண்டான். அவனுடன் வந்த கொலையாளரும், அந்தணன் அளித்த பிரசாதம் அருந்தி, உயிர் துறந்து மாண்டார்கள். அக்காலத்தில், பெரியதிருவடியினர், அரசன் காதினும், கொலைஞர் காதுகளினும், பிரமவித்தை உபதேசிக்க, அன்னார்,

அத்திகளெல்லாம் அற்றொழிந்து, ஒளிகொண்ட சோதித் திருமேனியுடையராய், ஒப்புயர்வற்ற அமலானந்தத் திருநாடு அடைந்தார்கள் என்று நாராயணமுனிவர், சிவனுக்கு நவின்ற காதை, நைமிசவனவாசிகட்குச் சூதமுனிவர் புகன்று, மேலுங் கூறுவார்.

---

## மூன்று சூத்திரர் முச்சுடராய படலம்.

கேளீர் கேசவனடியீர்! நாரதமுனிவர், கைலாயகிரிக்கேகி, கண்ணுதற் கடவுளைப் போற்றி, பாவைபங்காள! நீ, முன்னம் சுயம்புஸ்தலங்கள் எட்டினுள் முதலான திருவரங்க மான்மியத்தைச் செப்பினை. இரண்டாவதான சீமுட்ட மான்மியத்தையுங் கேட்க இச்சிக்கிறேன். இயம்பியருள்க என்னச், சிவபிரான் மகிழ்ந்து, யாழ்வல்லோய்! வேதாந்தங்களெல்லாம், எம்பிரான் சீரை விளம்பகில்லாமல், வெள்கி மீண்டன என்றால், திருமுட்டத்தப்பன் சிறப்பினைச் செப்பற்கு நான் அருகனோ? ஆயினும், சில செப்புவன் என்று, அத்திமுகன், ஆறுமுகன், வீரன், வடுகன், சாத்தன், பிருங்கி, நந்தி முதலிய கணங்கள்முன், நாக கங்கணக் கைகளைச் சிரமேற் கூப்பி, வித்தை பத்தியுள்ள யாவரும், புத்தி, புத்தி என்று பணிந்து கேட்ப, நாரதமுனியை நோக்கிச் சொல்லலுற்றார்: பிரமன் பெற்ற புதல்வ! பூர்வகாலத்தில், நடுநாட்டுக்கு அரசனாயிருந்த கிருணி என்பான், இழுக்குடைய பல ஈனகுணங்களை யுடையான், துன்மார்க்கத்தில் களிக்குந் துஷ்டன், சூத்திர சாதியில் தோன்றினன், புவியுளோர் அஞ்சும் பொல்லாத பூபாலன், கொடுங்கோல் கைப்பிடித்து வாழுங்காலத்து, ஒருநாள், திண்ணிய பெருஞ் சேனைகள், செறுநாய்கள் சூழ, வேட்டமாடக் காட்டினுட் சென்று நெடுங்காதங் குறுகி, மிருகங்கள் பறவைகளைக் கொன்று, நெடும்பொழுது வேட்டையாடி இளைத்துப், பசிப்பிணியால் பகலெல்லாம் வருந்தித், தண்ணீர் முதல் ஒன்றுங் கிட்டாமல் தளர்ந்து, அக்கினி யென்றும், கிருஷ்ணனென்றும், பெயர்களையுடைய, இரண்டு அமைச்சரோடு, வலயமாதேவிக்கண் வந்து சேர்ந்தான். அன்றிரவில், காத்தியாயன முனிவர் ஆச்சிரமத்தில், மறைவல்ல மாமுனிவர் கோஷ்டி கூடி, பத்தியோடு வேதநாராயணனைக் கமலவல்லியுடன் எழுந்தருள்வித்து, திருவாராதனை செய்து வருங்கால், ஆங்கு, செந்தமிழ்ச்சுவை

பழுத்த, திருவாய்மொழி அத்தியாபக ஓசையும், சதுர்வேத பாராயண ஒலியும், நாகசுரம் முதலிய துளைக்கருவி, தோற்கருவி, கஞ்சக்கருவி, நரப்புக்கருவி, மிடற்றுக்கருவி என்னும், பஞ்சகருவிகளின் ஆரவாரிப்பும், சகஸ்திரநாம அருச்சனை சாற்றும் ஒலியும் சழங்க, முல்லை மல்லிகை முதலிய புஷ்பங்களின் பரிமளமும் நறுங்கலவை மணமும் வீச, கற்பூர விளக்குகளும், அளவில்லாத பலவித ஆவின் நெய் விளக்குகளும், பகல்போற் பிரகாசிக்க, முக்கனிகள், அறுசுவை அலங்கார ஓகரைகள், பக்ஷணங்களைத் திருநாராயணசாமி சந்நிதியில் சமர்ப்பித்துச் சண்டருளச்செய்து, பிரமன், சிவன், பிரசாபதிகளுக்கொப்பான வேதச்செல்வர்கள் குழுமித் தோத்திரஞ்செய்திருப்ப, அவணடைந்த கிருணி என்னுஞ் சூத்திர மன்னன், மந்திரிகளை வெளியே நிறுத்தித், தான் ஒருவனுகக் கோயிலுட் புகுந்து, கண்ணாரக் கண்டு களித்து, அங்கிருந்த முனிவரை நோக்கி, சுவாமிகாள்! தடுப்பரிய பசியால் தளர்ந்தேன். அதைத் தணித்து அருள் செய்யவேண்டும் என்று தன் குசிவுரைத்துச் சாம்பிநின்றுன். முனிவர் கேட்டு, அவன் பசிநோக்கிப் பரிந்து, திருவாராதனம் முதலிய செய்வனவெல்லாம் விரைவில்செய்து, தீர்த்தப்பிரசாதங் கொண்டு, அரசனும் அமைச்சருமாய அதிதிகளது பசி தாகந் தணித்து, ஓரிடத்து எழுந்தருளியிருந்தார்கள். மன்னன், பசி தணந்து, பரமருஷிகள் கோஷ்டியை நோக்கிப், பரமபாகவதோத்தமர்காள்! சாந்தசீலரான உமக்கெல்லாந் தாசன் யான் என்று, சாஷ்டாங்கமாசத் தரைக்கண் வீழ்ந்து சேவித்து நின்று, அச்சுதன் அடியாரது அருள் நோக்கானது, அறக்குறைவை நிறைவாக்கும். பாவமெல்லாம் போக்கும். அருள் அளக்கும். மருள் ஒழிக்கும். செல்வங் கல்வி தெளிவுந் தரும். தீயநோயெல்லாந் தீர்க்கும். குற்றங்களைக் கெடுக்கும். நரகத்தைத் தவிர்க்கும். மெய்ஞ்ஞானம் உண்டாக்கும். பிரமனும் பிஞ்ஞகனுங் காணுப் பெரும்பேறு அளிக்கும் என்று நன்னூல்கள் சொல்லும். அது நான் இங்குச் செவ்வனே தேர்ந்தேன். முனிவர்காள்! காட்டில் வேட்டமாடி வாடிக் களைத்து, இங்கு வந்து உம்மைக் கண்டு உந்தம் அருளுக்கு இலக்கான அடியேன் மனமானது, பூர்ணசந்திரனைக் கண்டு பொங்குங் கடல்போல், பூரிக்கப் பெற்றேன். ஐயன்மீர்! நாயினுங் கடையேன், நான் ஊனெடுத்த நாள் முதலா, உம்மையொத்த உத்தமரைக் கண்டிலேன். கண்ணு! மணிவண்ணு! என்று கரைந்துமிலேன், வாணுளை வீணுக் கழித்

தேன். ஆயினும் அமலனுதிப்பிரான் நிரேதுக கடாக்ஷத்தால், உங்கள் அடியிணைகளை வணங்கப்பெற்ற அடியேன், தேவதேவ பூவராகன் சினகரத்துள், திருவிளக்கேற்றிவருங் கயிங்கரியஞ் செய்யச் சிந்தைசெய்தேன். நீவிர் உகந்து நியமித்திடின், அக் கைங்கரியத்தை, நிழ்த்தக் கடவேன் என்று சொல்லி நின்ருன். ஆங்கிருந்த முனிவரர்க்குள், யாஜ்ஞவல்கியன் என்னும் மாதவன், அப்பனது நிரேதுக கடாக்ஷத்தால் அதிகாரியானுன் இவன் என்றெண்ணி, அருள்சுரந்து, அரசனை விளித்து, அருகிலிருத்தி, மன்ன! அருமையாகிய மனிதப் பிறப்படைந்தார், அழிவில்லாத அமலானந்த பதம் அடையவேண்டின், ஐந்து சம்ஸ்காரம் உடையாராக வேண்டும். பஞ்சசம்ஸ்காரமல்லாத கரும யோக ஞான பத்தி மார்க்கங்கள் பயனின்ரும். தாபம், புண்டரம், நாமம், மந்திரம், யாகம் என்னும் பஞ்ச சமஸ்காரங்களை யொழிந்த, பலவான சம்ஸ்காரங்களெல்லாம், நரமடங்கல் முன்னெழுஞ் சரபகோடிகளாய் நாசமாகும். பாவங்கள் அனைத்தையும், பஞ்சுத்தீயாக்கும். பஞ்ச சம்ஸ்காரம் பெற்றே, பகவத் கைங்கரியங்கள் செய்ய வேண்டும். தீக்ஷையில்லார் செய்யும் பணிகள் தீயர்மாட்டேயாம். ஞானுநுஷ்டானமிவை நன்ருகவே யுடையனுன ஆசான் ஓமத்தீயில் காட்டிய திருவாழி திருச்சங்கங்களைச் சிஷ்யனது தோள்களில் பொறித்து, அவன் தேகத்தைக் கொளுத்தி, அருள் கூர்ந்து, ஞானசரீரந் தழைப்ப வாக்கி, நெற்றிமுதற் பிடரியீருகப், பன்னிரண்டு திருமட்புண்டரங்கள் தீட்டி, தாஸ்யநாமந் தந்து, திருமந்திரோபதேசஞ் செய்து, யாகத்தைச் சமைத்தல் வேண்டும். பஞ்சசம்ஸ்காரம் அடையாதார் செய்யும் சிரார்த்தம், பஞ்சமஹாயஜ்ஞம், முதலான சற்கருமங்களெல்லாம், உமக்காகா எமக்காகா என்று, உம்பரும் ஒறுத்தல்செய்வார். சங்கு சக்கரப்பொறி ஒற்றிக்கொண்ட சாதுக்கள், தமக்காக வந்து அருள்செய்த சற்குருவின் தனியனை அனுசந்தித்து, திருப்பாற்கடலினின்றெழுந்த சுவேதவராகப் பரஞ்சுடர் தூயதிருமேனி அள்ளலாய திருமண்ணை மூலமந்திரத்தின் இழைத்து, திருமால் பாதாகிருதியாக, நெற்றிமுதற் செவ்வே தரித்து, நடுவில் திருச்சூரணத்தைத் தீபாகாரமாகவாதல், தற்பரன் கைத்தண்டமாகவாதல், மூங்கில் இலைபோலாதல், விளங்கத் தரித்தல் வேண்டும். மறவினை யொருவி அறவினை வேட்ட மன்ன! நீயும் பஞ்சசம்ஸ்கார சம்பன்னனுனல், பகவத் கைங்கரியஞ் செய்தற்கு அருகனுவாய்,

என்று உரைப்பக் கேட்ட, சூத்திர மன்னன், சுவாமி! அடியேன் நீவிர் சொன்னவண்ணமே செய்வனென்று துணிவுகொண்டு, தண்டமாக வீழ்ந்து சேவித்து, நியமமேற்று, அமைச்சரோடு தனது நகரடைந்து, அப் பகலிராக் கழித்து, மறுநாள் காலையில் துயில் நீங்கி, அவைக்கண் ஏகி, மந்திரி முதலானோர்க்குத், தான் வலயமாதேவி அடுத்தவாறும், ஆங்கு மாதவர்தம்மைக் கண்டவாறும், ஆன்னோர் அருளமிர்தம் உண்டவாறும் உரைத்து, அவர்கள் அனுமதி கொண்டு, அமைச்சர் முதலாம் அனைவருடன், வலயமாதேவிப்பதிக்கண் வந்து, யாஜ்ஞுவல்கியர் திருவடிகள் தொழுது, கையாத்து, எதிரே நின்றான். யாஜ்ஞுவல்கியர், குளிரக் கடாக்ஷித்து, அவன்மேல் திருமால் திருவடி தீர்த்தம் புரோக்ஷித்து, ஓமத்தீயில் திருவாழி திருச்சங்கத்தை ஒற்றி, அரசன் தோள்களில் பொறித்து, அவன் நெற்றிமுதலாம் இடங்களில் திருமண் புண்டரங்களைத் தீட்டி, அவன் வலச்செவியில் திருமந்திரோபதேசஞ் செய்து, திருநாமஞ் சாத்தித் திருவாராதனந் தந்து, அவ்வாறே விரும்பிய அமைச்சர் முதலானோர்க்கும் அளித்தாராய், அரசனை நோக்கி, கேளாய் கிருணியரசே! திருமுட்டத்தெம்பிரான் சினகரந்தன்னில், ஒரு விளக்கு ஏற்றி வைத்தார் கோடி பிரமகத்திகள், கோடி வேசிகளைப் புணர்ந்த பாவங்களெல்லாம் குலைந்து சுகங் கொள்வாரென்னில், எந்நாளுந் திருவிளக்கேற்றிவைப்பார்தம் பாக்கியத்தை என்னென்று சொல்வேன். ஆதலால் நீ, அம்புஜவல்லி மணாளனது ஆலயத்தில் அன்போடு, திருவிளக்கேற்றி வர ஆசை கொண்டேன், போ என்று புகல, மன்னன் மனமகிழ்ந்து, சற்குருவைத் தொழுது விடைபெற்று, அமைச்சராதியோர் பின்னுற, வேதியர் குலதெய்வமான விமல வராகப்பெருமான் வாழும் சீமுட்டத் தலத்தை மேவி, திருவடி தொழுது ஏத்தி, அக்கோயிலுக்குத் தென்பாலுள்ள, ஓரூரைப் பேசி, விலைகொடுத்து, கொண்டு, திருத்தி, அவ்வூர்க்கு விளக்குவராகநல்லூர் என்று பெயரிட்டு, அவ்வூர்க்கண் ஆநிரைகளை அனந்தமாக வளர்த்து, மேய்த்து, அவற்றின் நெய் கொண்டு, பூவராகவப்பன் பொன்னங்கோயிற்கண், உயர்ந்த மாடங்கள், கூடங்கள், மண்டபங்கள், கோபுரங்களெங்கும், இராப்பகல் மாறாது நிலைபெற்று விளங்குமாறு நெய்விளக்குகள் ஏற்றி வந்தான். அவன் தம்பி அக்கினியென்பான், ஆமணக்கு, இலுப்பை மரங்கள் வைத்து வளர்த்து, அத்தைலங்கொண்டு பூவராகப் பெருமான் உற்சவப் புறப்பாட்டுக்குத் தீவர்த்திகளிட்டு ஒளிவாய்ப்

பச் செய்தான். கிருஷ்ணனென்பான், தாது என்னும் மரங்கள் வைத்து வளர்த்து, அத் தைலங்கொண்டு வராகசாமி உற்சவத்தில், ஒளிவளரச் செய்தான். இவ்வண்ணம், அரசனும் அமைச்சருமாக, ஆருண்டுகள் திருவிளக்குத்தொண்டு செய்து வருநாள், பிரமன் சிருஷ்டி நீங்கிப், பிரளயம் வந்தவாறே, பிரமன் சிவன் முதல் யாவரும் யாவையும் மாண்டு, மாயையிலொடுங்கி, மாமாயனோடு ஒன்ருக் கலந்திருப்ப, பகவான் சிருஷ்டிகாலத்தை நோக்கித், தன்னோடு கலந்திருந்த மாயையைப் பிரித்து, அந்தப் பிரகிருதி தத்துவத்தினின்று மகதாதி தத்தவங்களை யுண்டாக்கி, அவற்றைக் கொண்டு அண்டத்தைப் படைத்து, அதனுள் தனது உந்திப் பூக்கண் வேதாவை யாக்கி, வியஷ்டி சிருஷ்டி செயுங்கால், முன்னம் சீமுட்டத்தில், திருவிளக்குத் தொண்டு செய்த மூவரும், மூலப்பிரகிருதியில் இருக்கக்கண்டு, கருணைகூர்ந்து, அம்மூவரையும், சூரியன், சந்திரன், அக்கினியாமாறு அருள்செய்தான். நாரத! கிருணி, அக்கினி, கிருஷ்ணன் என்ற மூவரும், முச்சுடராய்க், கருமாதிபதிகளாய், மூவுலகும் ஏத்தும் ஆதிக்கியத்தை மேவி, இச்சகத்தின்கண் இன்றும் இருப்பவைத்தது, சீமுட்டத்தெம்பெருமான் திருத்தொண்டாயின், இதனின் மிக்க உயர்வொன்றுளதோ? என்று, சிவபிரான் நாரதமுனிவர்க்குச் செப்பி, மேற்கூறலுற்ருர்.

---

## திருத்துழாய் மான்மியப் படலம்.



கேளாய் பிரமபுத்திர! சுவேதவராக கற்பத்தில், அச் சூகரப்பரமன் விழிக்கண் தோன்றும் ஆனந்தத்துளி முதல் முன்னஞ் சீமுட்டத்தில் நண்ணி, மண்ணில் முளைத்து, மூவுலகுஞ் சுாமுறச் செழித்துத், தொன்முதல் மகிழத், தூய நல்லடியார் மகிழச், துளசியாயது. பூமங்கையை மார்பினும் புவி மங்கையைக் கோட்டினுங் கொண்ட பூவராகப்பெருமான், அன்பரிடும், பொன்னுடை, மணிப்பூண்கள், பலவகைப் போனகாதிகளினும் இச்சையிலனுய், எத்தலத்தினும் இலங்குந் திருத்துளவத்தைத் திருவடி முதல் திருமுடிகாறும் அணிந்து மகிழ்ந்து அதிற் பித்தனுவனென்னில், அதன்பெருமையை யாரே பேசுவார்? துவாரகையில், ஒரு துளசி இலையை இடைக்கு நிறையென்று, சருவபரிபூரண சாமியை நிறை

யிட்டு, அவ்விலையை உனக்களித்த உருக்குமணி பிராட்டியார் நிலைமையை நீயே உணர்ந்தாயென்னில், அதன் மான்மியத்தை அனேககோடி யுகங்களாயினும் அறைதற்கு அரிதேயாம். திருத்துழாயைக் கண்டு சேவித்தார், திசைமுகன் நாடடைவார். ஆயிரம் சொர்ணபுஷ்பங்களை யிட்டு, அரி திருவடிகளில் அருச்சனைசெய்யும் பலன், பசுந்துழாயிலையொன்றைச் சமர்ப்பித்தார்க்கு வரும் பலனில் பதினறில் ஒன்ருகாது. துளசிதாசர் என்ருகி, எம்பிரான் துணைமலரடிகளில், துளசியை அருச்சித்தோர், தொலைவில்லாத பவந்தொலைந்து அந்தமில் சுகவீடடைவார். ஆயிரந் துளசிஇதழ்களை ஆயிர நாமங்கள் சொல்லி அருச்சித்தார், அந்தமில் இன்பத்து அழுந்துவார். மொய்துழாய் நந்தவனம் அமைத்தார் குலங்கள், மூன்று தலைமுறை, செல்வராய் இகபரலோக சுகமெய்தி மோக்ஷமடைவார். துளசி மணிகள் நூற்றெட்டினைத் தொடுத்துப், பூவராகன் தூய திருமார்பில் சாத்தி அணிவார், பாவமெல்லாம் நீங்கி, நினைவெல்லாம் எய்தி, சருவேசுவரன் சச்சிதானந்த பதஞ் சார்வார். வேதநாராயணன் அடிகளில், அஷ்டோத்தர சத நாமங்கள் ஓதித் திருத்துழாய் வீசினர், ஓவில்லா வினையெல்லாம் வீசுவார். மணச்சடங்கினும் பிணச்சடங்கினும், மண்ணிற்பிறத்தல் முதலான எல்லா விதிக்கண்ணும், திருத்துழாயன்றிச் செய்ய விதியில்லை, ஆகலால், திருத்துழாய் ஒப்பு ஒன்றும் இன்றெனத் தேர்வாய் என்று மேற்செப்புவார்.

---

## தேவமிடன் முத்திபெற்ற படலம்.

கேளாய் நாரத! சோழநாட்டில் தேவமிடன் என்று ஒரு பார்ப்பான் இருந்தான். தாய் தந்தை நல்லோர் சொல் கேளான். தீயோர் உறவு கொண்டான். நன்றென்பது நாடான். கண்டார் பழிக்கக் கட்குடியனுனன். பதி நிலம் பொருள் எல்லாம் பாழாக்கினன். ஊனுண்டான். காணும் பெண்களெல்லாம் அலறப் புணர்ந்து கற்பழித்தான். ஊரூராய்ப் போய்ப்போய், உயிர்களைக் கொன்று உண்பான். எங்குள்ளாரும், ஏசி அடித்துத் துரத்த ஏங்கி, ஏழையாய்த் திரிந்து, சீமுட்டஞ் சேர்ந்தான். தீய நீசனும் அவன், பசி நோயால், தெருவின்கண் வீடு தோறும், அம்மா பிச்சை, ஐயா பிச்சை, என்று அலறிச் செல்லுங்

கால், பங்காரு என்னும் நாமங்கொண்ட நாய்கனொருவன், வீட்டு ளிருந்து வெளியே வந்து, முற்றத்தில் நிற்கும் மூடனை நோக்கி, நீ, எந்த ஊர்? யாவன்? என்று வினவ, அவன், ஐய! நான் ஐயமே ற்றுச் சீவிப்போன், என் பசியடங்க அன்னம் பாலித்தருளவேண்டும் என்றான். வைசியன் கேட்டு, பிச்சையேற்றுண்ணும் பேயா! நான், பேராயிரங் கொண்ட பீடுடைய ஞானப்பிரான் கைங்கரி யத்துக்கு ஒரு பிருந்தாவனம் வைத்துள்ளேன். அத் துளசிவனத் தைக் காத்துத், தொண்டு செய்து வருவாயாயின், உனக்கு அன்ன மும் ஆடையுந் தந்து ஆதரிப்பேன் என்ன, பிரஷ்ட பிராமணன், கேட்டு, பிரபுவே! இப்போது என் வயிற்றுக்கு உணவு ஈயின், எப்போதுந் திருத்துழாய் வனந் திருத்திக் காப்பேன் என்ன, நாய் கன் இந்தச் சோறுண்டு, இன்றுதொட்டு, நந்தவனங் காத்துப், பற்பல நறுந்துழாய் செடிகள் நட்டுக், களைகட்டு, திருமாலை கட் டி, சீமுட்டத்தப்பனுக்கும், அம்புயச் செல்விக்கும் சமர்ப்பித்து, வணிகன் தந்த அன்னம் உண்டு, திருத்துழாய்த்தொண்டு செய்து வந்தான். அவனுக்கு எண்பத்தெட்டாண்டுகளாக ஆயுள் முடிவ றிந்த அந்தகன், அவன் மாயவேண்டும் வகைபடிச் சருப்பங் கடிக்கச் சங்கற்பித்த காலை, எரிவிழிப் பாம்பு ஒன்று, ஈனப்பார்ப் பானைத் தேடி வந்து, துளசிவனத்துட் கண்டு, இவனைத் தொட லாகாது, திருத்துழாய் வனத்திடைக் கறித்திடில், நாம் இறப்பது திண்ணம் என்றெண்ணி, அவன் துளசிக்காடு விட்டகலுஞ் சமயந் துருவிக் காத்திருப்பப், பூணூலற்ற பார்ப்பான், நாய்கன் வீட்டுக் குப் புற்கட்டேந்திப் போகுங்கால், அதற்குள் பாம்பு புகுந்தது அறியாமல் சென்று, இல்லஞ் சேர்தலும், அங்கு தனது நண்பன் ஒருவன் சார்ந்து, பூவராகன் சூடிக்களைந்த புனத்துழாய் மாலையைப் பார்ப்பான் கழுத்தில் போட்டுப், பாம்பு! பாம்பு! என்று பழித்தா ன். மதிகேடனான மறைக்குலத்தான், திடுக்கிட்டு, மருண்டு, புற் கட்டைக் கீழே பொகட்டு அலற, வெடுக்கெனக் கடிக்க எழுந்த விஷப்பாம்பு, தலைகிழிந்து சாய்ந்து இறந்தது. யாழ்வல்லோய்! துளசிமாலையால் துஷ்டவேதியன் ஊழ்வலையுங் கிழிந்தது. அவ மிருத்தும் அழிந்தது. ஞானமுனிவ! ஏளனஞ்செய்து எறிந்த திருத்துழாய் மாலை ஏந்தினன், இயமனை வென்றான் என்னின், ஏனத்தகப்பன் அணிந்த துளசியை இன்பிற் கொண்டு அணிவார் மாட்சிமை இயம்பற்பாலதோ? நாரதமுனியே! பின்னர், பாவத் தொழிலில் நின்ற அப்பார்ப்பான் பலநாளிருந்து, மாண்டான்.

இயமன் தூதர் வந்து தாக்க, அக்கால், திருவனந்தனுதி நான்கு தேவதேவர் எழுந்தருளி எமதூதரை எற்றி, அவனை நலமந்தமில்லதோர் நாட்டில் நாட்டினர்.

---

## மணிபோகன் முத்தியுற்ற படலம்.

திருமாலடிய! பிறைசூடிய என் பிரமகத்தியைத் தீர்த்து அருள்செய்த வராகப்பெருமான் முன்னே, பித்தனொருவன் கூத்தாடிப் பிதற்றிப் பெரும்பேறடைந்த கதை சொல்வேன் கேண்மோ: மணிபோகன் என்று ஒரு அறிவில்லா மறையோன், காகமும், நாயுங், கழுவும் வெறுக்கும் உணவுண்டு களிப்பான். பாரோர் நடுங்கப் பாவமே செய்வான். அஜாமேளனுக்கும் அண்ணனாய், கல்மாஷபாதனுக்கும் அக்கிரகண்ணியனாய் இருந்தான், அவன் நாட்டில் அனேக நாள் மழையற்று அழிதலால், அந்தத் துஷ்டன் தாயையுந் தந்தையையும் தமையன்மார் தம்பிமாரையுங் கொன்று, இரத்தத்தைக் குடித்து, அவர் தசை எலும்புகளை மென்று தின்றான். பின்பு அன்பிற் பிழையில்லாத இல்லாளையும் அறுத்துத் தின்றான். பின்னர், அவன் ஆசைப்புதல்வரையும் அரிந்தரிந்து தின்று அகமகிழ்ந்தான். பேயுங் கண்டு நடுங்கும் இப்பேயன், பசு, குதிரை, காக்கை, நாய், கழுகு, கழுதை, கோட்டான், பூனை, குரங்கு, பாம்பு, மயில், மான், ஆமை, கிளிமுதலிய மிருகங்கள் பறவைகளை யெல்லாம், பிடித்துக் கொன்று தின்று கொழுத்தான். கள்ளுண்டான். அவன் கண்படும் மாதரையெல்லாம் இரைச்சலிட்டுத் துள்ளி யோடிப் பிடித்துக் கீழே தள்ளிப் புணர்ந்து, தரையில் தேய்த்துச் சந்தோஷப்படுவான், வேதமோதிய பல வேதியரையும் பலசாதிக் குழவிகளையும், மோதி முறுக்கி மென்று தின்றான். அந்தப் பாவியை, அடங்காத வெறி வந்து பிடித்தது. பிரமகத்தி வெறிபிடிக்கவே, அவன் நாடெங்குந் திரிந்து, சொறி பிடித்துச் சுழன்று, திருமுட்டம் வந்து சேர்ந்தான். அவ்வெறியன், திருமுட்டத்து வீதிதோறும் பிதற்றி இரைந்துகொண்டு, ஓடி, பூவராகன் சந்நிதிமுன் நின்று, ஒன்றும் உன்னாமலே, வெறிக்குத் தோற்றயவா றெல்லாம், முணுமுணுத்துப் பன்னிப்பன்னிக் கூத்தாடிப் பிதற்றிப் பறந்தான். இவ்வாறு அவ்வெறியன் ஸ்ரீமுட்டத்திற் சிலநாள் திரிந்து இறந்தான். அவனுயிரை அந்தகன் தூதர்

வந்து பற்ற, சூரிகள் எழுந்து, தூதரை எற்றித் துரத்தி, வெறிய னைக் கும்பிட்டு, விமானத்து ஏற்றிக்கொண்டு போனார்கள். வீணைவலவ! பிரமகத்திவெறியால், சீமுட்டத்தப்பன் திருமுன் பிதற்றிக் கூத்தாடின னொருவன், பிறவாத பேற்றைப் பெற்று னென்னில், பரதசாஸ்திர முறைப்படி நடனமிடுவார், எய்தும் பலன், பகரற்கரிதேயாமென்று பகர்ந்து பின்னுங் கூறுவார்.

---

## குசமகாராசன் இந்திரனாகிய படலம்.

தேவமுனிவ! கந்தாக்ஷதேசக் காவலன், குசனென்பான், அரசாட்சி செய்துவருங்கால், ஒருநாள் கட்டழகுள்ள சுகி என்னும் தன் பட்டமகிஷியுடன் விளையாட்டாகச் சூதாடிக்கொண்டிருக் கும் வேலை, மறைக்கடலைக் கடந்த பிருகு என்னும் மாதவன், வரக்கண்டு, மன்னவன், மனைவியுடன் எழுந்து எதிர்கொண்டு, முனிவனை மலரடி தொழுது, ஒருயர்ந்த ஆசனத்தேற்றி, உபசா ரங்களெல்லாம் புரிந்திருந்தான். அப்பொழுது, பட்டத்தரசி யாம் சுகி என்னும் பாவை, குளித்து, வெண்பட்டாடை யுடுத்துச் சுத்தமாய் அறுசுவையுண்டி சமைத்து, பகவந்நிவேதனமும் பண் ணி, பிருகுமுனிவர்க்குப் படைப்ப, அம்முனிவரன், உண்டு பரம சந்தோஷமுறக் கண்டு, மன்னன், மாதவனை, ஒரு மெல்லணை யிரு த்தி, மகிஷியுடன் அடிகளை வருடிக்கொண்டிருத்தலும் முனிவன் மகிழ்ந்து, அரசனை விளித்து, மன்ன! நீ, என்னென்ன சாஸ்திரங் கள் ஓதினாய்? என்று வினவ, அரசன், அடிகாள்! என் தந்தை யுள்ள நாளில், வேதம் நான்கும், அங்கம் ஆறும் மற்றும் பலகலைகளும் ஓதினேன். கலைகளைப் பயின்றுவருங் காலத்தில் என்னைப் பெற்றார் இறந்தார். பின்பு நான், உலகோம்பும் பாரம் பொறுத் துப், பெருநூல் நோக்காத பேதையானேன். காமநூல் கற்று, வாட்கண்ணார் கலவியே கருதி, காலமெல்லாம் வாளாக் கழித் தேன். ஐய! தத்துவ விசாரஞ் செய்யாச் சழக்கனானேன். திரு மாலடியார்க்குப் பொருள்கொடுத்து அடிபோற்றி, அவர் செப்பும் நல்வார்த்தை கேளாத ஜன்மம், இருந்தென்ன? இறந்தென்ன? மாதவா! என்னை மாதவன் அருட்கு இலக்காக்கி ஆண்டருள்வாய் என்று தொழுதான். கேளாய் கின்னரமுனிவ! பிருகுமுனிவன், கேட்டு, நிருபனை நோக்கி, மன்ன! மனிதஜன்மம் அரிது.

அதனினும், அரிபத்தனுதல் மிகவும் அரிது. பஞ்சசம்ஸ்கார பாக்கிய வானுதல் அதனினும் அரிது. சீமுட்டஞ் சென்று நித்தியபுஷ்கரணி நீராடி, ஆங்கு தான தரும யாகங்களைச் செய்தல் அதனினும் அரிதேயாம். அரச! நீ எழுதீவுகட்கும் ஓரரசனுயிருந்து என்ன பயனுற்ருய்? "மின்னின்னிலையில மன்னுயிராக்கை". வேந்தே! நீ, சீமுட்டஞ் சென்று, நூறு அசுவமேதஞ் செய்திடின், தேவேந்திரனாய் உலகு ஒருமூன்றும் ஆளுஞ் செல்வம் பெறுவாய். திருமால் உனது தேர்ப்பாகனுந் தம்பியும் ஆவான். தேவரும் முனிவருந் தொழச், சேணுலகில் உன் தேவியோடு சுகந் துய்த்துத் திருநாடும் அடைவாய். நானும் ஆனந்தபவனம் வந்து, அசுவமேதஞ் செய்விப்பேன். புரவல! சிவனும், பிரமனும், இந்திரனும், ஏனைத்தேவரும், வேதியரும், மாதவர், சித்தர்கள்தாமும், ஆழிசங்கு இலச்சினையுடையராய், அழகிய ஊர்த்துவபுண்டரச் செல்வராய், சீமுட்டஞ் சேர்ந்து, நித்தியபுஷ்கரணியில் நீராடி, அசுவத்தமரத்தின் கீழ் அமர்ந்து, ஐந்தாசையை அவித்துத் தவஞ்செய்தே, நினைத்த எல்லாம் பெற்று நிலவினர். நராதிப! நீயுந் திருமுட்டஞ் சென்று, நித்தியபுஷ்கரணி நீராடிப், பன்னிரண்டு திருமண்ணுஞ் சாத்தித், துளசி தாமரைமணித் தாழ்வடங்கள் பூண்டு, தூய்மறையோர்க்குத் தானங்கள் தந்து, அரசமரத்தடியிருந்து, அருமாமனுவை உருவேற்றுவாய்; அனந்தரம் அசுவமேதங்கள் ஆற்றிவருவாய்; பின்பு, இந்திர பதம் பெறுவாய் என்று இயம்பி, விடைபெற்றுத் தமது ஆசிரமத்துக்கு ஏகினர். பின்னர், அவ்வரசன், தன் தலைமகனுக்கு அரசளித்து, வேள்விக்கு வேண்டும் பொருள்களை முன்னே திருமுட்டம் போக்கி, மனைவியோடும் நாற்படை சூழ, பிருகுமுனிவன் ஆசிரமம் பேணிப்போய்ப் பணிந்து, மாணுக்கரோடு அம்மாதவனையும் எழுந்தருள்வித்துக்கொண்டு சீமுட்டக்ஷேத்திரம் வந்து சேர்ந்தான். அந்நிருபன், பிருகுமுனி நியமம் மாருது, மனைவியோடு நித்தியபுஷ்கரணி நீராடி, ஊர்த்துவபுண்டரந் தரித்துப், பூவராகசாமி சந்நிதி சென்று, தாழ்ந்து, முன்னின்று, போற்றி, தீர்த்த சடகோப பிரசாதங்கள் ஏற்று, ஸ்தலவாசிகள் வேட்கையெல்லாந் தந்து, பிருகுமுனிவன் அடி பணிந்து நியமமேற்று, சதாசுவமேதம் ஆற்றி, அசுவத்த மரத்தடியமர்ந்து, பத்தினி பணிசெய்ய, ஐம்பொறிகள் அடக்கித் தவஞ் செய்தான். இவ்வாறு அகக்கரண புறக்கரணங்கள் அடக்கி ஆறுமாதந் தவமியற்றவே, அம்பிகைபாகன் வந்து, பிரமவித்தை உபதேசித்தலும்,

அரசன் இதயமலர்மேல் எம்பிரான் எருந்தருளினான். நிருபன் தன் நெஞ்சினுட் புகுந்த, நீல பிங்கல நிறத்தம்மானை, அகக்கண்ணாற் கண்டு, ஆனந்தத்தேன் உண்டு, தவஞ்செய்யுங்காலை, உள்ளங் குடிகொண்ட புருஷோத்தமன், அரசன் உட்கண்ணுக்குத் தோன்றாமல் மறைய, மன்னன் ஏங்கி, ஆலறி வெம்பினான்; விழுந்தான்; எழுந்தான்; நொந்தான்; கறங்கெனச் சுழன்று அழுதான்; என் புந்தியிற் புகுந்து, நின்பால் ஆதரம் பெருகவைத்த அழகனே! உனது பொன்னுருவைப் பொருக்கென மறைத்தனையே, பொறுப்பனோ? நான் என்று புலம்பினான். என் பிழை காணாது இரங்கி அருள்வாய் என்று இவ்வண்ணம் ஏங்குங்காலை, ஏனத்துருவாய எம்பிரான், ஆகாயவாணியாய் நின்று, கேளாய் அரச! நாளையே பிரமகற்ப மாகும். உலகெலாம் மாளும் பிரளயம் வருதலால், நீ நின் கிழத்தியுடன் தவத்தை விட்டு, யோகத்தால் உடலை மாற்றி, அண்டமுண்டருளும் அப்பன் திருவயிறடையக் கடவாய் என்று தணந்தான். குசமகாராசன், மனைவியுடன் நித்தியபுஷ்கரணி நீராடி, நீண்ட புண்டரம் அணிந்து, அஞ்சலியஸ்தனாய், ஆர்வமீதூர, நெஞ்சமும் வாக்கும் மெய்யும் நெக்குருக நின்று, பூவராகனைப் போற்றி, சுகி என்னுந் துணைவியோடு, யோகசமாதியில் கூடி, உடலை அகற்றலானான். அதுபோது ஓதக்கடல் பொங்கி எழுந்து உலசங்களையெல்லாம் விழுங்கியது. முக்கண்ணன், எண்கண்ணன், ஈராறுகண்ணன், ஆயிரங்கண்ணன் எழுவாய தேவர், மனிதர், திரியக்கு, ஸ்தாவரம் அனைத்தும், மாண்டொழிந்து, பிரகிருதியில் ஒடுங்கப் பிரளயம் வந்தது. சருவேசுவரன், மூல இருளில் ஒடுங்கிய சீவர்கட்கு மூர்த்தந் தர எண்ணி, பிரகிருதியை அசைத்து, மகத்தெழுவாய தத்துவங்களை உண்டாக்கி, அவற்றைக் கொண்டு, பிரமாண்டத்தைப் படைத்து, பிரமனைத் தன் உந்தியில் தந்து, அவனுக்குள் அனுப்பிரவேசித்து, சிவன் முதலான சேதனாசேதனங்களைச் சிருஷ்டித்தான். அக்காலத்து, சீமுட்டத்து அரசடியில் தவஞ்செய்து, தேகத்தை விடுத்த குசனென்பான், அந்தரர், முனிவர், சித்தர், கின்னரர், இயக்கர், கருடர், கந்தருவர், முதலிய பதினெட்டு தேவகணங்கள் போற்றத் தேவேந்திரனானான். சுகியென்பாள், இந்திராணியானாள் என்று, சிவபிரான், நாரதமுனிவற்கு நவின்றகாதை, சௌனகாதி முனிவர்கட்குச் சூதபுராணிகர் சொல்லி, மேலுங் கூறுவார்.

# இந்திராதிதேவர் வானரராகப் பிரமன் சாபமிட்ட படலம்.

கேளீர் சௌனகாதிகாள்! பிருகுமுனிக்கு, நாரதபகவான் பேசியதும் கூறுவன்: ஒருகாலத்துப் பிருகுமாமுனிவன், பிரமவர்த்தக க்ஷேத்திரஞ் சென்று, பிந்துசரசின் கரைக்கண், ஆசனத்தில் இருந்து, பொறிபுலன்களை ஒறுத்துத், திருமகள்கேள்வன் திவ்விய மங்கள விக்கிரகத்தை இருதயகமலத்து இருத்தி, ஏகசிந்தையனுயிருந்து, அரவிந்தப்பாவையோடு அகம்படி வந்து புகுந்த அப்பன் திருவுருவை, அகக்கண்ணுல் கண்டு, அனேக ஆண்டுகள் தவம் ஆற்றுங்கால், மாதவர் சேகரனுன நாரதபகவான், மகதியாழேந்தி, அரிகரி! மாதவ! கேசவ! என்று அங்கு வந்து எதிரே நிற்ப, பிருகுமுனி கண்டு, பேரானந்தங்கொண்டு, உபசரித்து, ஓர் ஆதனத்திருத்தி, நாரணனே முழுவேழுலகுக்கும் நாதன் என உணர்ந்த நாரத முனிவ! மலர்தலைமாநிலத்து அதிசயம் என்னை? வழங்கியருள்க என்று வினவ, நாரதமுனிவன் நன்கு மகிழ்ந்து, பிருகுமுனிவ! சுயம்புஸ்தலங்கள் நூற்றெட்டில் துங்கமாய எட்டினுள்ளும் இரண்டாவதான திருமுட்டத்தைச் சேவித்துவந்தேன். அந்த க்ஷேத்திரத்தில், சரஸ்வதித்தாய் சமைத்த போனகத்தைச் சதுமுகனுகும் நமது தந்தை, பூவராகன் கண்டருளத் தந்து, உசப்பித்த பிரசாதம் ஏற்று அருந்திய பெருங்களிப்பு அடங்காது, இவண் அடைந்தேன். அந்த ஸ்தலப் பிரசாதம் புலையன் தொட்டாலும் புனிதமாகும். அதன் மான்மியத்தை, அருமறைகளில் சாமம் ஆய்ந்துசெப்பாநிற்கும். நந் தந்தையும் முக்கண்மூர்த்தியும், அதன்மாட்சிமையைப் பல நூல்களில் மொழிந்துள்ளார். எண்ணிறந்த தேவர், மனிசராதியர், அங்கு அடைந்து பேறெய்தினர். அதன் சீர் செப்பற்கு அரிது என்ன, பிருகுமுனி கேட்டு, யாழ்வல்லவ! அச்சீருள் ஒன்றேனும் என்னுள்ளங் களிகூர உரைத்தருள் என்னலும், நாரதபகவான், பிருகுமுனியை நோக்கி, முனிவர! நன்கு வினவினை; நீ அறியாதது இன்றேனும், நிசழ்த்து எனக் கடாவியதால், சில செப்புவன் கேளாய்: பூருவத்தில் தேவசபைக்கண் சப்த ருஷிகள் சேர்ந்து, சுருதி ஸ்மிருதியாதி சாஸ்திர வாக்கியார்த் தங்கள் தேர்ந்து வினுவி, ஒருவர்க்கொருவர் பூருவோத்தரத் திறந் தெளியச் சொற்போர் புரிந்துள்ளபோது, எல்லாத்

தேவரும், தேவராசனும், அமுதமுண்ணும் இருமாப்பால் தங்களை மறந்து, விதியை விதிக்கும் பிரமன், வேதமுற்றுணர்ந்த மெய்யறிவனாகியும், விதி நிஷேதம் உணரானாய் காமத்தை அவிக்குந் திறன் அற்றானாய், தான் சிருஷ்டித்த சரஸ்வதியை மகளென்னும் முறை வழுவாகப் புணர்ந்தான் என்னில், மற்றெவர்தான் காமத்தை ஒறுக்கவல்லார்? என்று சபையெல்லாங் கேட்க, ஏ! ஏ! என்று ஏளனஞ் செய்து, கைபுடைத்துக் கலகல என்று நகைத்தார்கள். ஆங்கிருந்த ஆகா, ஊகூ என்னுங் கந்தருவர் இருவரும் சத்தியலோகம் போய், அயனைப் பணிந்து, அதனை உரைத்தலும், பிரமன் கேட்டுச் சினந்து, ஆடவர் இடப்பாகம் களத்திரஸ்தானம் என்று அறையும் அறநூற்படி, என்னை உந்திமலரில் தரும் எந்தை ஆணையால் எனது இடப்பாகம் எழுந்த இசைக்கிழத்தியை, என் மனைக்கிழத்தியாக நுனிநா இருத்தி மகிழும் என்னைப் பிதாமகனென்றெண்ணமல், பிழைபடக் குரங்கு சேஷ்டைகள் செய்து, ஏளனமாகப் பேசியதால், சகலதேவரும் தேவராசனும், காடுகள் மலைகள் ஆறுகள்முதல் காணுமிடங்கள்தோறும், குரங்குகளாய்ப் பிறந்து அலையக்கடவர் என்று சாபமிட்டான். அந்தச் சாபத்தை நாரதன், தேவர்களுக்கு உணர்த்திக் கயிலாயத்துக்கேக, அமரரெல்லாம் பயந்து, அயன் மாட்டு ஏகி, அடிகளில் வீழ்ந்து, எம்பிழைகள் பொறுத்து ஆண்டருள்கஎன்று அழுதார். திசைமுகன், சினந்தணந்து, அருள்கூர்ந்து, தேவர்காள்! நீவிர், சீமுட்டஞ் சென்று நித்தியபுஷ்கரணி தீரத்தில், பொறிபுலன்களை ஒறுத்துத் தவஞ்செய்வீரேல், பூவராகப்பெருமான், உமது அவத்தைப் போக்கி அருள்செய்வான் என்னலும், அவ்வண்ணமே இந்திரன், இமையவர்தம்மோடு சீமுட்டம் எய்தித், திருமகள் நாதனை இதயத்திருத்தி, இந்திரியங்களை அவித்துத் தவமியற்றினன். அக்கால், சுவாயம்பு மனுவும் ஆங்கெழுந்து சுரரோடு கூடித் தவஞ்செய்தான்.

---

## கண்ணுவர் தவஞ்செய்த படலம்.

பிருகுமுனி! சாக்ஷுஷவென்ற மனுவந்தரத்தில், மோக்ஷ இச்சையுள்ள கண்ணுவ முனிவன், பொறிபுலன் ஒறுத்து, வெயில் பனி கருதாது, ஓர் விரலைத் தரையூன்றி, துவாதசாக்ஷர திருமந்திரத்தைச் செபித்து, பராத்பரனை உன்னி, ஓராண்டளவுந் தவஞ்

செய்துவருங்காலத்து, ஓர்நாள், கண்ணுவ! ஸ்ரீமுட்டமென்று ஒரு க்ஷேத்திரமுண்டு, ஆண்டு செல்வாயாயின், உனது அபேக்ஷை கைகூடுமென்று ஆகாயவாணியுரைப்பக், கண்ணுவமுனி, தவத்தை விட்டுத்,திருமுட்டத்தை நோக்கிச் செல்லும் வழியில் புலஸ்திய முனியைக் கண்டு, ஆகாயவாணி உரைத்ததைச் சொல்லி, அந்த ஸ்தலம் எங்குளதென்று வினவ, புலஸ்தியமுனி, கேட்டு, கண்ணுவ! இன்று நான் அங்குப்போய் திருமணாளன் தினந்தினம் என்னுள்ளே திகழவும், அப்பன் திருவடிகளில் பத்தி முற்றவும், வரம் பெற்று இங்கு வந்தேன். நீயும் போய் அருள்பெறுவாய் என்றுரைப்பக், கண்ணுவன் வழியிற் காணும் ஸ்தலங்களைச் சேவித்துத், தில்லைபுட் சென்று, தேவாதிதேவனைப் பணிந்து, ஏத்தி, வெள்ளாற்றினும் மணிமுத்தாநதியினும் படிந்து, ஸ்ரீமுட்டஞ் சேர்ந்து, நித்திய புஷ்கரணி நீராடி, பூவராகனைப் போற்றித், தேவர்களோடு தவஞ்செய்தான்.

---

## சேனைமுதலியார் சேவைதந்த படலம்.

வீரவைணவ! சுவாயம்புமனுவும், சுரரும், சுரபதியும், சூகரத்திருவுருச் சோதியை நாடி, பனி வெயில் குளிர் உஷ்ணம் காற்று மழை தொடக்கத்த யாவும் ஒறுத்து நூறாண்டளவும் உக்கிரமாகத் தவஞ்செய்யுங் காலத்து, ஏனவுருவத் தெந்தை, சேனைமுதலியாரை ஏவ, அப்பெருமான் சின்மயானந்த சோதி சொரிந்தெழுந் திருமேனியும், திருவாழி திருச்சங்கமும் பொற்பிரம்புந் திருவபிஷேகச் சோதியும் திகழச் சேணில் நிற்றலும், தேவர்சோன் மனு முதலானோர், கூத்தாடினோர், சாமகானம் பாடினோர், ஆங்குமிங்கும் ஓடினோராய் ஏத்தித் துதிப்ப, விஷ்வக்ஸேந பகவான், விண்ணில்நின்று, இந்திரனே! இமையோரே! நீவிர், குழாங்களாய்க் கூடி, இந்த ஆனந்தபவனத்தை ஏழு நாட்கள் காறும், தினந்தினம் வலமாகச் சுற்றிச் சேவித்து வருவீராக. பூவராகசாமி, உங்கள் துயர் போக்கி அருள்புரிவான் என்றுரைத்து, அந்தரத்தில் மறைந்தருளினோர். பின்னர், மனு சுரர் சுரபதி மாதவர் யாவரும் ஆனந்தபவனத்தை அன்போடு வலஞ்செய்யலானோர்.

---

## வாசவனுதியர் வனந்தொழுத படலம்.

பிருகுமுனியே! வனஞ் சேவிப்பான், தேவரும், தேவராச னும், முன்னே கீழ்த்திசை நோக்கிச் செல்லுங்கால், ஓர் சரசின் அருகில் சார, ஆங்கிருந்த காடு மாயமாயது. அதைக்கண்ட அமர ரெல்லாம் அதிசயமுற்று, அவ்விடம் விட்டு வடதிசையை நோக்கி நடந்து, பிரமவனத்தில் சுவேத தீர்த்தக் கரையில் தவஞ்செய்யும் முத்தரைக் கண்டு, சதமகன் தாழ்ந்து துதிப்ப, அவர்கள், ஈகையில் லான் செல்வம்போலும், குருநிந்தைசெய்தான் கொண்ட கல்வி போலும் மறைந்தார்கள். இஃதென்ன அற்புதம் என்று இமையோ ரெல்லாம், அங்குநின்று வெள்ளாற்றங்கரை மேவி, அவண், தவஞ் செய்யுஞ்சில விமலரைக் கண்டு, நீவிர் யாவர் என்னலும், நாங்கள், காலரூபர்கள்; கனலித்தேவை நாடித் தவஞ் செய்கின்றோம் என் று அவர்கள் கூற, அவரை ஏத்தி, அமரரெல்லாம் அந்நதியாடி, அதைவிட்டு, மணிமுத்தாநதிக்கண் சார்ந்தபோது, சப்தருஷிகள் வந்து கூட, அவரோடும் அவ்வாற்றில் படிந்து, காத்தியாயன முனி ஆசிரமம் எய்தி, அங்குநின்றுங் கீழ்க்கடல் சார்ந்து, நெற்றி முதற் பன்னிரண்டிடங்களில் திருமண்ணைத் திருச்சூரணத்துடன் அணிந்து, துளசி நளிநாக்ஷ பவித்திரத் தொங்கல்கள் சூடி, துவய த்தை அனுசந்தித்து, தில்லைக்கேகி, தேவாதிதேவனைச் சேவித்து, அவ்வயின் விட்டு, உத்தர காவேரியுற்று, மத்தியான அநுஷ்டான மாற்றிக், கங்கைகொண்டபுரம் எய்தி, அதற்கு அரசனான தண் டகாசுரன் செய்த உபசாரங்கள் ஏற்று, அவன் சொன்னவண் ணம், அங்குநின்று மன்னுக்ஷேத்திரம் அடைந்து, ஆங்கு, பிரம னது அசுவமேதத்தில், பெற்ற சாபந்தீரப் பெருந்தவம் இயற்றும் மதங்கமுனி ஆச்சிரமம் எய்தி, மன்னுபுரி அக்கினி தீர்த்தத்தில் குளித்து, வீரநாராயணன் திருமுன் மேவி, தண்டமாக வீழ்ந்து சேவித்துத் துதித்து, அவ்வயின் விட்டு, அவ்வனமெல்லாம் போ ற்றி வரும் வழியில், அங்கிருந்த, அரிபாரிஷதர், அமரர் காணவே, அந்தரமாக மறைந்தார். அவ்வதிசயத்தை அமரர் கண்டு, வேத னைப் பழித்த பாதகர் முகத்தில் விழிக்கலாகாதென்று மறைந்தார் போலுமென் றெண்ணி, மாலைப்பொழுதில் ஸ்ரீமுட்டம் வந்து, நித் தியபுஷ்கரணிக்குத் தென்பால் சேர்ந்திருந்தார்கள். அவ்விராமு ழுதும் வேதத்தி னின்னொலி, வாச்சியங்களி னொலி, பாடுமொலி

பன்னியர் பன்னியாடு மொலி, ஆராதன வொலி ஆர்ந்துறக் கேட்ட பண்ணவர், இப்பாட்டும் ஆட்டும் எவ்வயின் என்று நாடி, பூவராகப்பெருமான் கோவிலுள், நித்தரும் முத்தரும் போற்றலாகுமிது என்று தேர்ந்திருந்தார்.

---

## சக்கரத்தாழ்வான் சேவைதந்த படலம்,



பிருகுமுனிவ! பொழுது விடிந்தவாறே, அவ்விண்ணவர், நித்தியபுஷ்கரணியில் குடைந்து, துவாதசோர்த்துவபுண்டரந் தரித்து, பூவராகனைப் போற்றி, அமரர் யாவருங் கூடி, முதல் நாள் போல், வனத்தை வலஞ்செய்து, காத்தியாயனமுனி காட்டின்கண் போம்பொழுது, சுரவைரிகளாகிய அசுரர் யாவருங் கூடி, இந்திரனையும், இமையோரையுங் கொன்று ஒழித்தற்கு இதுவே தருணமென் றெண்ணி, அங்குவந்து சாம்பரி என்னும் ஓர் மாயவிஞ்சை ஏவினர். அந்தச் சாம்பரி என்னும் மாயை எய்த நாகபாசத்தால், இந்திரன் முதலான இலேகரெல்லாம், நடை மெலிந்து, ஆவி தளர்ந்து, தள்ளாடி, பூவராகா! என்று மெய்ம்மறந்து, பிரேதம் போல் பூமியில் வீழ்ந்தார்கள். அக்கால், கனலிப்பரமன், திருவாழியாழ்வானை ஏவக், கதிர்கோடி உதித்தாற்போல் ஒளிபரப்பி, ஆழிப்படையரசு, காத்தியாயனக் காட்டின்கண் எழுந்தருளி, தேவரைக் கட்டிய நாகபாசந் தீர்ந்தொழிய எரித்துச் சாம்பரியென்னும் மாயையையுஞ் சாம்பராக்கி, அதை ஏவிய அசுரரெல்லாரையும் அதமாக்கி, அமரர்மட்டு அடுத்தது. சுரருஞ் சோகந் தெளிந்து, கண்களை விழித்துப் பார்த்து, சாம்பரியைச் சாம்பராக்கி, தைத்தியரையெல்லாஞ் சவட்டி, கோடி தபனனிற் பொலியுஞ் சக்கரத்தாழ்வானைக் கண்டு, தாபமெல்லாம் விண்டு, சந்தோஷங் கொண்டு, சிரமேற் கரங்களைக் கூப்பித் துதிசெய்யத், திருவாழி, அருள்புரிந்து மறைந்தது. இந்திரனாதி இமையோரெல்லாம் எழுந்து, முன்போல், வனத்தை வலமாகச் சேவித்து, சீமுட்டம் வந்து சேர்ந்தார்கள். இவ்வண்ணம் இமையோர் யாவரும் ஏழுநாட்கள் ஆனந்தபவனத்தை வலமாகச் சூழ்ந்து சேவித்துவந்தார்கள்.



## பூவராகசாமி சேவைசாதித்த படலம்.

பிருகுமுனிவ! சுரர்கள் யாவரும், இந்திரனும், சுவாயம்பு மனுவும், கண்ணுவமுனியும், மதங்கமாதவனும், மற்றுள்ளாருங் கூடி, எட்டாநாள், நித்தியபுஷ்கரணியில் நீராடி, பன்னிரண்டு திருமண்புண்டரங்களும் பாங்காகத் தரித்து, தாமரை துளசிமணித் தாழ்வடங்கள் பூண்டு, திருமந்திரத்தைச் செபித்து சேனைமுதலியார் சொற்படி, இன்று சேவைதருவான், ஸ்ரீபதி என்று, சிந்தை மகிழ்ந்து, தேவதேவ! பூவராக! எங்கள்முன் எழுந்தருளி இரக்ஷித்தருள்வாய் என்று ஏத்தித் துதித்தார்கள். உத்தராயணம் மாசிமாதம் சுக்கிலபக்ஷம் சூரியவாரம் ரேவதிநக்ஷத்திரம் ரதசத்தமிதிதி கூடிய அன்று, சுவேதவராசப் பரஞ்சுடர் மூர்த்தி, நித்தியசூரிகள் கற்பகமலர் சொரிய, கோடிசூரிய ஒளி கூரச், ஸ்ரீதேவி, பூதேவி, காத்தியாயனிதேவி இருமருங்குந் திகழ, ஐம்படை தயங்க, ஆகாசத்தில் எழுந்தருளினன். இந்திரன் முதலானோர் கண்டு, அளப்பறும் ஆனந்தங் கொண்டு, தண்டந் தண்டமெனத் தரையில் விழுந்தார்; எழுந்தார்; சிரமேற்கரங்கூப்பித் தொழுதார்; ஆட்கொண்டருளையனே! என்று அழுதார்; ஓடினார்; உகந்தார்; ஆலித்தார்; எந்தாய் எந்தாய் என்று ஏங்கினார்; எம்பிரான் வந்தான் என்றார்; சாமகானம் பாடினார்; கறங்கெனச் சுழன்றாடினார்; ஏத்தியேத்தித் துதித்தார். இப்படி, அனல்முன் இழுதென நெக்குருகித் துதிக்கும், இந்திரனையும் இலேகரையும் நோக்கித், தற்பரன், உமது மகத்தான தவத்தால் உள்ளமகிழ்ந்தனன் வேண்டும் வரம் என்னென்ன, அனைவரும் மண்மிசை வீழ்ந்து, எமதப்ப! பிரமன், தன்னைப் பழித்த குற்றத்தினால், எம்மைச் சூகரயோனியிற் பிறக்குமாறு சபித்தான். அவ்வாறே நாங்கள் பிறந்தாலும், அப்பிறப்பில், கடந்த காலம் அறிந்திடவும், உனக்குத் தொண்டுபூண்டு அடிமை செய்யவும், அருள்செய்து ஆட்கொள்வாய் என்று அறைந்தனர்.

## இந்திராதியர் நியமனம் பெற்ற படலம்.

பிருகுவென்னும் பெரியோய்! அருமறையொளிர் திருமணாளன், ஆண்டருள்புரிவாய் என்ற அமரர்மேல் அருட்கண் சாத்தி, ஈராறு சூரியர்காள்! எட்டுக்கோடி வசுக்காள்! பதினொருகோடி

உருத்திரகணங்காள்! இரண்டுகோடி மருத்துவர்காள்! ஏனைத் தேவர்காள்! முனிவர்காள்! மனுவானமன்ன! இந்திர! என்று தனித்தனியே விளித்து, பெரியார் மாட்டு எவ்வாற்றானும் பிழைக்கலாகாது. உங்கள் பிழை ஒழிய வரந்தருவன் என்று திருவாய் மலர்ந்தருளலுற்றான். இந்திர! நீ, வாலியெனத் தோன்றி, நம்மால் நலிபடுமுன், இறுவரம்பில் நன்று காண்பாய். இரவியே! நீ, சுக்கிரீவனாகிக், கேண்மையனாய் இன்புறுவாய். உருத்திர! நீ, வாயுகூற்றிலாய அனுமானாகி, எனது அடிமைக்கண் அன்புடையனாய், ஞான பத்தி வைராக்கிய பூஷணம் பூண்டு, இராக்ஷசரைக் கொசுகெனப் பிசைந்து, எனது திருவடி மறவாது, சிரஞ்சீவியாய் கற்பத்திறுதிகாறும் இருந்து, மேல்வரும் கற்பத்தில், பிரமபட்டம் பெற்றுச், சிருஷ்டிகருத்தாவாய்த் திகழ்ந்துயர்வாய். தேவர்களே! நீவிர் குரங்குகளாகச் செனித்து, எனக்கு அடியாராய்த் தொண்டுசெய்து எனது பதத்தைப் பெறுவீர். கண்ணுவமுனிவனே! நீ, பூருவத்தில், பிரயாகையில், உன்மேலெல்லாம் புற்றுமூடத் தவம்புரிந்தாய்; அதை உணராத இவ்வாயு, யாகஞ்செய்யப் பூமியை உழும்போது உன் தலையிற்றாக்க ஆற்றாமல், நீ வாயுவை நோக்கி, திருமறைச்செல்வனை மூலரூபமுடன் பணியாத தீயனாகக்கடவாய் என்று சபித்தலும், அவன் உன்னை நோக்கிக், கண்ணுவ! நான் அறியாமற்செய்த குற்றத்துக்கு இச்சாபமிட்டதனால், நீ, இராக்ஷசனாகக்கடவாய் என்று சபித்தான். ஆதலால், நீ, இராவணன் தம்பி, விபீஷணன் என்றாகி, என் அடித்தொண்டனாய், இலங்கை அரசு செய்து, கற்பகாலம் வரையினும் இறவாப்பேறு அடைந்து, என்பால் மேவி வாழ்வாய். சுவாயம்புமனுவே! நீ, சூரியகுலத்தில், தசரதசக்ரவர்த்தியாகப் பிறப்பாய்; நான் உன் மகனென்ன வந்து, உனது மரணத்தில் பிண்டோதகந் தருவேன். மதங்கமுனிவ! துங்கபத்திரையாற்றின் சூழல் மேவி, சுக்கிரீவன் வாழும் பொருப்பிலிருந்து வாழ்வாய்; அப்போது நாம் இராவண வேட்டையாட எழுங்கால், நம்மைத் தரிசித்துப் பரமபதம் எய்துவாய் என்று திருப்பவளச் சோதிவாய் திறந்து அருளிச்செய்து, ஏனையோர்க்குங் கருமத்தொடக்கை இயம்பி, மறைந்தருளினான். அவ்வாறே தேவர்களெல்லாம் வானரராகச் செனித்தார்கள். ஜநார்த்தனன், தேவ ரக்ஷணத்தின் பொருட்டு, அவர் செய்த தவத்தால், தினகரனது குலத்தில், இராமன் என்னத் திருவுருதரித்தருளினான். அந்த கனத்தைநோக்கி, இருபத்துநான்கக்ஷர

ங்களாகிய காயத்திரிமந்திரம் சருவாதிகாரமான ஸ்ரீராமாயணமாகிச், சகத்தே வந்து, படனஞ்செய்வார் இச்சையெல்லாம் பாலிக்கலாயது என்று பகர்ந்து பின்னுஞ் சொல்வார்.

---

## வேடன் முத்தியடைந்த படலம்.

பெருந்தவ முனிவ! ஓரதிசயஞ் சொல்ல மறந்தேன்; ஒப்பாருமில்லாத தீய கொடுந்தொழிலுடைய வேடனொருவன், எப்போதுங் கொலைசெய்து குடும்பத்தையும் உடலையும் வளர்ப்பான். காட்டிலுள்ள பக்ஷிகள் மிருகங்களைக் கண்ணி, வலை, வேல், வாள், ஈட்டி, முதலியவற்றால் பிடித்து, அலறக் கொன்று, அவ்விறைச்சியை விற்றுண்பான். ஓர்நாள், அவன், மிருக பக்ஷிகளின் மாமிசமும், மீன்களும் பொதிந்த காவடியைத் தோள்மேல் ஏந்தி, ஸ்ரீமுட்டஞ் சேர்ந்தான். அப்பாதகன், சற்று அவண் இருந்து தாகந் தணந்து சிரமந்தீர்ந்து ஏகவெண்ணி, இறைச்சி மீன் காவடியை நித்தியபுஷ்கரணிக்கண் இறக்கி, அதிற் குளித்து, தாகந் தணிய நீரருந்தி, புலால் மாமிசத்தை அப்புஷ்கரணியிற் கழுவி, காவடியிட்டு, அதைத் தன் தோளின்மேல் தூக்கிப் போவான், பூவராகசாமி கோவிலின் முன்றில் நின்று இரண்டு கைகளுங் கூப்பினன். அக்கணமே அவன் காவடியுடன் நித்தியமுத்தருக்கொப்பான நிறம் பெற்று, கனத்த பாவங்களெல்லாம் அற்று, அந்தமில் ஆனந்த வீட்டுக்காளனாய் அருச்சிராதி மார்க்கமே போனான். சண்கூடாக் கண்டு ஆச்சரியங் கொண்டு, ஈண்டு வந்தேன். மாதவ! அவன் வதைத்த மிருகங்களும் பறவைகளும் மச்சங்களும் சோதியுருப் பெற்று, ஈறிலாச் சுகவீடடைந்தன என்னில், ஸ்ரீமுட்டஞ் சீர் செப்பற்காமோ? என்று பிருகுமுனிக்கு நாரதபகவான் நவின்ற மாற்றம், நேமிவன முனிவர்க்குச் சூதபுராணிகர் சொல்லி, மேலுங் கூறலுற்றார்.

இரண்டாவது க்ஷேத்திர மான்மியகாண்டம் முற்றிற்று.

ஸ்ரீமதேவரவராயபரமதயாகுரவேநம:

ஸ்ரீதேவதேவபூவராகபரப்ரஹ்மணேநம:



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

மூன்ருவது

# தீர்த்தமான்மியகாண்டம்.

## தீர்த்தங்களின் திருநாமப் படலம்.

கேளீர் சௌனகாதி முனிவர்களே! தீர்த்த மான்மியத்தையுஞ் செப்புவன்: தளிர்மதிசூடிய நக்கன், பணிந்து கேட்ப, நர நாராயணமுனிவர் நவிலுமாறு: முன்னாள் திருவனந்த தேவனும், கருடதேவனும், சீமுட்டம் வந்து, பூமிப்பிராட்டியாரைப் பணிந்து, தாயே! எமது அப்பன் இத்தலத்தை விரும்பி எழுந்தருளியிருத்தற்கு ஏது என்னென்ன, பூதேவி, கேட்டுப், புதல்வர்காள்! பாதலத்தில் மூழ்கிய என்னை இடந்தநாள், பக்தவற்சலனது பத மலர் வணங்கி, எனது அங்கத்தில் வாழுங் குழவிகளெல்லாம் பிழைதவிர்ந்து சுகமுற இந்த க்ஷேத்திரத்தின்கண், சுயம்பில் திகழ்ந்தருள்க என்ன யான் வேண்ட, விசுவேசுவரன், வியூகங்கள் தணந்து, பிரமனுலகினும், விரசையின் தீரத்தொளிருந் திருவரங்கத்தும், அமர்ந்திடல் மான, இந்த மகாக்ஷேத்திரத்தினும், ஆதிவராகப்பெருமானாய் அகமகிழ்ந்து எழுந்தருளி அமர்ந்துள்ளான். நீவிரும் இங்கு இருமின் என்ன அனந்தகருடர், அங்கு நித்தர் முத்தரோடு நிகழ்ந்தார். மழுவாள! இத்தலத் தீர்த்தங்களைத் தெரிப்பன் கேள்: நித்தியபுஷ்கரணியின் வரலாறும் மான்மியமும் முன்னரே நிகழ்த்தினேன். அதன் நடுவே விரசை தங்கியுளது. மூவுலகினுள்ள மூன்றரைக்கோடி தீர்த்தங்களும், மொய்த்து, தத்தங்குறைதீர, அந்தப்புஷ்கரணியில் கூடி வசிக்கும் என்னில், அதன் மாட்சிமை வழங்கற்பாற்ருே? முக்கண்ண! இந்த க்ஷேத்திரத்தைச் சுற்றும் ஆயிரத்தெட்டு தீர்த்தங்கள் திகழுமென்ப. தாபதர்காள்! தற்பரன் ஊர்தியாகிய தார்க்ஷிதேவன், மரீசியை நோக்கி, யாதவ! சீமுட்டத்தலத்து ஐந்து யோசனைகள் சுற்றுமுள்ள தீர்த்தங்கள் ஆயிரத்தெட்டாகும். சுற்றும் மூன்று யோசனைக்குள் நூற்றெட்டுத் தீர்த்தங்கள் துலங்கும். இரண்டு யோசனைக்குள் இலகுந் தீர்த்தங்கள் அறுபதாகும். மூன்று யோசனை சுற்றினும்

முனிவர்கள், பாழிகளிட்டு வசிப்பார். அந்தத் தீர்த்தங்களின் பெயர் சில செப்புவன் கேள்: நித்தியம், சக்கரம், சங்கம், பதுமம், கதா, சார்ங்கம், கசகுண்டம், புலகம், புலஸ்தியம், பாபவினுசம், கிருமிஹரணம், பதத்திரம், இரணமோசனம், தாபசுகரணம், ஜாபாலி, பிசாசநாசம், அஷ்டகுஷ்டஹரணம், தேனு, மனு, இந்திரம், குமாரம், காலம், அனிருத்தம், சங்கிருஷணம், பிரத்தியும்னம், வேணு, மலமோசனம், மௌத்கலம், தூருவாசம், ஞானப்பிரகாசம், அவித்தியாநாசனம், பிதுர்க்கள் தீர்த்தம், சத்தகன்னிகாதீர்த்தம், ஜாமதக்கினி, சிந்து, உபேந்திரம், காயத்திரி, தேவி, மன்மதம், மேஷம், வராகம், அசிகரம், அப்பிரதம், சடாயு, வாயு, கண்ணுவம், நளம், வேதம், நாராயணம், பாரத்துவாசம், பக்ஷி, பாண்டவம், பரசுராமம், பஞ்சவரம், அகத்தியம், ஏமம், புண்ணியம், நாரசிங்கம், கந்தருவம், தாமோதரம், பிரசாபத்தி, பயிரவம், ராமேச்வரம், அலாயுதம், கின்னரம், குபேரம், ஆதித்தியம், சந்திரம், சிம்சுமாரம், அசுவத்தம், பீமம், உருத்திரம், இலட்சுமி, அக்கினி, சுவேதநதி, கிருஷ்ணநதி, பார்க்கவம், காத்தியாயனம், வாசுதேவம், அப்பிரசரசு, மிருதசஞ்சீவி, முதலியனவாகும். இவற்றுள், நித்தியதீர்த்த மகிமை நிகழ்த்த அரிதாமென்று இயம்பினுர். கேளீர் ஆழிவன முனிவரே! முன்னொருகாலத்து, நிமலானந்தபரன் அருளால், நித்தியர்கள் தமது இச்சைக்கேற்ப, உருவங்கள் கொண்டு, இவ்வுலகெல்லாம் லீலையில் சுழன்றுவந்து, கீழ்க்கடற் றலத்தின்கண் சில தினங்கள் தங்கியிருப்ப, ஒருதினம் அன்னுர், தம் திருமேனிநின்று வார்ந்த வியர்வைத்தீர்த்தத்துக்குப் பிரமசரசென்று பெயரிட்டு, அதனை அண்டினுர் முத்திபெறும்வரம் அளித்து, அப் பிரமசரசுக்கு மேற்கே ஒன்றரை யோசனைக்கண் ஒளிருஞ் சீமுட்டமேகி, எனத்தப்பனை இதயதாமரைமேல் காணவே, கண்கள் கான்ற, ஆனந்தப்புனல் கயத்துக்கு, நித்தியபுஷ்கரணி யென்று பெயரிட்டுப், பின்னரும், மாசிமாதம் ஆதிநாளில் மருவும் பௌர்ணமியன்று காலையில், கீழ்க்கடலில் ஆடி, சித்திரகூடத்து அப்பிரசரசில் குளித்து, அத்தினம் மாலையில் சீமுட்டஞ் சேர்ந்து, நித்தியபுஷ்கரணியில் நீராடி, பூவராகனைப் போற்றும் புண்ணியர், எண்ணிய அனைத்தும் எய்தி, ஈறிலின்பவீடும் அடையக்கடவர் என்று இயம்பி மகிழ்ந்தார். மாசி மாதத்தில் சீமுட்டத்து எம்பெருமான் திருத்தேர் உற்சவம் சேவித்துப் பௌர்ணமியில், அப்பெருமான் தீர்த்தவாரியாகும் கீழ்க்கடலில், பத்தியுடன் படிவார், ஏழுதீவுக்

கும் அரசராய், மறுபிறப்பில், நித்தியானந்த பதமடைவார். இத்தலத்தின் மாட்சிமை அநதிகாரிகளாகும் பலர்க்கும் செப்பலாகாது. அன்புடைய பத்தினிக்கும், அருமைப் புதல்வர்க்கும், தன் பாதமே கதியென்று பற்றினார்க்கும், சாதுக்கள்தமக்கும் சாற்றலாகுமென்று, நைமிசவன ருஷிகட்குச் சூதபுராணிகர் நவின்று, மேற்கூறுவாரானார்.

---

## மணிக்கிரீவன் குரு குமாரனைக் கொலைபுரிந்த படலம்.

---

மறைக்கிழவரே! நித்தியபுஷ்கரணியின் மாட்சிமை நீடிய இதிகாசங்கள் பன்னூறுண்டு. அவற்றில், மரிசிக்குக் கருடனார் இசைத்த ஓர் இதிகாசம் வழங்குவன் கேளீர்: கேகயதேசத்துக்கு அரசனாய், மணிக்கிரீவன் என்று ஒரு மகாராசன் இருந்தான். அவன் குர்ச்சர முனிவனைப் புரோகிதனாகக் கொண்டு, மனுநீதி வழுவாது, அரசு செலுத்திவருங்காலை, புரோகிதனான குர்ச்சர முனிவன், பௌண்டரீகயாகஞ் செய்ய எண்ணி, தீக்ஷை நடத்திவரும்போது, அம்முனிவன், வேள்விக்குப் பொருள் வேண்டித், தன் புதல்வனை வேந்தன் பால் போய்வா என்று ஏவ, கவுச்சனென்னும் அம்முனி புத்திரன், காவலனை நாடிப்போனான். அப்போது, அரசன், மன்மதனது மலர்க்கணையால் மால் முதிர்ந்து, அடங்காத மோகங் கொண்டு, அழகுடைய தன் மனைவியைக் கூடும் ஆசையில் ஆழ்ந்து, அந்தப்புரத்தில், பத்தினியோடும், பஞ்சணை மஞ்சத்து அமர்ந்து, மதனாகம முறைப்படி அறுபத்துநான்கு கரணங்களும் ஆற்றி, முற்றத் துறந்தார்போல் ஆடையாதிகள் அகற்றி, உயிருருகத் தாழ்ந்து, அணைத்து, காமம் மீதூர, ஆண் பெண் அரவம் இரண்டும் நெருங்கிப் பிணைந்து, உருண்டு, எழுந்து, கலத்தல்போல் இறுகத் தழுவி, இணைந்து கூடிப் புணர்ந்து புணர்ந்து, காமக்கள் ளுண்டு கிடந்தான். முனிமைந்தன், அரண்மனை புகுந்து, முடிமன்னன் தங்குமிடங்கள் முற்றும் ஆராய்ந்து தேடிக்காணாமல், ஒருவரும் புகப்பெறாத அந்தப்புரம் பள்ளியறைக்குள் புகுந்து, நிர்வாணமாய், மனைவியைப் புல்லி, போகம் நுகரும் நிருபனைக் கண்டும் வெள்கி ஒதுங்காது, அருகில் சென்று நிற்ப, அரசன், சினந்து, கண்கள் நெருப்பெழ நோக்கி, உடல் மறந்து, குருவின் மகன்

என்று எண்ணாது, குலைகுலைய எழுந்து, கூர்வாளை யுருவி, முனிமகன் தலையை அறுத்துக் கோபந் தணிந்தான். சிரம் அறுப்புண்டு, முனிமகன் செத்ததை, அவன் பின் வந்த தாபதர் உணர்ந்து, விரைந்து போய், குர்ச்சர முனிவர்க்குக் கூற, முனிவன் கேட்டுப், புத்திர சோகம் பொறாது துடிதுடித்து, துக்கசாகரத்து அழுந்தி, அலறியழுது, மூர்ச்சித்து, எழுந்து, கோபக்கனல் மூள, அரசனைக் கொல்லுவேன் இதுபோது என்று தன் கைத்தருப்பை முடிச்சை அவிழ்த்துத் தரையில் அறைந்தான். அவ்வயின் இரத கஜ துரக பதாதிகளாகிய நால்வகைச் சேனைகள் எழுந்து, குர்ச்சரமுனிவனை நோக்கிப், போர்க்குப்புகுவது யாங்ஙனம்? புகல்க என்று, அஷ்டகாசஞ்செய்து, கொக்கரித்து நிற்க, அப்படைகளை முனிவன் விளித்து, வேந்தன் பால் ஏவ, எண்ணகன்ற அவ்வீரர், அரசிருக்கை எய்தி, அவன் சேனை வெள்ளத்தையெல்லாம் செற்று ஒழித்து, மன்னனைச் சிகைபிடித்து இழுத்து, கயிற்றால் வரிந்து கட்டி, நையப்புடைத்து, ஈர்த்து வந்து, அறிஞனடி கிடத்தி, ஐய! இச்சழக்கனைக் கொல்ல விடைதா என்று, அவன்தலையை அழுத்திப் பிடித்து, வாளை ஓச்சி நிற்பக் கண்ட குர்ச்சர முனி மனைவி, இலக்குமிக்கொப்பாகிய குண்டலி என்னும் பெயர்கொண்ட கோதை நல்லாள், பதறி எழுந்து, கை நெரித்துத் தன் கணவன் பாதத்தைப் பிடித்துக் கழறுவாள்: சுருதி மிருதியாதி நூல்கள் உணர்ந்த சுகுண! எவ்வாற்றானும் உயிர்வதை ஆகாதென்று அறநூல்கள் இசைக்கும். தராதிபனே யாவர்க்குந் தந்தையுந் தாயு மாவான். அருள் பிழைத்து இவ்வரசனைக் கொல்வது அழகோ? நாத! ஆயிரம் மாதரைக் கொன்றால், ஓர் ஆ வதமாகும். ஆயிரம் பசுக்களைக் கொன்றால், ஓர் அந்தணவதையாகும். ஆயிரம் அந்தணவதை, ஓர் சுரோத்திரியனை வதைத்ததாகும். ஆயிரம் சுரோத்திரிய வதை ஓர் அரசவதை யாகும். ஆதலால் இவ்வரசனைச் செய்யும் அத்தியை அகற்றி, அருள்செய்வாய். மாதவ! ஊழ்வினை எவரால் ஒழிக்கலாம்? தெள்ளிய ஞானச்செல்வரேனும் செய்த பூர்வாகத்தைத் திறம்பலாகாதே. நமது காதல் மைந்தன் விதிப்படி காலமோய்ந்தான். பொறுத்தருள்க என்று புகன்றாள். அருந்தவன், கேட்டு, மனமிரங்கித் தான் செய்த சபதம் அவலமாகாது, புரவலனது சிரஞ் சீவி, மொட்டையடித்துக் கொல்லாது போக்கினான். அரசன், ஒருமகனைக் கொன்றபாவத்தை எண்ணி, அழுங்கி, அதைத் தொலைப்பான் முற்றுந் துறந்து, காட்டிற் சென்று, கரணங்களைக் கட்டிக், கட்டைபோல் தவஞ்செய்தான். குர்ச்சரமுனிவன், இறந்த

மகன் உடலைத் தோளிற் கொண்டு, காடுகள் நாடுகள் பல கடந்து, கந்தமாதன பருவதம் ஏகி, அங்கிருந்த ஆயுர்வேதிய தேவரைப் பணிந்து, இறந்த இவ் வென்மகனை எழுப்பித்தருக என்று இரப்ப, அன்னார், இரங்கி, மணி மந்திர மருந்தால், இறந்த மகன் உயிர் தழைத்தெழச் செய்யக் கண்ட முனிவன், மகிழ்ந்து, மகனைத் தழுவி, யாவரும் வியப்பக், கேகயதேசம் ஏகி, மணிக்கிரீவமன்னன் மகன் சோமசேகரன் முடிசூடி அரசாளச் செங்கோல் வழங்கி, அவன் தந்த பொருள் கொண்டு, மைந்தனோடு கூடி, யாகத்தைக் குறைவறச் செய்து முடித்தான். பின்னர், அம்முனிவன், இராஜ புத்திரனை நோக்கி, மன்ன! நமது வேள்வியைக் குறைவற முற்று வித்தாய். வேண்டும் வரங் கேள் தருவேன் என்ன, அரசன், குருபர! எனது தந்தை செய்த குருவத்தி அகன்று உய்யுமாறு அருள் செய்க என்று இறைஞ்சலும், அந்தணன் உன் தந்தையை அழைத்து வா என்ன, நிருபனும் வனமேகித், தந்தையைக் கண்டு, நிகழ்ந்த வரலாறு ஓதலும், மணிக்கிரீவ மன்னன், மகனோடு வந்து, மாதவன் தாள் வணங்கி நின்றான். அவனை நோக்கி, மறையோன், அரச! குருமகனைக் கொன்றான், மூன்றரைக்கோடி நதிகளும் ஒன்றாகக் கூடுமாறு தவமியற்றி, அவற்றில் ஒரேகாலத்தில் குளித்தானாகில், அத்தி அகலும் என்பது அறநூல் துணிபு. நீயும் அவ்வாறு ஆற்றி, அத்தி அகன்று உய்வாய் என்னலும், அரசன் கேட்டு, அவ்வாறு எங்ஙனன் இயையும் என்று கூறி, நகரங் கடந்து, நருமதையாற்றுக்கு ஏகி, அங்கு, கரணங்களை அடக்கிப், பிரமனை நோக்கிப் பெருந்தவஞ் செய்யும் போது, ஓர் பகல், சரஸ்வதிகாந்தன், ஆகாயத்தில் எழுந்து, தராதிப! உன் தவத்தால் மகிழ்ந்தேன்; ஏது வேண்டும் கேள் என்ன, மன்னன் கண்டு, மண்ணிடை வீழ்ந்து, துதித்துக், கைகூப்பி நின்று தேவ! நான் செய்த, குருபுத்திர அத்தி குலைப மூன்றரைக்கோடி யாறுகளை ஒன்றாகக் கூட்டி ஒரேகாலத்தில் குளிக்குமாறு என் குரு நியமித்த வண்ணம், அந்த நதிகளெல்லாம் ஒருபொழுது, ஒரு சேரக் கூடுமாறு வரந்தந்தருள்க என்றான். பிரமன், அரசனை நோக்கி, மன்ன! நீ, கடாவியபடி, செய்தற்கு ஒல்லாதாயினும், ஒன்று கணித்துரைப்பன்: நிருப! முன்னொருகாலத்தில் மூன்றரைக் கோடி நதி நதத் தெய்வங்களெல்லாம், கூடி ஒண்டாமரையாள் கேள்வன் அடியிணை கருதி, உயர் தவஞ் செய்யச், சச்சிதானந்த தற்பரன், அந்தரத்தில் நின்று, தவஞ்செய்யும் ஆறுகாள்! உமது தாகம் என்னையென்ன, நதி நதத் தெய்வதங்கள், கேட்டு,

ஆகாசத்தை நோக்கி, அப்பனைச் சேவித்து, அகமகிழ்ச்சி மீதூர, காச்சோரப் பழிச்சிநின்று அறைவார்: பராபர! பாரின்கண், பல கோடி பாவங்கள் செய்த பலரும், பரிசுத்தமான எமது மேனியைப் பரிசித்து, அவர் பாவங்கள் அனைத்தும் எம்பாலாக்கிப், பர்வனராப் போதலால், நாங்கள் பாவத்தராயினேம். சீதர! தீயாரை நோக்கினர், தொட்டார், கேட்டார், இணங்கினர், சார்ந்தார், உவந்தார், அவரோடும் பேசினர், அவர் நிழல் கால் பட அடுத்தார், அன்னர் ஊர் பெயர் குணமும் உரைத்தார், யாவருந் தீயரே என்று அறநூல்கள் செப்பும். வரத! தீர்த்தங்களாகும் எம்பால், தீண்டி முழுகிப்போம் தீயபாதகர் தம், பழிபடு பலகோடி அத்திகளெல்லாம், சாருந் தலமாயினேம். எமது தீமை தீர வரந்தந்து அருள் செய்க என்று இயம்ப, பூமகள்நாதன், கேட்டுப் புன்னகை புரிந்து, தீர்த்தங்களாகும் புண்ணிய அதிஷ்டான தெய்வங்காள்! ஸ்ரீமுஷ்ணத்தில் நமது திருமேனியில் சிதறி நிறைந்த தீர்த்தக்குளம் ஒன்றுண்டு. அதன் பெயர் நித்தியபுஷ்கரணியாகும். ஆண்டுகள் தோறும், அந்தத் தீர்த்தபுஷ்கரணியில், சித்திரைமாதத்துச் சுக்கிலபக்ஷப் பௌர்ணமிநாட் பகலில், சீதேவி பூதேவி தழுவத் தீர்த்தமாடி மகிழ்வன் நான். நீவிர், அத்தினத்தில், சீமுட்டத் திருப்பதியுற்று, அக்குளத்தில் தீர்த்தமாடி, பத்தியிற் பருகிப், பன்னிரண்டு நாமப் படிவராய், ஏனத்துருவாய என்னை இறைஞ்சிப் போற்றி வருவீராயின், உமது பவமெல்லாம் ஒழிந்து, பரமானந்தபதமும் பெறுவீர் என்று பணித்து, அந்தரத்தில் மறைந்தான். பார்த்திப! நீயும், சீமுட்டஞ் சென்று, அந்நாளில், நித்தியபுஷ்கரணி நீராடி, மாந்தி, அத்திகள் நீங்கி உய்வாய் என்று நிகழ்த்தி மறைந்தான்.

---

## மணிக்கிரீவன் அத்தியற்று முத்தியுற்ற படலம்.

முனிவர! உந்திபூத்தோன் உரைத்த வசனங் கேட்ட மன்னன், உவகைபூப்பத், தனது நகரஞ் சென்று, குருவான குர்ச்சரருக்கு அயன் உரை கூறி, குரச்சரமுனிவனும், குண்டலியென்னுங் கற்பின் மிக்க கோதையும், கவுச்சன் என்னுங் குருமைந்தனுங் கூடி அடுப்ப, மனைவி மைந்தர் முதலானரோடு வழிக்கொண்டு, சிட்டர்கள் வாழுஞ் சீமுட்டஞ் சேர்ந்து, சித்திரைமாதத்துப் பௌர்ணமி நாள் உச்சிப்பொழுதில் நித்திய புஷ்கரணியின்கண், பூவராகப்

பெருமான் பூதேவியர் புனலாடிய பின்னர், மூன்றரைக்கோடி ஆறுகளுங் கூடி, முழுகுஞ் சமயத்தில், மணிக்கிரீவன் என்னும் அம் மன்னன், அகிலரொடும், முழுகிப் படிந்து, குருபுத்திரனைக் கொன்ற, அத்திமுதல், முற்பிறப்பிற் கூடிய பாவமனைத்தும் கொளுத்திப், பலகால் புடமிட்ட பசும்பொன்போல் பொலியும் வடிவனாய், பன்னிரண்டு திருமண் தரித்து, துளசி நளிநாக்ஷமாலைகள் அணிந்து, சூர்ச்சரமுனிவனை முற்கொண்டு, கோவிலுட் புகுந்து, கோலவராகப்பெருமானைச் சேவித்துத், துதிகூறி, தீர்த்த சடகோபன் பெற்று மகிழ்ந்தான். அனந்தரம், அம்மன்னன், அங்கு அமர்ந்து, அனவரதம் நீராடி, முத்தக்காசு சூரணத்தை வராக முழுமுதற்கு இட்டு, எஞ்சிய சேஷம் உண்டு, இருந்தான். இவ்வாறே திருமுட்டத்து எம்பெருமானைச் சேவித்துக்கொணடு மூன்றாண்டிருந்து, மரணகாலத்து, பெரியதிருவடி உபதேசித்த மனுவைப் பெற்று, அந்தமில் ஆனந்த முத்திவீடடைந்தான்.

---

## கதமகாராஜன் மூவாயிரம் பிரமகத்தியில் நின்று நீங்கிய படலம்.

நைமிசவனமுனிவரே! பார்வதிவல்லபன், நாரதமுனிவற்குப் பகருமாறு: நாரத! ஏழுதீவுக்கும் அதிபதியாய், கதன் என்று ஒரு அரசன் இருந்தான். அவன் இவ்வுலகை ஆண்டுவரும் நாளில், காசிராஜன், தான் பெற்ற, ககனத்தவருங் காமுறுங் கட்டழகுள்ள, நற்குண நற்செய்கைகள் அமைந்த, விசோபி என்னுங் கன்னிகைக்குச் சுயம்வரஞ் சாற்றி, ஐம்பத்தாறு தேசத்து அரசர்கட்கும் மணவோலை போக்கினான். அரசர்கள் யாவரும், நால்வகைச்சேனைகளுடன் அங்கு வந்து சேர்ந்தார்கள். முனிவர்களும் வந்து மொய்த்தார்கள். முற்கூறிய, கதமகாராஜன் விசோபி கலியாண ஓலையைக் கண்டு, கடல்போல் சேனை சூழ, மதனும் வெள்கும் அழகுள்ள மாது, நம்மையே மாலைசூடி மணப்பாள் என்று எண்ணிக், காசிதேசம் வந்து, சுயம்வரச்சாலை புகுந்து, கண்டோர் வியப்பச், சிம்மாசனத்து இருந்தான். அக்கால், சகல கலைகளும் உணர்ந்த சங்குச்சிரன் என்னும் முனிவன், காசிராஜன் கன்னிகையை மணம்புணரக் கருதி, பதினாயிரம் மாணாக்கர், தன்னைச் சூழ்ந்துவரக் கலியாணச்சாலை சார்ந்து, தவிசேறி இருந்தான். காசியரசன் ஈன்ற கட்டழகியைத் தோழிகள், மண நீராட்டிப்

பட்டுடை யுடுத்தி, ஆபரணங்களால் அலங்கரித்துக், கைலாகு கொடுத்துச், சுயம்வரச்சாலைக்கண் அழைத்துவந்தார்கள். அவ் விசோபி என்னும் மணப்பெண், தோழிகள் தந்த மணமாலையைக் கைப்பிடித்துக், கடைக்கண்ணால் சபைமுற்றுஞ் சுற்றிப்பார்த்து, வேந்தர் யாவரும் நாண நடந்து, சங்குச்சிரமுனிவன் கழுத்தில் மாலைசூட்டித் தாள் தொழுது நின்றாள். சங்குச்சிரன், அளவற்ற சந்தோஷமுற்று, தையல் நல்லாள் கைம்மலரைத் தன் கரத்தால் பற்றினான். பெருஞ் சபை யிருந்த அரசரெவருங் கண்டு, வெள்கி, விசோபி ஆசை துறந்து, தத்தம் நகரம் மேவினார்கள். எழுதீவும் ஆளும் அரசர்க்கரசனான கதமகாராஜன், இது கண்டு, பொறாமல், தலை துலுக்கி, இச் சவைக்கண், ஐம்பத்தாறு தேசத்து அரசரும் இருப்ப, இல்லந்தோறும் ஓடோடி இரந்துண்ணும், இருபிறப்பாள னொருவன், இவ் வெழின்மிக்க, கன்னிகை கைப்பிடித்தேகுதல், நன்று நன்று என்று சினந்து, மாதவனை வாயில்வந்தவாறு வைது, கோபம் முதிர்ந்து, அம் முனிவன்மீதும் அவன் மாணாக்கர் மீதும், தனது, சேனையை ஏவித், தானும் வில்லை வளைத்து, நாண்பூட்டி, எதிர்த்து, சங்குச்சிரன் மாணாக்கர்தம்மில், மூவாயிரம் முனிவரை உயிர் பதைப்ப முனைந்து கொன்றான். அக்காலை, மாதவன் மாணாக்கரும் முனைந்து, அம்புகள் தெறித்து, அரசன் சேனையைக் கலக்கிப், பின் ஒரு நாகபாசத்தை ஏவி, கதமகாராஜன் கைகளைப் பின்னுறக்கட்டி யீர்த்துப்போய், சங்குச்சிரமுனிவன் தாளில் கிடத்திக், கொல்லப்புகவே, தாபதன் கண்டு, தடுத்து, மூவாயிரம் பிரமகத்திபிடித்த இவன் நம்முன் நிற்கொணாது. ஆதலால் இவனைக் கொல்லாது விடுங்களென்று கூறி, அவனை உயிரோடு ஓட்டி, காசி வேந்தன் ஈந்த கன்னிகையை மணந்து, மனைவி மாணாக்கருடன் தனது ஆசிரமம் புகுந்து, மாணாக்கர் இறந்தது எண்ணி மனம் மறுகி, ஊழை நினைந்து, தேறி, மனைவியோடு கூடி வாழ்ந்தான். கதமகாராசன் தன் நகரஞ் சார்ந்தகாலை, மூவாயிரம் முனிவரைக் கொன்ற பிரமகத்தி மூவாயிரமும், பூத பேதாளப் பேய்களாய்க் கொக்கரித்து, ஆர்ப்பரித்து, எழுந்து வந்து, அரசனைப்பற்றி, மோதி முறுக்கிக், கன்னத்தில் புடைத்துத் துவைத்தலும், வாதனை பொறுக்க வலியற்று, அம்மன்னவன் அழுவான்; பேய்கள் அடர்க்க வாடுவான்; பூதவேதாளங்கள் புடைக்கப் புலம்புவான்; பேயோடாடிய பிஞ்ஞகன்போல் பிரமகத்தி பிடித்தாட்டப் பித்தனாய், ஆமையோடு, நாயோடு, நாயெலும்புகள், பாம்பின்றோல்,

மீன்பீறல், முதலியவற்றைக் கோத்து, மாலையாக அணிந்து, சுடலை பிணச்சாம்பலைப் பூசி, வாயில் வந்தவாறெல்லாம் பிதற்றுவான்; ஐயோ! ஐயோ! என்று அலறுவான்; சிலபோது தெளிவடைந்து திரிவான். இவ்வாறு பல நாட்கள் அவன் இசைக்கொண்ணுத் துன்பமுற்று, சற்றே தெளிவுற்றிருக்குங்கால், தான் செய்த மூவாயிர முனிவர் கொலை எண்ணித் தளர்ந்து, ஐயோ! பிரம ஞானிகளையெல்லாம் ஒரு பெண் நிமித்தமாகக் கொன்றேனே கச்சணிந்த வெம்முலைக் காரிகையாரால் வருங் காமமில்லையென்னில், காசினியில் பிறப்புமில்லை; இறப்புமில்லை; நரகமுமில்லை; எவ்விதக் கேடுமில்லை; காமத்துக்குக் கண்ணில்லை என்பது என்பாலே கண்டேன். அம்மம்ம! இடி விழுந்தும் பிழைக்கலாம்; ஆயுதங்கள் அடிவிழுந்தும் பிழைக்கலாம்; அல்குற் பாம்பு கடி விழுந்து பிழைக்கலாகாது. தீமையாவுந் திரண்டு உருச்சேர்ந்த தெரிவையரை நம்புந் தீயனிற் பேதையில்லை; பெண்களுடம்பு புழுக்கள் நிறைந்தது; முடைநாற்றமுள்ளது; பீளை, சளி, முதல் சார்ந்தது; பீ மூத்திரங்களால் பெருத்தது; நோய்களுக்கு இடமானது. இதை எண்ணுமல் ஒரு பெண்ணைக் கருதிப் பேயனுனேன் என்று தன்னைத் தானே வைது பிதற்றிக் கத்திக் கத்தி, யமுனாநதிக்கண் வந்தான். அங்கு கர்க்கமகாமுனியைக் கண்டு, அடிதொழுது, ஓயாக் கண்ணீரனுய், பெரியோய்! நான் மூவாயிரம் முனிவரைக் கொன்று, பிரமகத்தி பிடித்த பேயன், இவ்வத்திகள் நீங்கிப் பேறு பெறும் உபாயத்தை அருளிச்செய்க என்று புலம்பலும், கர்க்கமுனிவன், அருட்கண் சாத்தி, அரசனை நோக்கிக், காவல! அஞ்சாதே. திருமுட்டம் என்னுந் திவ்விய க்ஷேத்திரத்து, நித்தியப்பெயர் தீர்த்த புஷ்கரணி ஒன்றுளது. அதன்கண் சித்திரை மாதத்துப் பௌர்ணமி நாளில், மூன்றரைக் கோடி ஆறுகளும் கூடி நீராடி ஏகும். அக்காலத்து, நீயும் போய், அப்புஷ்கரணியில் நீராடினுல், பூதவேதாளங்களால் படும் வாதையும், புண்ணிய முனிவரைக் கொன்ற பொல்லாத பிரமகத்திகளும், அனற்பொறிமுன் பஞ்சுபோல் அழிந்துபோம். போ என்ன, கதராசன், கேட்டுக் கடுக நடந்து, சீமுட்டஞ் சேர்ந்து, சித்திரமாதப் பௌர்ணமி நாள் பகலில், நித்திய புஷ்கரணியில், உபயநாய்ச்சிமாரோடு, நிமல வராசப் பெருமான், நீராடியபின், ஆறுகள் மூன்றரைக்கோடியும் ஆர்ந்து, நீராடும்போது, தானும், அத்தீர்த்தத்தில், மூவாயிரந்தரம் முழுகி, மூவாயிரம் பிரமகத்திளும் முரித்துப், பிதிர் தருப்பணமுந் தானதருமங்களுஞ் செய்து, பூவராகனைப் போற்றி, ஸ்தலவாசம் பல நாட்களிருந்து, பின்பு சச்சிதானந்தத் தனிவீடு சார்ந்தான்.

---

## தென்புலத்தார்க்கு இன்பளித்த படலம்.

இசைக்கிழவ! முற்காலத்தில், சந்தாபன் என்னும் ஒரு வேதியன் இருந்தான். அவன் மறைக்குலத்துக்கெல்லாம் மறுவாய்ப் பிறந்தான்; செல்வத்தில் குபேரனை யொத்தான்; தருமமென்பது நாடான்; கனவிலேனும் ஓர் காசுந் தராத உலோபன்; அநியாயத்தில் பொருள் தேடுவான்; இரக்கம் என்பது எள்ளளவும் இல்லாதான்; சந்தியாவந்தனம் முதலிய சற்கருமங்களையுஞ் செய்யான்; ஊர் நடுவில் பழுத்த எட்டிக்கு ஒப்பானுன். உலகளந்த அப்பனை ஒருநாளும் நினைந்தறியான்; அந்த அதமனுக்கு எவ்வுலகினும் உள்ள பாவங்களெல்லாந் திரண்டு ஒவ்வொரு உருவங் கொண்டதென்ன இசைக்கற்பாலரான நூறு புதல்வர்கள் பிறந்தார்கள். தீயவரான அந்நூற்றுவரும், உலகிலுள்ள சீவர்தம்மை என்றும் இமிசைசெய்து காலங்கழிப்பார்; அரக்கர் அசுரரை யொத்தார்; துஷ்ட அரசர்களுக்கு மந்திரிகளாய்த் தோஷமே செய்தார்; உண்மையென்பது உரைத்தறியார்; பொய்யே பேசிப் புலையரானுர்; கற்புடைய பெண்கள் யாவராயினுங் கடிந்து பற்றி, அவர் கற்பழிப்பார்; அநுஷ்டானமற்ற அதமரானுர். கொடியரான சந்தாபனுக்கும் அவன் தனயர்க்கும் சாங்காலம் அணுகலும், இயமனடியார் வந்து, சேவதக்குவார்போல் எற்றிப் பற்றி யேகி, துஷ்டர்களான நூற்றொருவரையும், அவ் வந்தகன் தூதுவர், ரௌரவமாகும் பொல்லாத நரகக் குழியில் தள்ளி, ஓவென்று அறப் புடைத்தார்; அவர்கள் கண்களைக் கழுக்கள் காகங்கள் பிடுங்கவிட்டார்; எரியுந் தணலிடை வாட்டினுர்; புழுக்கள் துளைக்கப் பேய்கள் அடிக்கப் புரட்டினுர்; குடலைப் பிடுங்கினுர்; நாவை அறுத்தார்; சூலத்தால் குத்திச் சுற்றினுர்; குறிகளை அறுத்து வாய்களில் துறுத்துத் தீயிட்டுக் கொளுத்தினுர்; கொதிக்குங் கொப்பரைக்குள் அழுத்தி வறுத்தார்; சிவந்து எரியுஞ் செம்பினுலியன்ற பாவையை அணையத் தள்ளித் தெழித்தார். செக்கில் திரித்தார். இவ்வாறு இயமன் தூதர், எண்ணிறந்த இமிசைகள் செய்ய, நூற்றொரு கொடிய நரகில் கவிழ்ந்து குலைந்து, தாங்கள் செய்த தீவினைகளை எண்ணியெண்ணித் தளர்ந்து நொந்து அளவறுகாலம் அருநிரயத்து அழுந்திக்கிடந்தார்கள். சழக்கரான அவர் குலத்தில், நத்தெழு முத்தென்ன ஓர் சற்புத்திரன் உதித்தான். அறநெறியே கைப்பிடித்த அன்னுன், திவ்வியதேச

யாத்திரை செய்துவருஞ் செவ்வியில், சீமுட்டத்திருப்பதி வந்து சேர்ந்து, நித்திய புஷ்கரணியில் நீராடி, தானங்கள் ஈந்து, பிதுர்க்கள் தருப்பணஞ் செய்து, பூவராக சாமியைப் போற்றினன். அவ்வளவில் நகரத்தில் விழுந்து வெந்து துடிக்கும் அவன் பிதிர்க்களெல்லாம் ஒளிவீசும் இளம்பருவத்து உடலராய், வான்கண்ணே எழுந்தகாலை, எமபடர் சீறித் தகைந்து நிற்ப, ஒளிகொண்ட சோதி சூரித்தேவர், ஆங்கெய்தி நமன்றமரைநோக்கி, ஆங்காணும், ஒளிபெற்று விளங்கும் இவரையோ தகைவது? போங்காணுமென்ன, நமனடியார், அடிவணங்கி, அடிகாள்! நரகழுந்திய இப்பாதகர், நலமுறத் தகுமோ? என்று நவிலலும், தேவதேவன் தூதர், சிறுநகை புரிந்து, அந்தகன் தமர்காள்! இவர்குலத்துதித்த உத்தமனொருவன், அன்று, பூவராகக்ஷேத்திரம் போந்து, நித்திய புஷ்கரணியில் குளித்துத், தூயமறையோர்க்குச் சொர்ணதானந் தந்து, தென்புலத்தார் களிப்பத் தருப்பணமும் செவ்விதாகச் செய்தான். ஆதலால் இவர் ஈறில்லா இன்பமெய்தற்கு அருகமாரென்று இசைத்து, அவரை அந்தமில் ஆனந்த வீட்டுள்ளாக்கியருளினர்.

---

## சுதரிசனராசன் சுத்தமடைந்து முத்தியடைந்த படலம்.

வீணையேந்திய வேதிய! நாராயணமுனிவர் எனக்கு நவின்றவாறு விளம்புவன் கேள்: மகதநாடாண்ட யோகபூஷணன் என்னும் ஓர் மன்னன், கோசல நாட்டரசன் பெற்ற சுமதி என்னும் கோதையையும், விதர்ப்ப ராசன் மகள், சுனித்திரை என்னும் மெல்லியலையும் மணந்து, உலகோம்பி வாழுங்காலத்து, சுமதி வயிற்றில் சுதரிசனன் என்று ஒரு சுதனும், சுனித்திரைக்குக் கிசுகன் என்று ஒரு மகனுந் தோன்றி வளர்ந்தார்கள். இளையாள், தன் மகன் அரசுரிமை பெறவும், மூத்தாள் மகன், இழக்கவும் எண்ணிப், புலையர் குலத்தில் பிறந்த பெண்மகவொன்றும், அதனுடன் பிறந்த ஆண்மகவொன்றுந் தேடி, தோழியகத்தே வளர்த்துவந்தாள். தோழி வளர்த்த புலைப்பெண், பருவமுதிர்ந்து தோன்றக் கண்டு, சுனித்திரை மகிழ்ந்து, ஒருநாள் அரசனைப் பணிந்து, கண்ணாள! சுதரிசனன் என்னும் நமது அருமைச்சுதனுக்குப், பருவமுதிர்ந்ததே.

கலியாணஞ் செய்யக் கருதாதது என்னே? உமக்குங் காடு வா வா என்னுங்கால மாயிற்றே. நாத! நமது காதல் மைந்தன் சுதரிசனனுக்குக் கலியாணஞ் செய்து, நமது கண்களால் கண்டு களிப்பது எப்போது என்றாள். ஆடு நனைதல் கண்டு கோநாய் அழுதல்போல், வஞ்சகச் சண்டாளி வடித்துரைத்த வார்த்தையை நம்பி, மன்னவன் அவட்கு ஓர் முத்தமிட்டு, சக்களத்திப்பிள்ளை என்று சற்றும் எண்ணாத தையல் நல்லாய்! உன் மனதுக்கு இனிய பெண்ணை நாடி, வழங்குவாய், சுதரிசனனுக்கு மணஞ்செய்யத் தட்டின்று என்றான். பார்த்திபன் மொழி கேட்ட பாதகி, தன் எண்ணம் நிறைவேறிற்று என்று, சாலவும் மகிழ்ந்து, பிராணநாயக! சூரியகுலத்தரசர் வழித் தோன்றிய ஒரு சுந்தரப் பெண்மணி யுள்ளாள்; இந்திரனும் பெறுதற்கரிய எழிலுங் குணமும் நடையும் உடையாள், அவள் தாயுந் தந்தையுங், குழவிப்பருவத்தில் சாகவே, அடியேன் செய்த பாக்கியத்தால், அவளை அவள் அண்ணனோடு என்தோழி அகத்தில் வைத்து வளர்த்துவராநின்றேன். அன்ப! அவ்வழகியை நமது அருமை மைந்தனுக்கு உரித்தாக மணஞ்செய்தல் நலமாம் என்ன, அரசன், அகமகிழ்ந்து, சுமதிமாட்டு ஓடி, உரைத்து, மந்திரி முதலானோர்பாலுங் கலந்து, நாளிட்டு, அரசர்க்கும் முனிவர்க்குஞ் சுருள்போக்கி, சுதரிசனனுக்குத் தோழி வளர்த்த புலைச்சியைத், தூய மறையவர் அரசர் முன்னிலையில் மணமுடித்தான். சுதரிசனமைந்தன், சிற்றன்னை செய்த சூதறியாது, இழிகுலப் பறைச்சியைக் கைப்பிடித்து, அவள் கழுத்தில் தாலியும் கட்டினான், அன்று மணச்சடங்கெல்லாம் ஆற்றுங்கால், கொடும் பாவியான சுனித்திரை, தன் கூபத்தில் ஓர் பெண்ணைத் தள்ளி, உயிர்போன அப்பிணத்தை எடுத்து, மணச்சாலையில் கிடத்திப் பெருங்குரலிட்டு அழுது, ஐயோ! யான் வளர்த்த பெண்ணை இழந்தேனே என்செய்வேன் என்று வாயினும் வயிற்றினும் புடைகொண்டு, வாய்வதறிப் புலம்பி, மணங் காணவந்தாரையெல்லாம் பிணங்காட்டி அணைத்து, அலறி இழவெடுத்தாள். கலியாணத்துக்கு வந்தயாவரும், பிணத்தைக் காட்டில் கொடுபோய் எரித்துப், பேரிழவால் ஒருவரும் உண்ணாது ஏகக் கண்டு, உரைப்பரும் பாதகி உவகைபூத்தாள். பின்னர், சுமதியுடன் பிறந்த, சுதர்மராஜனை, விஷத்தை வெள்ளிலையில் ஊட்டிச் சுதரிசனன் கையாற் கொடுப்பித்துக் கொன்று, சக்களத்தியைக் கட்டிக்கொண்டு அழுது, தமக்காய்! கடந்தது எண்ணிக் கரைதலிற் பயனில்லை; நின் தாய்

வீட்டுக்குச் சுதரிசனனை அனுப்பிக், கோசல நாட்டுக்குக் குரிசிலாக் குதல் குணமாம் என்று சக்களத்தி புத்திரனைத் தாரத்தொடும் போக்கித், தன்மகன் கேசகனுக்கு முடிசூட்டி வாழ்ந்தாள். கோசல நாடடைந்த சுதரிசன மகாராஜன், முடிசூடிப் பறைப்பெண்ணுடன் கூடி, ஓர் புதல்வனையும் பெற்று, மூன்றுண்டு அத்தேசத்தை ஆண்டு, பின்பு அம்மான் மகனுக்கு அரசளித்துத் தன் நகரஞ் சார எண்ணங்கொண்டது அறிந்த சழக்கியாகிய சுனித்திரை, மன்னனை நோக்கி, அரசே! உன்மகன் மணந்த பெண், புலைச்சி எனக் கேட்டேன், பறைச்சியை மணந்து, அவள் பால் மகனையும் பயந்த பாவச்சுதரிசனன் பட்டத்துக்கு அருகனல்லன்காண் என்று பகர்தலும், மன்னன் கேட்டு, வயிறெரிந்து, இவ்வஞ்சகி வார்த்தை நம்பிக்கெட்டோம் என்று கிலேசித்து, அப்புலைப்பெண்ணுடன் பிறந் தானை வரவழைத்து, உன்குலம் என்னென்ன, அவன், யான் பறையன் என்னப், பார்த்திபன் கேட்டுப் பெருமூச்சு விட்டு, சுதரிசனச்சுதனை மனைவி மைந்தரொடு வருகவெனச் சுருள் போக்கினன். சுருள் கண்டு, மனைவி மைந்தருடன் கடுக வந்த சுதரிசனப்புதல்வனைத் தாயுந் தந்தையுங் கட்டிக்கொண்டு அழுது, அப்ப! இழிகுலப் புலைச்சி, உனக்கு மனைவியாகச் சுனித்திரை சூதுசெய்தாள் என்று சொல்லித் தேம்பி அலறினார்கள். அதுகேட்ட சுதரிசனனுக்கு அப்போது உண்டாய துக்கம் உரைப்பரிது. யாழ்வல்லோய்! பின்னர் யோக பூஷண அரசன், மறைவல்லாரை விளித்து, நிகழ்ந்தது உரைத்துச் செய்ய அடுப்பது என்னென்ன, வேதபாரகர், வேந்தனை நோக்கி, மன்ன! கொலைஞர் புலைஞர் மாதங்கர் குணுங்கர் சண்டாளராய, இவர்தங் குலமகளைப் புணர்ந்தானை, உயிர் நீக்குமாறு, ஸ்மிருதி வருக்கம் உரைக்கும். ஆதலால் நீ, நின் மகனுதியரை வருச்சித்தலே மனுமுறை என்னலும், நாடும் நகரும் நரருஞ் சுரரும் நலிந்து கலங்கிக் கண்ணீரால் நனைந்து கரைந்தார்கள். சுமதி என்னும் தாய், துக்கமிகுதியால், ஏனக்கடவுளை இதயத்தெண்ணி, யோகுபுரிந்து ஆவி துறந்தாள். யோகபூஷண அரசனுங் கானம் புகுந்தான். சுதரிசனமன்னன், மனைவி மைந்தரோடு துக்கக்கடலுள் அழுந்தி, பூமியை வலமாகச் சூழ்ந்து, ஆங்காங்குறுந் தீர்த்தங்களில் குளித்து, க்ஷேத்திர மூர்த்திகளைப் போற்றிச், சோழநாடு வந்து சேர்ந்தான்.

## குலமழி படலம்.

இன்னிசைமுனிவ! சோணாடடைந்த சுதரிசன மன்னனும், மனைவி மைந்தரும், வானப்பிரஸ்த மறையவராக வேஷந்தரித்து, அவர் பாஷையும் வசனித்து, வேதம் வல்ல விப்பிரரூர் புகுந்து, அவரொடுங் கலந்து பரிமாறி, அதிதிகளென்ன அகந்தோறும் உண்டு, அந்தணர்குல முழுதுங் கெடுத்தார்கள். தான் சண்டாளனானதன்றி, சதுர்வேதச்செல்வரையும் சண்டாளராக்கி, எண்பத்தாறுண்டுகள், அம்மன்னன், இருபிறப்பாளரோடு கலந்து, வாழுநாளன்று, மாசிமகத்தில் கடலாடி, அவ்வூர் வந்த மறையோன் ஒருவன், மாலனான மன்னன் சரிதஞ் சொல்லி, எல்லீரும் ஈனசாதிப் புலையரானீர் என்று இசைத்துப் போனான். அதைக்கேட்ட அந்தணர் அனைவரும், ஆ! ஆ! என்று அலறி, வாயில்வயிற்றில்புடைகொண்டு, அரசனையும் அவன் மனைவி மக்களையும் வைது அடித்துத் துரத்திவிட்டார்கள். அம்மறையோர், இழிவேற்று, டிட்டிமர்களென்று பேர்பெற்றுச், சோழநாட்டில் இன்றுகாறும் இராநின்றார். சில பூசுரர், புலையரோடு உறவுகொண்டு புசித்துக் குலநாசம் புரிந்த நாம், உயிர்மாய்தல் உசிதமென்று, தீவாய் விழுந்திறந்தார். நாரத முனிவ! அப்புரலன் விழைந்த புலைச்சி வயிற்றுதித்தார், பள்ளர் என்றும், மூகக்கத்திரியர் என்றும் பகரப்பட்டு இரண்டுவருக்கத்தரானார்கள். சுதரிசனனைப் புலையனாக்கிய, தோஷம் மிக்க சண்டாளி, புழுபுழுத்து இறந்து புன்னரகடைந்தாள். சுனித்திரை செய்த சூதினால், புலையனான, சுதரிசனமன்னன், துடிதுடித்து, அந்தணாளரை ஆவி நீங்கச்செய்து அவர் குலத்தையுங் கெடுத்த என்னை, எரிவாய் நரகம் உமிழாதே; என்செய்வேன் என்று, பதறி, ஓவென்று அழுது, கரைந்து நைந்து, காவேரிதீரம் மேவி, ஏனமாய் உலகிடந்த என்னப்பா! என் கண்ணே! நான் நரகம் புகுந்து நலியாவண்ணம், அருள் நல்கி ஆண்டருள்வாய் என்று, இருதயகமலத்தில், இலக்குமிகாந்தனை யிருத்தி, பஞ்சாக்கினியைப் பரப்பி, அதன் நடுவே நின்று, அகக்கரண புறக்கரணங்களை யடக்கி, இரண்டு கைகளையும் விரித்து, மூக்கினுனி நோக்கி, அனேகநாள் அருந்தவம் புரிந்தான். இவ்வாறு அம்மன்னன், பற்பலநாட்கள் உக்கிரமாகத் தவமியற்றியும், எம்பெருமான் எழானாக, எண்ணிறந்த தனது பாவங்களை எண்ணி, எரிவீழ் புழுப்போல் துடித்து, ஆழக் குழிவெட்டி, அதில் ஆசாய

மோங்க அக்கினியை வளர்த்து, ஆவியொழிப்பான் கருதி, அனற் குழியை வலம் வந்து, அஞ்சலியஸ்தனாய், அரிகரி! கோவிந்த! சேர! ஸ்ரீமந்நாராயண! அபயம் அபயம் என்று, அலறி, அனல்வாய் விழுங்காலத்து, அமலானந்தன் அருளால், ஆகாயவாணி, மன்ன! அஞ்சாதே, அவசரப்படாதே, நில், நில், அனல்வாய் விழுந்து அவியாதே, சீமுட்டக்ஷேத்திரஞ் சென்று, நித்திய புஷ்கரணியில் நீராடுவாயாயின், பாவமெல்லாம் அனல்முன் பஞ்சென்னப் பறக் கும் என்று பகர்தலும், அரசன் மகிழ்ந்து, அவ்விடம் விட்டு, வழி கொண்டு நடந்து, திருமுட்டத்தலஞ் சேர்ந்து, வலம்வந்து தொ ழுது, நித்தியபுஷ்கரணியில் குளித்து, மற்றும் பல தீர்த்தங்க ளெல்லாம் வலம்வந்து படிந்து பருகிப் பாவமெல்லாம் பாறப் பன்னிரண்டு திருநாமம் அணிந்து, பூவராகசாமி கோ விலுள் புகுந்து, தண்டமாகச் சேவித்து நின்று, கண்ணீர் சோரக் கைச்சிரங் கூப்பிப் போற்றித் தீர்த்த சடகோபன் ஏற்றுத், தெளிந்து மகிழ்ந்தான். சுதரிசனன் என்னும் அம்மன்னன், சில நாட்கள் திருமுட்டத்தலவாசஞ் செய்து, இறுதிகாலத்துச் சுருதிப் பறவையரசு உபதேசித்த திருமந்திரம் பெற்றுத், தீய பாவங்களையுந் தேகத்தையும் ஒழித்து, திவ்விய விமானத்தில் ஏறி தேஜோமய தேகந் தரித்துத் திரும்பாத் திருநாடடைந்தான் என்று, சிவபிரான், நாரதமுனிவற்குச் செப்பியகாதை, சூதபுராணிகர், சௌனகாதி ருஷிகட்குச்சொல்லிப், பின்னுங் கூறலுற்ருர்.

## மரித்தவர் உயிர்த்தெழுந்த படலம்.

கேளீர் மறந்தும் புறந்தொழா மாதவரே! வேதஸ்வரூபனான விகங்கராஜதேவன், மரீசிமுனியை நோக்கி விளம்புமாறு: மரீசியே! ஏமகேசன் மாட்சிமை முன்னர் யான் இயம்பக்கேட்டாயன்றே! அன்னான், சீமுட்டத்தரிக்கு அன்பனாய்க் கரஞ்சிநாடாளுங்கால், அவன்பால், சுதர்மனென்னுந் தூய மறையோன் ஒருவன், புரோகி தஞ்செய்திருந்தான். சுதர்மனென்னும் அத் தூயவன், கங்கையாட வெஃகி, அரசன் மாட்டேகிப், பார்த்திப! கங்காயாத்திரை செய் யக் காதலுற்றேன். போய்வருமளவும், என் புத்திரனும் பத்தினி யும் உன் அடைக்கலமாக அவரை அன்னமும் ஆடையுந் தந்து ஆத ரித்தல் உன்கடனாகும் என்ன, அவ்வாறே, அளித்துக் காப்பேன்; நீ

போய் கங்கையாடி வாவென்று நிருபன் கூறலும், அந்தணன் அக மேகி, மனைவியை நோக்கிப், பாவாய்! பார்த்திபன் மாதந்தோறும் படியளப்பான், அதைப் பெற்று, மைந்தனோடு உண்டு, படிகடவாது, சுகித்திரு; நான் படியளந்தான் பாத கங்கை ஆடிவருவேன் என்று பகர்ந்துபோனான். புரவலன், இரண்டுமாதங்கள், பொருளனுப்பிப் புரோகிதன் மனைவி மைந்தனைப் பாதுகாத்து, மூன்றும் மாதமே, பார்ப்பானைப் பத்தினியைப் பாலகனை முற்றும் மறந்து, படிகொடுத் தனுப்பாது, இராஜகாரியங்களில் பராக்காயிருந்தான். அந்தணன் மனைவி, பிறகு அறுபது நாட்களளவும் அகத்திலுள்ளது உண்டு, அதன்மேல் ஒன்றுங் காணாது, கணவனை கடைப்பிடித்து, வாசற் படி சடவாது, பாலசனுந் தானும் பசிப்பிணியால் நொந்து, உடல் எலும்பாகி, அடைத்த கதவைத் திறவாது, பதைபதைத்து, நாவில் நீரற்று, கண்ணுங் காதும் அடைப்புண்டு, உடலாவி சோர்ந்து, புத்திரனைக் கட்டி யணைத்து, பூவராகனை உள்ளத்தெண்ணிப், புதல் வனோடு உயிரோய்ந்து மாண்டாள். சுதர்மனென்னுந் தூயோன், இரண்டாண்டுகாறுந் தீர்த்தயாத்திரை செய்து, கங்கையாடி, கா ஞ்சிமாநகரம் வந்து, ஒரு பூஞ்சோலையில் தங்கி, மன்னன்மாட்டு, தான் வந்தவாறு உரைக்கத் தூதேவினான். எவலாளன், அரசன் பால்ஏகி, வணங்கி, இறைவ! சுதர்மனென்னும் புரோகிதன், சோலைக் கண் வந்துள்ளான் என்று சொற்றலும், அரசன் கேட்டு, உணர்வு தூண்டப் பதைபதைத்து, ஐயோ! அரசு என்னுங் கள்ளுண்டு, அந்த ணன் மனைவிக்கு அன்னந்தர மறந்த அதமன் யான். அச்சுதா! என் செய்வேன் என்று அலறி, அந்தணன் அகம்பால் ஓடி, காப்பிடு கதவு பார்த்துக் கலங்கிக் காப்பை நீக்கி உட்புகுந்து, சிதிலமாய், எலும் புகூடாகச் சுருங்கிய சவங்களைக் கண்டு, பெருமூச்சு விட்டு, அழுது, நம்பி விட்டுப்போனான்றன் நங்கையைச் சுதனை மறந்து, நானே கொன்றேன். விசுவாச காதசனானேன் என்று வெருவிக், கண்ணி னும் முகத்தினும் வாயினும் கன்னத்தினும் வயிற்றினும் கை களால் புடைகொண்டான்; தரையில் அறைந்தான். இவ்வண் ணம் வாய்வதறி, இரங்கியேங்கி, சற்று ஊகித்து, பூவராகப் பெருமான் முன் சென்று, போற்றி, நாளை கனலில் வீழ்ந்திறத்தலே கடைப்பிடியென்று எண்ணி, சோலைக்கண்ணுள்ள, சுதர்மன்பால், வேதிய! நவமிநாள் இன்று, நாளை நகர் புகுதல் நன்று, நான் வந்து உன்னைக் கண்டு, நகர்வலமாக நாளை அகமுறச்செய்வன். அது காறும் ஆராமத்திருப்பாய் என்று, ஓலை தீட்டிப் போக்கச், சுதர்மனும் கண்டு

சோலைக்கண்ணே யிருந்தான். ஏமகேசன், காத்தியாயனி பிலத்து வாரத்தால் சீமுட்டத்தெம்பெருமான் கோவிலுட் சென்று, அப்பன் திருமுன், தண்டமாக வீழ்ந்து சேவித்து, நின்று, சிரங்கரங் கூப்பி, என்னப்ப! அகடிதகடன! கங்கையாடப்போனன் காதலியும் மைந் தனுங் கவனமின்றி இறக்கக்கண்டேன். தீனதயாள! நின்பால் செப்பி, என் சீவனை மாய்ப்பான் எண்ணிவந்தேன். அன்னர் உயிர்த்தெழ அருள்செய்தாள்வாய் என்று அழுதான். பூவராகப் பெருமான், புரவலனை நோக்கிப், பிள்ளாய்! அஞ்சாதே, என்பால் அநன்னிய அன்பனுகும் உன் குறை, என் குறையன்றே? நரா திப! இறந்து உலர்ந்து என்புக் கூடாய அச்சவங்களை, நாளை இங்குக் கொணர்ந்து, நமது விமானத்துக்கு அக்கினிபாகத்தில், குரோசதூரத்தில் விளங்கும், மிருதசஞ்சீவி தீர்த்தத்தில் தோய்த்தா யாயின், உத்தமியும் மைந்தனும் உயிர்த்தெழுவார் என்று திரு வாய்மலர்ந்தருளினுன். அரசன், ஆனந்தக்கூத்தாடி, பிலவழியே நகர்போந்து, சீவன்போன தையலையுந் தனயனையுஞ் சிவிகைமேல் ஏற்றிக்கொண்டு சூரியன் எழுமுன், பிலவழியால், சீமுட்டஞ் சேர்ந்து, மிருதசஞ்சீவி தீர்த்தக்கண் சென்று, எலும்புக்கூடாக உலர்ந்த இரண்டு பிணங்களையும், அத்தீர்த்தத்தில் ஆட்டினுன். அக் சால், வேதியன் மனைவி, மகனேடு உயிர்பெற்று, நாணம், அச்சம், பயிர்ப்பொடு விளங்கும் வாட்டமில்லாத நன்மேனியுடன், மைந் தனை அணைத்துக்கொண்டு, இலங்கைக்கண், நெருப்பினின்றெழுந்த பிராட்டிபோல் நீரினின்றெழுந்து, நிருபனுதியரைக் கண்டு, வியந்து நிகழ்ந்தன உணர்ந்து, புரவலனேடு காஞ்சியூர் புகுந்தாள். புரவல னும் பொழிற்கண் இருந்த புரோகிதனை ஊர்வலஞ் செய்வித்து, மனைக்கண் இருத்தலும், பூசுரன், மனைவி மைந்தனுடன் கூடி வாழ் ந்தான். மரீசிமுனிவ! அத்தீர்த்தம் ஆங்கிரசமுனிவன் வகுத்த தாகும். நான் அமுதங்கொண்டு போம்பொழுது, அதினின்றுஞ் சிந்திய திவலை சேர்ந்து திகழ்கின்றது. சித்தர் கூடி மருந்து கூட்டி வைக்கச் சிறந்தது. கலிகாலத்தில், விபரீதகாரியமாம் என்று, விஷ் வக்ஸேநநாதர், அத்தீர்த்தத்தின்கண் மூழ்கினுரெவரும் விரும்பிய யாவும் பெறவும் ஈந்தருளினுர் என்று, கருடபகவான் மரீசி முனிக்குக் கழறிய சாதை, நேமிவனமுனிவர்க்குச் சூதமுனிவன் நிகழ்த்தி, மேலும் விளம்பலுற்றுர்.

---

## முசுண்டாசுரன் வரலாறுரைத்த படலம்.

அந்தணர்காள்! முன்னொருகாலத்தில் முசுண்டன் என்னும் அசுரனொருவ னிருந்தான். அண்டம் நடுங்க ஆரவாரிப்பான்; கடல்போல் பருத்த கருநிறத்தான். வளைந்து நீண்ட பற்களும், முழஞ்சுபோல் மூக்குத் தொளைகளு முடையான். பருவதங்களைப் பிடுங்கிப் பந்தாக எறிவான்; மாதவர்தம்மைப் பற்றி மசகமென வயிற்றிடுவான்; வேதியர் பசு பக்ஷிகளை விக்காது விழுங்குவான்; ஏரியுடைத்தே வாயால் பருகுவான்; நாடு நகரங்களை நெருப்பிட்டுக் கொளுத்தி நகைப்பான்; உம்பரெல்லாம், அவன் கண்படாது ஒளிப்பார்கள். அவன் அண்டமெல்லாம் உலாவி, கண்படும் உயிரையெல்லாம் வாயிலிட்டுக் கசகசவென்று மென்று தின்றுவரும்போது, ஒருநாள் நாரதமுனிவனைக் கண்டு, நகைத்து, நாரத! நடுங்காதே, நான் உன்னை ஒன்றுஞ் செய்வதில்லை; ஒப்பில்லாத வித்தையும் புத்தியுமுடையாய் நீயென்று உணர்ந்தேன், ஆதலால் உன்னை ஓர் உண்மை உசாசுவன்: முப்பத்துமூன்றுகோடி தேவர்கட்குள், தன்னை எண்ணித் தவஞ்செய்தார்க்குச் சீக்கிரம் மூன்னின்று, விழைவெல்லாம் அளிக்குந் தேவன் யாவன்? என்ன, நாரதபகவான், அசுரரேறே! ஆனைத்தோல் போர்த்து, அரவும் எலும்பும் கொக்கிறகும் அறுகும் ஆத்தியும் அணிந்து, ஆறும் பிறையுந் தரித்து, மான் மழு ஏந்தி, பூதவேதாள பிசாசகண நாதனாய், கைலைமலையை இடமாகக்கொண்டுள்ள, காமகோடி வல்லபனான, கந்தனைப்பெற்ற, நீலகண்ட மாதவனே, கடுகிவந்து வரந்தருங் கடவுளாவான் என்று கழறக்கேட்டு, முசுண்டன், மகிழ்ந்து, முனிவ! உண்மை நாடியுரைத்தனை, நன்றுநன்றென்று, அவ்வசுரன், தொடை இடை தலை கால் முழுதுஞ் சுடலைப்பொடி பூசி, பொறி புலன்கள் அடக்கிப், புராரி தாளைப் புந்தியில் வைத்துப், பஞ்சாக்ஷரத்தைச் சபித்துப் பற்பல காலந் தவஞ் செய்தான். விருஷபவாகனன், விண்ணில்நின்று விளித்து, அன்புடைய அசுர! நீ, விருத்தாசலம் மேவித் தவம்புரிவாயாயின், யான் அங்கு வந்து, நீ விரும்பிய வரங்கள் ஈவேன் போ என்று புகன்று மறைய, முசுண்டனும், விரைந்து, விருத்தாசலஞ் சென்று, யாவுந் துறந்து, விஷகண்டனை நோக்கித் தவஞ்செய்தான். சிவபிரான், முசுண்டன் முன் சேவேறித் தோன்றவே, எழுந்து, கைகூப்பித் தாழ்ந்து, தண்டஞ்செய்து, துதிபல சொல்லித் துள்ளி

ஆடிப்பாடும் அசுரனை நோக்கி, முக்கண்மூர்த்தி, மகிழ்ந்து, மைந்த! நின் தவத்தை மெச்சினேன்; நீ விரும்பிய வரம் என்னை? தடையின்றித்தருவன் கேளாய் என்ன, அசுரன், களிகொண்டு, என்னப்ப! நான் உன் வரங்கொண்டே, உன்னைக் கொல்லவும் உன் மனைவியை மணந்து கூடிவாழவும் வரந்தருவாய் என்னலும், பிஞ்ஞகன், உவந்து, எனக்குவந்த அடியனே! நீ என் உயிரை மாய்த்து, இவ்வுமையையும் மணந்து, வாழுமாறு வரந்தந்தேன் என்று இமையவரும் ஏனை யாவரும் ஏங்க இசைத்தான், அசுரன், பேருவகை பூப்பக், கேளாய், அன்பர்க்கெளிய! நீ தந்த வரத்தை, நின்பாலேயன்றோ சோதித்து அறிதல் வேண்டும்? ஆதலால், உன்னோடு பொருது, உன்னைக் கொல்வேன் என்று, இடிபோல் உரப்பிப், பற்றிச்சிதைக்க எண்ணி, எழுந்து, மேல்விழுந்தனனாகவே, முக்கண்மூர்த்தி வெருவிப், பதைபதைத்துப் பிறை சங்கை முதற் பலவும் ஆட, பின்னங்கால் பிட்டத்திற் படும்படி, காற்றிலுங் கடிதோடினான். நங்கைபங்கன் ஓடக்கண்ட, எரிவிழி அசுரனும் நமசிவாய! நீ, எங்கே ஓடி ஒளித்தாலும், நான் உன்னை விடுவேனோ என்று நணுகித் தொடர்ந்தோடினான்.

---

## சிவனாட்டுருவகற்றிய படலம்.

அசுரன், தன்னைத் தொடர்ந்து ஓடிவரக்கண்ட, அரவாபரணன், ஏங்கி, எண்ணாது மெண்ணிக், காடோ, நாடோ, நகரோ, ஊரோ, கடலோ, மலையோ, வீடோ, வெளியோ, விழலோ, புதரோ, குளமோ, பொழிலோ, மண்ணோ, விண்ணோ, எங்கெங்கும் ஓட, அங்கங்குந் தொடர்ந்து அசுரன் ஓடத், தேவரும் மாதவருங் கண்டு, அம்மம்ம! முன்னாள், ஓடிய விருகாசுரனும் இவனுக்கு முன் நில்லான். இந்நாள் இந்தச் சிவன், எவ்வாறு உய்வான் என்று திகைத்து இரங்கினார்கள். கங்காதரன், கலங்கிக், கண்களில் நீர்வார எங்கும் கடிதோடித், தண்டகவனஞ் சார்ந்து, பூவராகன் பொன்னங்கழலிணை புந்திவைத்து, அஞ்சலியஸ்தனாய், ஆனையழைக்க ஏன் என்று ஓடிய, அருட்கடலே! என்னை ஆண்டருள்வாய், நின்சரணே சரண் என்று போற்றினான். அக்காலத்து, ஆகாயவாணி, அரனே! அஞ்சாதே! இவ்வாட்டுமந்தையுள் நீயும் ஓர் ஆடாய்ப் புகுவாய், ஆடுகள் தின்னற்கு அடிக்கும் அசுரன் அவனியிடந்தஅப்பனால் அழி

வான்என்றுரைத்து அடங்கியது. அவ்வாறே, சிவன், அம்மந்தையில் ஆடாய்க் கலத்தலும், அசுரன், அவ்வுளவுணர்ந்து, பலநாளோடி இளைத்த நமக்குப் பசி தீருங்காலம் இதுவென் றெண்ணி, அம்மந் தையுள் புகுந்து, ஆடுகள் அத்தனையும் அள்ளியள்ளி வாயிலிட்டு, மென்றுமென்று தின்று, சிவனாகும் ஆட்டையும் பிடித்து விழுங்க நிற்குங்காலை, பராத்பரன், ஒரு பன்றியாய், ஆங்குப் பொலிதலும், அசுரன், கண்டு, இஃது ஒரு காட்டுப்பன்றியென்று எண்ணி, இதை முதலிற்கொன்று தின்று, சிவனாகும் ஆட்டையும் பிடித்துத் தின்பேன் என்று, கையால் பற்ற, அப்பனும், அவன் மேல் பாய்ந்து, சற்றுநேரம் விளையாட்டிற் சமர்செய்து, அசுரனேவிய அஸ்திர சஸ்திரங்களை அவலமாக்கி, அம் முசுண்டனைக் கொன்று, மோத மோடு உலாவினன். சுரர்களெவரும் பூமாரிபொழிந்து துதித் தார்கள். ஆடாகிய சிவன், ஐயனைப்பணிந்து, இவ் வாட்டுரு அகலுமாறு என்னென்ன, அப்பன், அருட்கண் சாத்தி, பிள்ளாய்! நமது விமானத்துக்கு வடபால், அசிகமென்னுஞ் சரசுஒன் றுண்டு. அத்தீர்த்தத்திற் போய் ஆடுவாயாயின், ஆட்டுருவக லும், என்று அறைந்தருளி மறைந்தான். அரனாய ஆடு, தலை யையுங் காதுகளையும் ஆட்டி, சிறுவாலை அசைத்து, முன்காலி ரண்டையுந் தூக்கித் துள்ளிக் குதித்து, ஓடி, அசிகதீர்த்தத் தில் ஆடவே, பள்ளையுரு அகன்று, பண்டையுரு எய்தவே, சிவன் கண்டு, எம்பிரான் சீரருள் எண்ணி, பூவராகப் பெருமான் திரு முன்பே போய், தண்டமாக வீழ்ந்து எழுந்து, சரீரம் புளகுற நின்று, தலைமேல் கைகூப்பிப் போற்றித், தீர்த்த சடகோப பிரசாதம் ஏற் றுப் பேரருளாளப் பெருமான் திருவருளால், கைலைக்கேகிப் பெ ண்டு பிள்ளைகளுடன் இனிது வாழ்ந்தான்.

---

## தீர்த்தோற்சவ பலமுரைத்த படலம்.

கேளீர் முனிவரரே! கருடபகவான், மரீசிக் குக்கழறுமாறு: மரீசி முனிவ! சீமுட்டக்ஷேத்திரத்தைச் சுற்றும் ஐந்து காதத்துக் குள் ஆயிரத்தெட்டுத் தீர்த்தங்கள் உண்டு. காதம் மூன்றுக்குள் நூற் றெட்டுத் தீர்த்தங்கள் காணும். நித்திய தீர்த்தத்தின் நடுவே, விர ஜை, கங்கை, யமுனை, சரயு, சரஸ்வதி, கோதாவரி, பீமா துங்கபத் திரை, காவேரி, சிந்து, தென்குமரியாதி நதிகள் சேர்ந்திருக்குமா

யின், இதன் சீர் யாவரே செப்பற்பாலர். அமலவராகப்பெருமான் விமானத்துக்கு மேற்கே, அரை யோசனைக்குள், சக்கரம், சங்கம், கதை, பதுமம், சார்ங்கம், என்னும் அருவினையைப் போக்கும் ஐந்து தீர்த்தங்கள் உண்டு. அவற்றுக்கு அப்பால், அரையோசனைக்குள், கசகுண்டம் ஒன்றுண்டு. பூர்வம், முழு மறைகளுணர்ந்த பயிங்கன் என்னும் முனிவன் பால், நூறு முனிவர்கள் கல்வி பயின்று, தமக்கு நேராவார் தரணியில் ஒருவரும் இலர் என்று தருக்குற்று, மதியிற் சிறந்த வசிஷ்டரை யிகலி, வாக்கியப் போர் செய்து, பரிதபிப்ப, அவரிட்ட சாபத்தால், ஆரணியத்தில் யானைகளாய்ப் பிறந்து, அளவறுகாலம் அலைந்து பெரியார்க்கு இடுக்கண் விளைத்தலும், சிஷ்டர்கள், பூவராகனை வேண்டிப், பலி செய்ய, அப்பன், சிங்கமாய், அக்கயங்களைக் கொன்று, அருள்செய்தான். ஆங்கமைந்த கசகுண்டமது. அதில் ஆடினார், கல்விச்செருக்கால்ாய பாவங் சழலப்பெறுவார். அதற்கு அப்பால், புலகம், புல்ஸ்தியம், ஜாபாலி, பாபநாசம், கிருமிஹரணம், இரணமோசனம், சுரவிநாசம், அஷ்டகுஷ்டஹரணம், பிசாசநாசம், தேனு, மணிமௌத்கலம், மார்க்கண்டம், எம்பெருமானால் மாண்ட தண்டகனை நான் மாய்த்தேன் என்று இறுமாந்த தேவராஜன் பாவந் தீர்த்த இந்திரதீர்த்தம், கண்ணுதல் இளையகுமரன், வேதகம்மியம் அறியாது, பகவந்நிந்தை செய்த பாவமகற்றிய குமாரதீர்த்தம், அதற்கு அப்பால், தூருவாசமுனி தனக்கு மந்திரசக்தி யுண்டாகத் தவஞ்செய்த தூர்வாசம், ஆகிய தீர்த்தங்கள் திகழும். வாயுதிக்கில், ஞானதீர்த்தம் ஒன்றுண்டு. அதில் குளித்தால் அறிவுண்டாகும். அதற்கு அருகேயுள்ளது அவித்யாநாசனம். அதிலாடினூர், வித்யாசம்பத்து அடைவார். அப்பால் அரைக்குரோசத்தில், அரம்பை, ஊர்வசி, சுந்தமாலை, மேனகை, பிங்களை, திலோத்தமை, கிருதாசி என்னும் ஏழுமாதரும், யாதவகுலத்தில் மைந்தனாக அவதரித்த மறைமுதலைப் புல்லியணையும் உடல் வேண்டித் தவங்கிடந்து, இராதையெழுவாய, எழுபத்தினிகளாய் ஆயர்கொழுந்தை மேவி யணைந்த சத்த கன்னிகைகள் தீர்த்தம் உண்டு. அதில் நித்தங் குளித்தார், நிமலானந்த சுகம் பெறுவார். அதற்கப்பால் நூற்றெட்டு யோகினிகள், இலக்குமியை நோக்கித் தவஞ்செய்த யோகினிதீர்த்த முளது. அதன் அருகில் சதுர்வேத தீர்த்தம் ஒன்றுண்டு. அதற்குஅப்பால், ஜாமதக்கினிதீர்த்த முளது. அதற்கருகே, காலதீர்த்தமுண்டு. அப்பால், கலிகாலத்தில், தாமதத்தால் கெடுங்

கேடரெல்லாம் உய்யும்வண்ணம், திரிதண்டம் ஏந்திய ஓர்வரயோகி, மிக்க பசியால், அருந்ததிநேர் ஓர் அம்மையைப் பலிகேட்ப, அவள், அன்னமுளது, நீர் இல்லை யென்று அறைதலும், அம்மே! இங்குப் புனல் உளதென்று, வேணுதண்டத்தால் பாரைக் கல்ல, அதினின்றும் புனல் எழுந்தது; அதுகாண் வேணுதண்ட தீர்த்தமென்பது. அதற்குஅப்பால்,பிதுர்க்கள் தீர்த்தமுளது. அதுபிதுர்க்களெல்லாம் சுவேதவராகனை எண்ணி, உடல்வருந்தத் தவஞ்செய்யுங்கால், ஏனத்தப்பன், முன்னின்று, உங்கள் சந்ததியார் எவ்வுலகத்திருந்தேனும், உம்மைக் குறித்துச் செய்யுஞ் சிரார்த்தங்களை, வசு ருத்திர வருக்கர் உருவத்தால், அகமகிழ்ந்து ஏற்று, சுவர்க்கத்தில் சுகமுறச் செய்வேனென்று அருள்செய்த தீர்த்தமாகும். வடதிசையில் அசுவினி முதலாயநக்ஷத்திரப்பெயரால், இருபத்தேழு தீர்த்தங்கள் அவிரும். ஈசானத்தில், வாசுதேவம், சங்கிருஷணம், பிரத்துயும்னம், அனிருத்தம் என்னும் நான்கு தீர்த்தங்கள் இலங்கும். கீழ்த்திசையில், அவபிருதம் முதலாக, எண்ணமெல்லாம் ஈந்தருளும், இருபத்தாறு தீர்த்தங்கள் கிளரும். தென்றிசையில், சிம்சுமார தீர்த்தமுதல், பத்துத்தீர்த்தங்கள் திகழாநிற்கும். அப்பால் சுக ஆனந்தப்பேறு அளிக்குஞ் சோடச தீர்த்தங்கள் தோன்றும். சித்திரையில் பௌர்ணமிநாள் உச்சிப்பொழுதில், நித்தியபுஷ்கரணியில் மூன்றரைக் கோடி புண்ணியநதிகளும் பூவராகப்பெருமான் திருமேனி தோய்ந்த புனலில் குளித்துப் பரிசுத்தமாம் பொருட்டு ஆங்கு ஒளிருங்காலத்து,அப்பனுக்கு அமிசவாகன உற்சவமும் வைகாசியில் பௌர்ணமிதிதியில் சக்கரதீர்த்தத்தில் எம்பெருமான் சூரியன்மேல் எழுந்தளும் உற்சவமும் ஆனிதன்னில் பிரமதீர்த்தத்தில் தண்டகசூரன்மேல் வராகசாமி சேவைதரும் உற்சவமும், ஆடியில் அக்கினிசரசில் அஷ்டபுயக் காளியான சிங்கவாகன உற்சவமும், ஆவணியில் சங்கதீர்த்தத்தில் அரன் தலை அமர்ந்த சந்திரவாகனச் சாறும், புரட்டாசியில் வெள்ளாற்றில் புஷ்பங்கள் நெருங்கவிட்டுக் கட்டிய விமான உற்சவமும், ஐப்பசியில் மணிமுத்தாநதியில் சிவிகை உற்சவமும், மார்கழியில் பார்க்கவ தீர்த்தத்தில் யானைவாகனச் சாறும், தைதன்னில் பிரமதீர்த்தத்தில் சதுமுகப்பிரம வாகன உற்சவமும், மாசியில் மகநாளில் கீழ்க்கடலில் மகோற்சவமும், பங்குனியில் பௌர்ணமியில் லக்ஷ்மிநாராயண தீர்த்தத்தில் திருவிழாவுஞ் செய்வார், கொலை, களவு, கள், காமம், பொய் முதலிய கோது நிறைந்த கொடிய நெடிய பாவக்கோடிக் கூட்டம் மலையளவு செய்தாரேனும்

அவை அனற்பொறிமுன் பஞ்சுப்பொதிபோல் அழிந்தொழிந்து பரமானந்தபதம் அடைவார். பன்னிரண்டு மாதங்களினும் வராக சாமிக்குப் பரிவொடு திருவிழாப்புரிவார், இராஜசூய யாக பலமும் கோடி கன்னிகாதான பலமும் எய்தி, சக்ரவர்த்தியராய் வாழ்ந்து, குடும்பமுடன் அழியாத இன்பவீடடைவார். கார்த்திகையில் சுத்த துவாதசியில் பிரபோதனி காலத்தில் வராகப்பெருமாற்கு உற்சவத்தைச் செய்வார், இராஜசூயம் இயற்றி ஈறிலின்பவீடெய்துவார். மறைமுனிவ! நித்தியபுஷ்கரணியில் அன்னதானஞ் சொன்னதானஞ் செய்தார், அமலானந்த பதம் அடைவார். கன்னிகாதானஞ் செய்வார், கற்பத்தளவும் பிரமனுலகில் வாழ்வார். பூதீர்த்தத்தில் பூமிதானஞ் செய்வார், நரபதியாகி, குவலயத்தை ஒரு குடைக்கீழ் ஆண்டு, முத்தியும் பெறுவார். சக்கரதீர்த்தத்தில் திலதானஞ் செய்தார், அவமிருத்து வினை அகல்வார். நித்திய புஷ்கரணியில் சித்திரையில் பௌர்ணமி நடுப்பகலில் நீராடி, கோதானம் அன்னதானஞ் செய்து பூவராகனை அம்சவாகனத்தில் கண்டு போற்றினர், புகழ்பரந்த செல்வம் கல்வி புதல்வரோடு புவியில் சுகித்து, முத்தியும் பெறுவார். இலக்ஷுமிநாராயண தீர்த்தத்தில் பங்குனியில் சுக்கிலபக்ஷப் பூர நாளில் திரயோதசி திதியில், செல்வ வராகனைச் சேஷவாகனமீது கண்டு பலவித சித்திரான்னங்கள் கண்டருளச்செய்து போற்றிக், சன்னிகாதானஞ் செய்வார், இருபத்தொருகால் எழில் முடி மன்னராகி முத்தியும் பெறுவார். மாசியில் பௌர்ணமி உத்திரநாளில் பூதீர்த்தத்தில் சன்னிகாதானம் புரிந்து, பூவராகனைப் போற்றினர், உம்பரும் எய்தாப் பெரும்பேறு உறுவார். சக்கரதீர்த்தத்தில் ஆடி, மந்திர ஜபஞ் செய்தார், நரகும் பிறப்புமெய்தார் என்று கருடபகவான், மரீசிமுனிக்குக் கழறியருளினர். நேமிவன நிமல முனிகாள்! பாரத்துவாசிக்கு ஆங்கிரசமுனிவர் பகர்ந்தவாறு கேளிர்: ஆங்கிரசமுனிவர், பரத்துவாசியை நோக்கி, மேலோய்! நித்தியபுஷ்கரணியில் குளிப்பார், ஊர்த்துவபுண்டரம் அணியாது, திரியக்குப் புண்டரம் அணிவாராயின் பாக்கியத் தவங்களனைத்தும் பாழாகிப் பாதகராய் புவர்க்கத்தில் கவிழ்வார். அக்கயத்தில் குளித்து, அரசமரத்தடியில் காயத்திரி மந்திரஞ் செபித்தான், பிரமகத்தியைக் கடப்பான். திருவஷ்டாக்ஷர ஜபஞ் செய்வான், சின்மயானந்த வீட்டில் திகழ்வான். வராக மந்திரத்தை அரசடியில் லக்ஷவுருச் செபித்தான், ஏழு தீவங்கட்கும் இறைவனுவான்.

அத்தீர்த்தத்தில் ஆடி, அழகியவராகனை ஆயிரநாமங்களைச் சொல்லித் திருத்துழாய் கொண்டு அருச்சனை புரிந்தான், ஏழுலகாளும் மன்னனாய் இன்பநுகர்ந்து, மோக்ஷமும் எய்துவான். சகஸ்திரநாமஞ் சொல்லிப், பால் அபிஷேகஞ் செய்தான், ஞானம் விளங்கி, சச்சிதானந்தவீடு அடைவான். அக்குளத்தின்கண் வராகசாமிக்கு அன்னவாகன உற்சவமியற்றினன், சுவர்க்கபதியாவான். தெப்ப உற்சவஞ் செய்தான், சுவேததீவுக்கு அரசாவான். அதில் ததீயாராதனஞ் செய்வான், அமலானந்தத் தனிவீடு அடைவான். ஆங்கு சாதுக்களுக்குச் செய்யும் தருமம் அன்னதானம் கோதானம் எள்ளளத்தனையெனினும் மகாமேருவாகும். நித்தியகுளக்கண் பூணூல் கலியாணஞ் செய்விப்பான், புரவலனாய் முத்தியடைவான். அப்புஷ்கரணிக்கு நாற்புறமும் கருங்கற்களால் துறைகளிட்டுப் படிகள் கட்டினன், பரமபதத்துக்குப் படிகள் கட்டினனாவான். நாற்புறமும் மண்டபங்கள் வகுத்தான், நலமந்தமில்லா நீட்டில் சுகிப்பான். அங்கு, சாளக்கிராமதானந் தந்தான், தராபதியாகி, சச்சிதானந்த பதஞ் சார்வான். கன்னிகாதானஞ் செய்தான், கமலத்தயனுலகில் கணக்கறுகாலம் வாழ்வான். ஞாயிறு குருவாரங்களில் காலையில் எள் கொண்டு பிதுர்தருப்பணஞ் செய்வான், பவமெல்லாங் கொய்வான். செவ்வாயில் கோமயத்தால் மெழுகிக் குளித்தான், ஆயிரங் கோதானபலம் அடைவான். ஞாயிறு துவாதசியில் அக்குளத்தில் ஆடுவான், கோடி பாவங்கள் குலைவப்பான். அபரபக்ஷ சதுர்த்தசியில் ஐந்துகவ்வியம் உடற்கண் தடவிக் குளித்தான், நோய்களிற் பிழைத்துக் களித்து அந்தகனூர் ஏகாது ஆயுளைப் பெறுவான். சுக்கிலபக்ஷப் பௌர்ணமியன்று அதில் குளித்து, வராகவிக்கிரகத்தைத் தூய மறையோர்க்கு அளித்தான், சுகுண புத்திரரைப் பெறுவான். பெரியோய்! தேவதேவ பூவராகப்பெருமான், திசைமுகன், சிவன், ஏனைத்தேவர், முனிவர், மனிசர், விலங்கு, பறவை, ஊர்வன, ஸ்தாவரமாதி ஜகத்ரக்ஷணசிந்தனை செய்யும் அறிதுயில் ஏன்று, ஆடிச் சுத்த ஏகாதசியில் சயனமிட்டு, ஆவணி ஏகாதசியில் வலப்பால் சாய்ந்து, புரட்டாசி ஏகாதசியில் இடப்பக்கஞ் சாய்ந்து, ஐப்பசியில் சமமாய்த் துயில்கொண்டு, கார்த்திகை ஏகாதசியில் உணர்ந்து எழுவான். இந்தச் சாதுர்மாசியஞ் சீமுட்ட க்ஷேத்திரத்தில் சங்கற்பஞ் செய்தார், எவ்வகைத் தானமும் இயற்றினர், பெருமை என்னென்று இயம்புவேன்? இசைக்கத் தரமன்று. வேதிய! இத்

தலத்து ஏகாதசி விரதமிருந்து துவாதசியில் கோரைக்கிழங்கு சூர்ணத்தில் தேன்கலந்து கோலமாதவனுக்கு ஊட்டிச், சேஷம் உண்பான், கொள்ள மாளா இன்பவீடுஅடைவான். நரக சதுர்த்தசியன்று வராகசாமிக்கு நல்லெள் தைலத்தால் அட்டினுன், கங்கையாடின பலனை நண்ணுவான். அங்கு ஒரு பட்டனுக்கு அன்னம் பகிர்ந்தான், பரமபத மடைவான். பசுவைத் தானஞ்செய்தான், பாவமெல்லாம் பாற்றுவான். நால்வேதம் ஓதுவிப்பான், நளினுசனப் பிரமனுய்ச் சிருஷ்டி நடத்துவான். பூவராகப்பெருமான் கோவிலில் ஒரு திருவிளக்கு ஏற்றினுன், பிரமகத்தி பரதாரகமனப் பாவமெல்லாம் பாற்றுவான். பிரமதீர்த்தத்தில் ஆடை ஈந்தாரும் அக்கினி தீர்த்தத்தில் நெய் அளித்தாரும் ஆயுள் விருத்தியடைவார். சங்கசரசில் பால் அளிப்பார், தராபதி யாவார். பிரமசரசில் அப்பியங்கனஞ் செய்விப்பார்க்கு ஆபத்து அணுகாது. வெள்ளாற்றில் வெள்ளிதானஞ் செய்தார், பிதுர்க்கள், மேன்மைமிக்க கயையில் பிண்டமேற்றுரின் மகிழ்வார். மணிமுத்தாநதியில் மான்றேல் தானமளித்தார், பாவங்கள் மாற்றுவார், நித்தியபுஷ்கரணியில் கோதானம் ஈந்தார், நிமலவராகனுக்கு இனியராவார். பூதானஞ் செய்தார், புத்திரரைப் பெறுவார். திருமுட்டம் போக எண்ணி, அத்திசை நோக்கி அடியெடுத்து வைத்தார், அசுவமேத பலம் அடைவார். அம்மார்க்கத்துத் தண்ணீர்ப்பந்தல் இட்டு, வருவாரை ஆதரிப்பார், வறுமையென்பது அற்று, மாளாத இன்பவீடு அடைவார். மறைவல்லோய்! காத்தியாயன முனிவன், கதிரோன்பால் விஞ்சை தேர்ந்து, அந்தச் சூரியன், உனக்குப் புத்திரியாய் உதிக்கும் இலக்குமிக்கு இஃது ஈவாய் என்று அளித்த, பசி தாக சோகங்களைத் தீர்க்கும் வலயம் என்னும் பூஷணம் பெற்று, சில்லிகாவனமே வந்து, பர்ணசாலை ஒன்று கட்டி, குண்டம் ஒன்று கல்லிக்கொண்டு, அக்குளத்தின் வாயுதிக்கில், வேதநாராயணனைக் கமலவல்லியுடன் ஸ்தாபித்ததனுல், அந்தக் குளத்துக்குக் காத்தியாயன தீர்த்தம் என்று பெயராயது. அக்காத்தியாயனமுனிக்குக் கமலா தேவி, புத்திரியாக அவதரித்துக், கருணைகூர்ந்து, தன்னைப் பெற்ற முனிவனுக்குச் சூத்திரஞ் செய்யும் ஆற்றல் ஈந்தாள். அந்த முனிவரன் செய்த, சூத்திரத்துக்குத் தேவி சூத்திரம் என்று பெயரிட்டார் பெரியோர். காத்தியாயன தீர்த்தத்தில் குளித்துக் கரிசற்ற வேதியர்க்குக் கோதானம், வஸ்திரதானந் தந்து, உபநயனஞ் செய்வித்தார், வேதநாராயணர்க்கு உற்சவம் இயற்றினுர், முத்திவீடு எய்

துவார். ஆனிதன்னில், சுக்கிலபக்ஷச் சத்தமிநாளில், காத்தியாயன தீர்த்தத்தில், கமலவல்லி மணுளனுக்குத் திருப்பல்லக்கு உற்சவஞ் செய்தார், திருக்கெலாந் தொலேத்துச் சின்மயானந்த பதம் பெறுவார். அக்குளக்கரையில் கோதானந் தந்தார், உபநயனஞ் செய்வித்தார், பிரமத்தை ஸ்தாபித்தார், இருபத்தொரு தலைமுறை இயற்றிய பாவமெல்லாம் இரித்துக்,குருத்துரோகமுங் குலையப்பெற்றுக், கொள்ளமாளா இன்பவீடு அடைவார். காத்தியாயன தீர்த்தக்கரையில், பங்குனி பௌர்ணமியில் பரமனுக்கு ஊஞ்சல் உற்சவம் புரிந்தார், சுதர் மனே சுற்றத்தோடு நினைவெல்லாம் பெற்று, நிபிடானந்த பதம் பெறுவார் என்று நிகழ்த்தினுர் என்று, சௌனகாதி ருஷிகட்குச் சூதபுராணிகர் சொல்லி, மேலுங் கூறலுற்றுர்.

---

"மூன்றவது தீர்த்தமான்மிய காண்டம் முற்றிற்று."

---

தேவதேவ ஸ்ரீபூவராகபரப்ரஹ்மணேநம:
ஸ்ரீமதேவரவராயபரமதயாகுரவேநம:

---

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

நான்காவது

# ஞானமான்மிய காண்டம்.

## பஞ்ச சமஸ்காரப் படலம்.

சௌனகாதி பரமருஷிகாள்! பாரத்துவாசன் ஆங்கிரசமாதவனைப் பரவி, ஐய! கலிகாலத்தில், தேவதேவனான கமலக்கண்ணன் வைபவம் எவ்வாறாகும்? கழறுவாய் என்று வினவ, ஆங்கிரசன், கேளாய் பாரத்துவாசி! முன்னாள், அம்பரீஷன், வசிஷ்டமுனிவர் அடிதொழுது, நீ, கடாவியவண்ணமே நிகழ்த்தலும், வசிஷ்டமாதவன், அம்பரீஷ! பூர்வத்தில் புஷ்பயோனியான பிரமன், கங்கையாற்றங்கரையில், அசுவமேதந் தொடங்கி ஆற்றாநிற்குங்காலத்து, ஆங்கு, தேவரும் முனிவருஞ் செறிந்த கோஷ்டிக்குள்ளே, பிருகு முனிவரன் வந்து, நாரதமுனிவனது திருவடி பணிந்து, பெரியோய்! இமையவரும் மனிசரும் எல்லாப் பலன்களும் பெறுதல் எவ்வாற்றால் என்று இயம்பியருள்க என்று வினவ, யாழ்வல்லோன், பேருவகை பூத்து, இசைக்குமாறு இயம்புவன்: கேளாய் பிருகுமுனிவ! சம்ஸ்காரமில்லாதார் மோக்ஷஞ் சாரார். அந்தச் சம்ஸ்காரந்தான், பாகிய சம்ஸ்காரமென்றும், ஆந்தர சம்ஸ்காரமென்றும் இரண்டுவகைப்படும். அவற்றுள், பாகிய சம்ஸ்காரந்தான், தாபம், புண்டரம், நாமம், மந்திரம், யாகம் என்று ஐந்தாகும். தாபமாவது: ஜநார்த்தநனது திருக்கைத்தலங்களில் வாழுஞ் சச்சிதானந்த வீட்டுத் துவாரமாகிய, சங்கு சக்கரங்களை வேதவோமத்தியிலாட்டி, ஆசாரியனால் முறைப்படி தோள் மூலங்களில் ஏற்றுதலாம். புண்டரமாவது: குருவின் கையால் வெண்மண் கொண்டு திருமாலின் உபய திருவடியாகிருதியாக, நாசிமுதல் கேசாந்தம், நடுவில் திருச்சூரணத்துடன் தரித்துக்கொள்ளுதலாம். நாமமாவது: கிராம குலாதிகளால் வருங் கெடும் பெயரை மாற்றி, அரிபெயர், அவன் அருட்குணத்து ஆழ்வார் ஆரியர் பெயரைக் கொள்ளுதலாம். மந்திரமாவது: ஆசாரியனால், திருமந்திரோபதேசம் பெறுதலாம். யாகமாவது: திருவாராதனம் ஏற்றுதலாம். அந்தக்

குரு, வேதாதி பன்னான்கு சாஸ்திர வித்தமனாய், ஞான பத்தி வைராக்கிய ஜலதியாய், ஜநார்த்தந பத்திப் பூரிதானனாய், ஸ்திர புத்தியுடையனாய், முக்குற்றம் அற்றனாய், சுத்தசத்துவனாய், சாந்த சமதமாதி ஆன்மகுணகனாய், இராகத்துவேஷம் இல்லானாய், பரம தயாளுவாய், அசூயை, டம்பம் முதலிய துர்க்குண ரதிதனாய், சுகதுக்க சமனாய், அவாவறுத்தானாய் இருத்தல்வேண்டும். அவனே ஆசாரிய பதத்துக்கு அருகனாவான். ஞானமனுஷ்டான மில்லாத ஈன குருவை ஆசரித்தால், ஓட்டையோடத்து ஒழுகலோடம் உற்றாற்போலாம். பிருகுமுனிவ! திருத்தித் திருமகள் கேள்வனுக்கு ஆக்கவல்ல தேசிகனை ஆசிரயித்த மாணாக்கன், ஆசாரிய நியமங் கடவானாய், உடல் பொருள் ஆவி மூன்றுஞ் சற்குருவுக்கே உவப்பின் ஈந்தானாய், அருத்தபஞ்சக தத்துவஞானம் அளித்து ஆட்கொண்ட ஆசாரியனே அனைத்துமாம் என்று அறுதியிட்டானாய், ஆஸ்திகாக்கிரகண்ணியனாய், குரு தந்த திருமந்திரத்தையும், திருமந்திரத்துக் குள்ளீடான தெய்வத்தையும் பேணி அநுசந்திப்பானாய், சிரச்சேத பட்டாபிஷேக பரியந்தமான, சோக சுகங்களினுந் திறம்பாத ஞான பத்தி வைராக்கியம் உடையனாய், கிரய விக்கிரய அருகனாய், பகவத் பாகவதாசாரிய கைங்கரிய நிரதனாய், தேகாபிமானம் அற்றவனாய் இருத்தல் வேண்டும். குருவருள் மந்திரத்தை அனதிகாரிகள் செவிப்படாதபடி மறைத்து ஓம்பி, குருவை விளக்கமாகப் புகழ்ந்து கொண்டாடி, இங்கிருக்கும் இரண்டொருநாளும் குணானுபவ கைங்கரியங்களால் பொழுதுபோக்கக் கடவன். ஆசாரியன் உபதேசித்த மந்திரத்தை மறந்தானாயின், அருநரகில் குடிபுகுவான். அருட்கணோக்கி ஐம்பொருள் அளித்த ஆசாரியனை அலர்தூற்றினான், நூறு கற்பகாலம் சனனமரணத்தில் சஞ்சலப்படுவான். குரு வுள்ளம் நோவச்செய்தான், நூறு கற்பத்தளவும் கொடிய நரகில் கவிழ்ந்து கொதிப்பான். குருவைப் பகைத்தானைக் கோசனைகைகேள்வனும் பகைத்து, அதோகதியில் குப்புறத் தள்ளுவான். மாதவ! பஞ்சசம்ஸ்கார பாக்கியவான்களே பரமானந்தபதம் அடைவார். ஏனைய சம்ஸ்காரம் ஏற்றார் இழிவு அடைவர் என்று பாரத்துவாசிக்கு ஆங்கிரசர் நவின்று, பின்னும் பகரலுற்றார்.

---

## அனுஷ்டானக்கிரமப் படலம்.

கேளாய் பாரத்துவாசியே! பதுமயோனி எனக்குப் பணித்தவாறு பகர்வன்: பஞ்சசம்ஸ்கார பாக்கியவான்சட்கு இயைந்த நியமங்கள் இருபத்துநான்காகும். அவையாவன: நாராயணனே பரதத்துவமென்று அறியாத பாஷண்டர் கேண்மை பாறவிடுதலும், வேதபாகியமான பாஷண்டநெறி விலக்குதலும், தீய பாஷண்ட தீக்ஷையை வருச்சித்தலும், தாமத தேவர்கள் தலஞ்செல்லல், அவரைப் போற்றி வணங்கல், அவர் நின்மாலியங்கள் ஏற்றல், விரதங்களாற்றல் முதலிய யாவும் விடுதலும், மாயவன் திருவடிகளில் உடலுளகாறும் மறவாத பத்தி வைத்தலும், உபயவேதாதிகள் ஓதிப் பொருள் உசாவுதலும், திருத்துழாய்மணி, தாமரைமணித் தாழ்வடங்கள் தரித்துத், துளசிமணிக்கோவை கொண்டு ஜபித்தலும், சிதரன் உண்ட சேஷப்பிரசாதமே உண்டலும், சரீர ரக்ஷணத்தைத் தணத்தலும், நித்தியானுஷ்டானங்கள் தவருது இயற்றலும், திருமாலடியார்க்குச் சேஷபூதனாய் அவர் திருவாய்மொழிப் பொருள் கொள்ளலும் சேவித்தலும், புருஷோத்தமன் கோயிற்கு நாளும் போய்ப் போற்றலும், திருமால் திருவடி தீர்த்தப் பிரசாதந் தினந்தினமும் உண்டு வாழ்தலும், திவ்வியதேச யாத்திரை செய்தலும், செங்கண்மால் திருச்சரிதங் கேட்டலும், காலமெல்லாம் குணனுபவ கயிங்கரியங்களில் போக்கலும், உயிருக்கு இறுதிவரினும் வயிரத்தை மாற்ருது இருத்தலும், அரியை ஓதாக் கலைகளை அவலமென்று அகற்றலும், இந்திரியங்களை அவித்தலும், விதியில்லா உணவை மிசையாது வருச்சித்தலும், சீபதி உற்சவங்களைச் சேவித்தலும், புண்ணிய தீர்த்தங்களை நாடிப்போய் ஆடுதலும், உலகமுய்ய வேதத்தின் உண்மைப்பொருளை எவர்க்கும் உரைத்தலுமாம். வேதிய! இந்நியமங்களுடையன் எவன்? அவன் எம்பெருமாற்கு இனியன். அவனே பாகவதனுவான். திருவுடைத் திருமாலடியார், பொருள், நிலம், இல்லம், புகழ், மனைவி, புதல்வரெல்லாம் போய நாளினும், அரிக்கல்லால், அன்னியதெய்வங்கட்கு அடிமையாகார். திருவில்லாத் தேவர்தம் புகழ், பதி, ஊர் முதலிய நாடிச்செல்லார்; கேளார்; நோக்கிடார்; சொல்லார்; சொப்பனத்தினும் அவர் தொடக்கில் நில்லார்; சற்பினல்லார் போல்வார்; கணிகையை யியையக், காசுக்குத் தம்மை விற்றுண்ணுர். இறுதியேவரினும், பிரமன்றன் எழிற்பதம் பெறினுஞ்,

சொற்பதங் கடந்த சோதித் திருமாற்கு அன்றிச் சொல் மனம் மெய் கொடார். சீமான்களாய இவர், பிரமன், சிவன், கந்தன், இந்திரற்குஞ் சீரியராவார். அன்னிய தெய்வங்களைத் தொழும் அறிவில்லார் அருநரகு அடைவார். உலகெலாங் காத்தளிக்கும் ஒரு பெருங்கடவுளாந் திருமகணுதன் சீர் சொல்லாச் சாஸ்திரங்கள் அனைத்துந் திரைகடலோசையாகும் என்று நாரதபகவான், பிருகு முனிக்கு நவின்றவாறு, பாரத்துவாசிக்கு, ஆங்கீரசர் பகர்ந்தார் என்று சூதமுனிவர், நைமிவன ருஷிகட்கு உரைத்துப் பின்னும் நிகழ்த்தலுற்றார்.

---

## கலிநடைப் படலம்.

கேசவனடி மறவாக் கிளர்தவ முனிகாள்! நரநாராயண முனிவர், நங்கைபங்கனுக்கு உரைத்த கலிநடை கிளத்துவன் கேளிர், கலிகாலத்தில், விஷ்ணுவில்லை; வேதமில்லை; விதியில்லை; அடியாரில்லை; கதியில்லை; தவமில்லை; தானமில்லை; தருமமில்லை; யாகமில்லை; பொறையில்லை; முறையில்லை; ஆசாரமில்லை; சத்தியமில்லை; சாஸ்திரமில்லை, நலமில்லை, அருளில்லை, ஞானமில்லை, நன்னெறியுமில்லை; மெய்யென்பது விளங்காது; பொய்யேபொலியும், அறிஞரெல்லாம் ஐயோ! என்று அழுங்குவார். தருமம் நாணும் தாழ்ந்து தளரும். பீதகவாடைப் பெருமான் பெருமை குறையும். பேய்த்தெய்வக் கூட்டம் எங்கணும் பெருகும். சூதும் வாதும் துளிர்த்துத் தழைக்கும். குற்றமே குணமாகும். குணமெல்லாங் குற்றமாகும். நிலமெலாம் விளைவு குறைந்திடும். நீசர், கடையரே, தலைமையாய் நிற்பார். தாய் தந்தையர் சொல்லைத் தனயர் கேளார். குருவைக் குற்றங் கூறித் திரிவார். அரசர், அறந்துறந்து பொருள் வெஃகுவார். நல்லோர் தம்மை நாவில் புழுவிழக் கீழோர் நவைகூறி நலிவார். புல்லோர்க்குப் பொருளுங் கொடுத்துப் புகழ்வார். பாவலரைப் பழிப்பார். பிராமணரெல்லாம் நிஷ்டையை மறந்து பிரஷ்டராய் நீசருக்கு ஆட்செய்து நீசராவார். தந்தைமுன் தனயன் இறப்பான். மைந்தன்முன் மாதா மடிவாள். பாவமே மலிந்து படரும். ஆசாரியனைச் சிஷ்யன் அவமதிப்பான். பூசுரர், வேதமோம்பாது புலையரைப் போற்றுவார். பெண்டிர், தங் கணவரைப் பேணார். கணவர், தம் மடவார் காற்கடை நின்று குற்றேவல் செய்து காலங் கழிப்

பார். சற்புடையாரைக் கணிகையர் நிந்தைகணிப்பார். பஞ்சமா பாதகர், எங்கும் பரவுவார். நிமலானந்த தற்பரன் அருச்சையை நிந்திப்பார். ஆணைமுன்னின்றான் ஆலயங்களை யழிப்பார். மாமனும், மாமியும், மருமகனை வணங்கி வாழ்வார். காரிகையார், கணவனை விட்டுக் கண்ட பேரைப் புணர்ந்து கற்பழிவார். பொருளுள்ளான் எவனோ அவனே மன்மதனென்று அணைந்து, புன்னரகில் வீழ்வார். கலிகாலத்தில் மங்கைமார் கற்பழிய மேனி மினுக்கி, நாணமில்லாது நகைத்து முலைகள் குலுக்கி ஆடவர்தம்மை அலியென மதித்து மை யரிக்கண்களால் மயக்கி மானமழிவார். புருஷரை ஓர் பொரு ளென படியார். மறையோய்! அதருமம், மிக்க கலியுகத்தில் அசுரர் இராக்கதரெல்லாம் அரசரெனவும் பார்ப்பாரெனவும் பிறந்து, அசு ரமோகனப் பொய்யாகமங்களை ஓம்பி, அரியைப் பழித்து, அறவாழி யந்தணன் ஆலயங்களை அழித்து வந்தனர். அக்காலத்தில் ஆசுரப் பிரகிருதியாகும் பாதகப் பாஷண்ட சோழவரசன், திருமுட்டத்து அழகிய வராகனார் ஆலயத்தைக் கவர்வான் எண்ணிப் பட்டப் பகலில் புகுந்து பராபர வராகப்பரமன் ஆலயத்தை யழித்துப் பா ழானான். சச்சிதானந்த வராகதற்பரன் விக்கிரகந் தரைப்படவே சாமிவராகன் அமரரால் பூசைகண்டு அவிர்தருங்காலைத் திருவனந் தாழ்வான், பூவராகன் திருமேனி மூடப் புற்றுருவாகிப் பூங்கோவி லிட்டுக்கொண்டு நின்றனன். புற்றுக்குள்ளே ஒளிரும் பூவராகனைப் போற்றிச் சுகிப்பாரற்றது அறிந்து, பூமகள் கேள்வனருளால் நித்தி யர்கள் பூமிசை அவதரித்துத் தமிழ்வேதந் தந்து உலகுய்யப் பொ லிந்தார்கள். அப்போது சுதர்மனென்னுஞ் சுதனொருவன் தோ ன்றித், தூய வராகப் பெருமான் ஆலயத்தை ஸ்தாபித்துத் துலங்கச் செய்தான் என்று நாராயணமுனி நவிலக்கேட்டு, நங்கைபங்கன், குரு நாத! என்னையாளும் ஏனத்திருவீசன் எவ்வாற்றால் இம்பர்கள் காண இசைவுற்றான் இயம்பியருள்க என்று இறைஞ்சி வினவ, நாராயணமுனிவர் நவிலுமாறும் கேளாய் என்று பாரத்தவா சிக்கு ஆங்கிரசமுனிவர் பகரலுற்றார்.

---

## பாகிய குதிர்ஷடியத உற்பத்திப் படலம்.

பாரத்துவாசியே! சருவேசுவரனால் நாராயணன், நான்கு யுகங்களினும், வைரம், மாணிக்கம், பச்சை, நீலமாய உருவுகொண்டு நாரங்களை ஒம்பிக் காத்தளிப்பன். அந்தப் பகவான், கண்ணனாக அவ

தரித்து, அப்பன் அரன் ஆகண்டலனாதியர் ஆண்மை குமைத்து, அறத்தை நிலைநாட்டித், தனது திவ்வியமங்கள விக்கிரகமெனச் சருவரும் பூசித்து உய்யுமாறு, மாயாமயப் பிராகிருத தருவொன்றை அமைத்துக்காட்டித் தன் அடிச்சோதிக்கு எழுந்தருளினான். துவாபரயுகக் கடையில், கலிகொண்கனாங் கலிபுருஷன், இந்தத் தொடுகடல் சூழ் உலகெங்குஞ் சூழ்ந்து வியாபித்தான். அப்போது அரக்கரசுரர் யாவரும் அந்தணர் யோனியில் பிறந்தாராய் மோகன ஆகமங்களை ஓம்பி, அரிய சுருதியாதி சாஸ்திர வாக்கியங்கட்கு அபார்த்தஞ்செய்து அனர்த்தப்படவே, வேதார்தப் பிரதிபாத்தியனான பகவான், பிரமனையும் வீணைக்கை நாரதனையும் சிஷ்யராகக் கொண்டு, பௌத்தனாய் வந்து, பலபடி போதித்து மறைந்தான். அரக்கரசுரர் குழுவனைத்தும், புத்தமுதலிய பொய்ச்சமயங்களை நம்பிப் புத்தராய்ப் போனபேரும், பூதியரான பேரும், சத்தியைத் தாழ்ந்தபேரும், ஜைனியராயபேரும், சூனியரான பேரும், மிலேச்சராய்த் தொலைந்த பேருமாய், பாகவதரைப் பழித்துவதைத்து, பகவசாலயங்களை அழித்துப் பாழாக்கினார். வேதமும் பொய்யே; சாஸ்திரங்களும் பொய்யே; வேதப்பிரதிபாத்தியனான விஷ்ணுவும் பொய்யே; நான்முகனும் பொய்யே; நக்கனும் பொய்யே; ஏனைத்தேவரும் பொய்யே; நரரும் பொய்யே; திரியக்கு ஸ்தாவரமும் பொய்யே; ஆனைமுன் வந்ததும் பொய்யே; புண்ணிய தீர்த்தங்களும் பொய்யே; க்ஷேத்திரங்களும் பொய்யே; மூர்த்திகளும் பொய்யே; யென்றார். அகரப்பொருளான அரியுஞ் சிவனுஞ் சமமென்று நாக்கூசாது நவின்றார். அக்காலை, புத்தம், சமணம், மாயாவாதம், உலகாயதம், சாக்தம், காணாதம், கௌமாரம், சைவம், வீரம், காபாலம், காளாமுகம், பாசுபதம் எழுவாய மதங்கள் படர்ந்தன. கலியுகத்தில் 'பாஷண்டர்கள் மலிந்து, பகவதாலயங்களை அழித்து, ஆங்காங்கு லிங்கங்களைப் பதித்து, பாகவதரைப் பழித்துப் பாழானார். அந்நாளில் திருவரங்கம், பதரி, ஸ்ரீமுட்டம், ஜகந்நாதம் முதலிய சில சுயம்பு க்ஷேத்திர மூர்த்திகள் இந்தளத்தொளிரும் தாமரைபோல் சின்மயானந்த உருவமாகித் தீயர் கண்படாமல் மறைந்திருப்ப, பாதகர் மலிந்து, சிசரன் கோயில்களை இடித்தழித்துச் சிவனை ஸ்தாபித்து இலிங்கமே பரப்பிரமமென்னும் நூலோதி, எவரும் பகவத்த்வேஷியாய் எங்கும் பரந்த ஞான்று, சோழராஜன், பகவத்த்வேஷியாய் வேதியர்தம்

மை விஷ்ணுவை விரும்பேன்மின் என்று இராஜதண்டனை இயற்றியும், அளவற்ற செல்வம் வீடு நிலங்களை அளித்தும், வைதிக மதத்தினின்றும் மாற்றி மயக்கிப் பூதியிற் புரட்டிச் சைவரொடுகூட்டி, வைஷ்ணவ சந்ததியைச் சீறிச் சின்னபின்னஞ் செய்து சிதைத்து, சிமுட்டத்திருப்பதி புகுந்து பார்ப்பாரைப் பழித்து வராகசாமி பாழியைத் தகர்த்துப் பார்வதிபங்களை நாட்டி, மீண்டுபோய் நரகில் கவிழ்ந்து நாசமானான். பூவராகன் ஆலயம் சிதைந்தது அறிந்த புண்ணியனொருவன், அப்பனை, பாஷண்டப் புலையர் கண்படாமல் மண்குப்பைக்குள் ஒளித்துவைத்துப் போற்றினான்.

---

## சுதர்மதாசன் தோன்றிய படலம்.

கேளாய் மாதவ! கோலவராக மூர்த்தி மீது அனந்தன் புற்றாய்மூடிக்கோவிலிட்டிருப்பச், செவ்வியின்றிப், பலகாலஞ்சென்ற பின்னர், அவ்வூரில் சூத்திர சாதியில், சதர்மன் என்னும் ஓர் புண்ணியன் தோன்றினான். அவன் அந்தணர் மாட்டு அருங்கலையெல்லாம் ஓதி, ஐந்து தீக்ஷையும் பெற்று, அரியடியனாய், கருணை, ஒழுக்கம், சாந்தம் முதலிய சற்குண சம்பன்னனா யிருந்தான். உழுதுண்டு வாழ்வான். பரந்த பெருஞ்செல்வ முள்ளான். மெய்ஞ்ஞான பத்தியின் மேலவன். இன்சொல்லோடு ஈகையில் சிறந்தான். புண்ணியனாப அன்னான், சோழன் வந்து, பூவராகன் ஆலயத்தை யழித்து, இலிங்கத்தை வைத்த புதுமையைக் கேட்டுப், பதைபதைத்துப் புலம்பி ஏங்கி, ஓர் ஓவியனால் பூவராகப் பரமனைப் படத்தின்கண் எழுதி, பூசைசெய்து போற்றி என்றுகொல் எம்பெருமான் கோவிலிட்டிறைஞ்சுகேன்! என்றுகொல் எம்பிரான் வடிவு கண்டு ஏத்துகேன்! என்று இரங்கியழுவான்; தொழுவான்; என் கண்ணா! உன்னைக் காண்பது என்ஞான்றுகொலோ என்று ஆடுவான்; பாடுவான்; அவன் கனவின்கண் ஆனந்த விமானத்தில் அப்பன் நிலவக்கண்டனன். கோவிலையுங் கோபுரங்களையுங் கண்டான். தீர்த்தங்களையுங் கண்டான். அந்தணாளர் அத்தியயனஞ் செய்யக் கண்டான். பிரமன் அருச்சனை செய்யக் கண்டான். பிஞ்ஞகன் இந்திராதி தேவரெல்லாம் வந்து சேவித்துப் பிறங்கக் கண்டான். சொப்பனத்து எழுந்த தொன்முதல், சுதர்மனை விளித்துப் பிள்

ளாய்! நீ கனவில் கண்டபடி, எனக்கு ஒரு நிகேதனம் பாஞ்ச ராத்திர முறைப்படி, பதிட்டை செய்வாயாக. குழந்தாய்! நாளையே, சுசர்மனென்னுந் தூய மறையோன் ஒருவன், இங்குத் தவஞ்செய்யச் சார்வான். அவனோடு கூடி, எமக்கு ஆலயம் அமைப்பாய். அவன் என்னை அருச்சனை செய்ய அருகனாவான். சுதர்ம! நிமலானந்த பரனாகும் நமக்கு, நீ செய் கோவில், கலி நாலாயிரத்தைந்நூறாண்டுகாறுங் கரிசின்றி நிகழும். பின்னர், சோழனொருவன், சைவனாய், இங்கு வந்து, நீசெய் சினகரத்தை அழித்துச் சிவனை வைத்துப் புஷ்கரணியும் வவ்விப் போய்க் குலநாசனாய்ப், புழுபுழுத்திறந்து, புன்னரகில் வீழ்ந்து புரள்வான். அக்காலும், யான் அவனிக்குள் மறைந்திருப்ப, நூறாண்டாயபின் சற்குணநிருபன் ஒருவனால், முன்போல் நிலவப் பெறுவன். அந்நாளில், நீ, சோழன் குலத்துச் சுடர்முடி, அரசனாய்த் தோன்றுவாய். அருமறையோன், உனக்கு அமைச்சனாவான். அமைச்சனும் அந்தணனும் நீயும் அளவளாவி, ஆனந்தபவனமான இவ்வரும்பதி யடைந்து, நமது ஆலயத்தை அணிமணிப் பொன்னால் சமைத்துப் புவியுய்ய உற்சவங்களெல்லாம் புரிந்து, கலி, நாலாயிரத்தெழுநூற்றுக்குமேல், அமைச்சனொடு, நமது, நலமந்தமில்லதோர் திருநாடடைந்து வாழ்வாய் என்று நவின்றருளி மறைந்தான். சுதர்மதாசன் துணுக்கென விழித்துச் சொப்பனத்தில் கண்ட தொன்முதலைத் தருவினான்; வியர்த்தான்; பெருமுயிர்ப்பெறிந்தான்; வேதவேதாந்த விமலனைக் கண்டேனே வெறியேன் என்று பதறினான்; கதறினான்; கண்ணீர் சோரக் கைகுவித்து அழுதான்; பாவமெல்லாம் பறந்தது என்றான். இவ்வாறு அவன் பத்தி பரவசனாய் எம்பிரான் இசைத்தவெல்லாம் எண்ணியெண்ணியிருக்கும் அக்கணத்து, அவன் பாலன், ஓடிவந்து, ஐயா! நமது புன்செய்யில், ஓர் பன்றி வந்து புகுந்து, கதிர்கண்ட வரகுபயிரெல்லாந் தின்று பாழாக்காநின்றது. அதைத் துரத்த என் தரமன்று. தந்தாய்! சாணுப் நீயும்போய் என்று கைவிதிர்த்து அலறினான், சுதர்மன், கேட்டுப், பகவத்பாகவதர்க்காகும் பைங்கூழை அழிக்கின்ற அப்பன்றியைக் கொல்வேன் என்று துடித்தெழுந்து ஓடி, வில்லை நாணேற்றி வெகுண்டு, பயிரையழிக்கும், அமலானந்த அப்பனாய பன்றியை எதிர்த்துப் பற்பல பகழிகள் ஏவி மலைந்தான். வேதக் காடெல்லாங் காணா விமலன், அங்கு விளையாட்டாகக் காடெல்லாம் அலைந்து களைத்து, வீரன் கைப்பட்டதுபோல் மெல்லெனப்

போதலும், பத்தியிற் களைத்த பத்தனும், விடாது அதைப் பின்றொடர்ந்து அம்புதெறிப்பப், பன்றியாய பரஞ்சுடர்ப்பகவான், நித்திய புஷ்கரணிக்கரைக்கண்ணே நிலவும் புற்றின்மாட்டோடிப் புகுந்து ஒளித்தான். புண்ணிடச் சுதர்மன், அதுகண்டு, புற்றின்பால் ஓடித் தேடிக் காணுமல், அப்புற்றின் தொளைகளை நாடி, இச்சிறு தொளைவாய், அப் பெரும்பன்றி புகாதே; சீசீ, இது நம் பிச்சேயாம் என்று திகைத்தான். புகுங்கால் கண்கூடாக் கண்ட நான், இது பொய்யென்று எப்படி துணிவது என்முன். உருவெளித்தோற்றமோ என்று உருகினுன். ஆய்ந்தாய்ந்து ஆடிப்பாடினுன். பூவராகப் பரம்பொருளேயன்றி ஒரு பன்றி யன்றென்று போற்றினுக, அத் தொளையின்கண் உற்றுக் காணுங்கால், கோலவராகப் பெருமானது குருகுரு என்ற நாதங் கேட்டுக், கோதறு சுதர்மன், புளகாங்கனாய், புற்றின்வாய் கண்ணைப் பொருத்தி நோக்கினுன். அதனுள் ஆதியஞ்சோதி யமலன்றன் அற்புதக்காட்சி கண்டு, ஆனந்தங் கொண்டு, ஏனமாய ஞானப்பிரானே எனத் தெளிந்து, அஞ்சலியஸ்தனுய் அழுது, தொழுது, ஆடிப்பாடி, அவண் விட்டு அகலாதிருந்தான். சூரியனும் உதயமானுன். அக்காலத்து, எம்பிரான் இயம்பியவண்ணமே சுசர்மன் என்கிற பிராமணன், சீமுட்டமெய்திப் புற்றின்கண் கிடக்குஞ் சுதர்மனைக் கண்டான். சுதர்மனும் மறையவனைக் கண்டு, துணுக்குற்று எழுந்து, கைகூப்பித் தண்டமாகச் சேவித்து, ஐய! நீ யார்? நின்னிருக்கை யாண்டையது? நிகழ்த்தியருள்கென்ன, மாதவன், சுதர்மனை நோக்கி, அன்ப! யான் அரிக்கினியான். என்பெயர் சுசர்மன் என்பர். நான் ஐம்பொறி யவித்து மோக்ஷத்தை விரும்பிப், பல ஆண்டுகள் தவம்புரியுங்கால், பூவராகப்பெருமான், கனவில் புகன்றவண்ணம் இங்குப் போந்தேன். நின்னையும் புற்றின்பால் கண்டேன். என்று உரைப்பச், சுதர்மன் கேட்டு, இறும்பூதுற்று, சுசர்மனோடு அளவளாவிப் புரிசெயல் ஒன்றுந் தோன்றுமல், புற்றின் மாடு இருப்ப, அமலவராகப்பெருமான், ஆகாயத்தில் அசரீரியாய், அன்பர்காள்! நீவிர் இப்புற்றினைச் சோதித்து, எனது அருச்சையை இன்புற எடுத்து நித்தியபுஷ்கரணியின் மேல்பால் நிலவிடப் பத்ட்டை செய்து, வணங்கி வழிபடுவீர் என்று பகர்ந்தருளினன். சுதர்மதாஸனும், சுசர்மவேதியனும், விண்ணருள் மொழி கேட்டு, எழுந்து, கைகூப்பித் துதித்து, வணங்கி, நித்தியபுஷ்கரணியில், நீராடி, துவாதசோர்த்துவ புண்டரங்கள் துலங்கத் தீட்டி,

மற்றுஞ் செய்வன செய்து, புற்றினை வலம்வந்து தொழுது, போற்றிச் சோதித்தலும், அதன்கண் வெண்பளிங்கன்ன நிறமும், தக்ஷண முகமும், மேல்பால் நோக்கும், இருமருங்குலினும் இயைந்த ஆழிசங்கேந்திய இரண்டு திருக்கைத்தலங்களுமாய் இலங்கும் எனத்துருவாய ஞானப்பிரானைத் தரிசித்து, உவகை தலைத்தலை சிறப்பச், சிரங் கரங் கூப்பித், தண்டென விழுந்து, சேவித்து, நித்திய புஷ்கரணிக்கு மேல்பால் நிலவுஞ் சினகரமிட்டுப் பாஞ்சராத்திர முறைப்படி, சுதர்மன், பரமனை ஸ்தாபித்து, முன்போல் நான்கு கோபுரங்கள், மூன்று மதிள்கள், மண்டபங்களை யமைத்து மகிழ்ந்தான். அந்தணனான சுசர்மன், அருச்சகனுப் பூசித்து வந்தான். சுதர்மன், தன் நிதிவலிக்கேற்ப, வேதியர் நூற்றுவர்க்கு வீடுகள் சமைத்துக் குடியேற்றிவைத்து, நித்தியபுஷ்கரணி முதலிய தீர்த்தக் கயங்களைத் திருத்தி, நந்தனவனம் அமைத்து, வராகசாமிக்குப் பஞ்சபருவ உற்சவங்களெல்லாம் பாங்காகச் செய்து, பிரமோற்சவங்களும், கீழ்க்கடல் மகோற்சவமும், பிரபலமாகச் செய்து, சுசர்மனென்னுந் தூய மறைவனோடு வாழ்ந்தான்.

---

## சுதர்மதாசன் சோழனான படலம்.

மறைமுனிவ! சுதர்மனுஞ் சுசர்மனுந் திருமுட்டத்தெந்தை திருவடிகளில் செய்கருமஞ் சிதையாமே தொண்டுசெய்து வருங் காலத்து, ஒருநாள் ஒரு வேடராஜன் தன்மனைவியருடன் கூடி, ஒரு தாடகத்தில், ஆடையாபரணங்களை அகற்றி, நிருவாணமாக ஜலக்கிரீடை செய்தலை ஆங்குப் பூக்கொய்ய வந்த சுதர்மனும், வராகசாமி பூசனை செய்யுஞ் சுசர்மனும் நோக்கி, அவ்வாறே தாமுங் கொம்மை வரிமுலைக் கோதையருடன் கூடிக் குளத்தில் குளித்துக் காமவின்பம் நுகரக் கருதி, உடலை விட்டு உயிர்மாய்ந்தார். மாதவ! சுதர்மனென்பான், வேடன்போல், சுந்தரமடவாரொடுங் கூடிச் சுகம் அனுபவிக்க எண்ணி யிறந்து சூரியகுலத்துச் சோழனாய்ப் பிறந்தான். சுசர்மனென்பானும் அவனைப் பிரியாது, அச்சோழனுக்கு மந்திரியாகப் பிறந்தான். அந்தச் சோழராஜன் அந்தணனான அமைச்சனுடன், மனுநெறி வழாது, உலகாண்டு, சேல்போல் விழியும், குயில்போல் மொழியும், மயில்போல் சாயலும், பணைபோல் தோளும் படைத்த அழகிய மாதர் அளவில்லாருடன் கூடி நிருவாணமாய் ஜலக்கிரீடை யாடி, மதனாகம முறைப்படி, பற்பல நாட்

கள் அணைந்தணைந்து புணர்ந்து மகிழ்ந்த பின்னர், அவர்க்கு, அமல வராகப் பெருமான், தனது மலரடிக்கண் மறவாத அன்பு வளரச் செய்தான். சோழபூபதியாம் அன்னோன், அமைச்சனுடன் தூய திருமால் மலரடிக்கண் அன்பு முற்றக், கலி நாலாயிரத்தெழுநூற்றுக்கு மேல் திருமுட்டத்திருப்பதிவந்துசேர்ந்து, பாஷண்டரால் அழிந்து பார்த்திவனொருவன் பதிட்டை செய்ய விளங்கும் பராத்பரனுக்குக், கலி முழுதும் அழியாமல் கனகமய விமானமும் கோயிலும் கோபுரமும் மண்டபங்களும் சமைத்துத், திருவிழாக்களுஞ் சிறப்பச் செய்து, தேகத்தை ஒழித்துத் தேவர்களது போகமுந் துய்த்துத் திறம்பார்த் திருநாடு அடைந்தார்கள். அந்த வேந்தன், எஞ்ஞான்றும் விளங்க இயற்றிய கோயில்காண், இன்றும் இலங்காநின்றதென்று நாராயணமுனிவர், சிவனுக்கு நவின்றகாதை, பாரத்துவாசிக்கு அங்கிரசன் பகர்ந்தவாறு, சூதபுராணிகர், சௌனகாதி ருஷிகட்குச் சாற்றிப், பின்னுஞ் சொல்லலுற்றார்.

---

## அஷ்டோத்தர சதநாம முரைத்த படலம்.

சௌனகாதி முனிவரே! நரநாராயண முனிவரை நந்தி வாகனன் பணிந்து, என்னையாளுடைய நாத! கலியுகத்தில் எந்த மனுவை அனுசந்தானஞ் செய்தால் எல்லாப் பலன்களுஞ் சித்திக்கும்? இயம்பியருள்கென்ன, நாராயணமுனிவர், அருள்சுரந்து, நக்கனுக்கு, ஸ்ரீவராகர் அஷ்டோத்தரசதநாமமே எல்லாப் பலன்களும் அளிக்கவல்லதாம் என்று கழறி, "ஸ்ரீவராகாயநம:" என்னுந் தொடக்கத்த அந்த நூற்றெட்டு நாமமும் அனுசந்தித்து, அகத்துள் அமைத்துச் செய்யும் யோகநெறி, பூசைநெறி, யாகநெறி, ஸ்தோத்திரநெறி, அக்ஷரநெறி, சக்கரநெறி பலவும், அங்கநியாச, கரநியாசத்தோடு உபதேசித்து, அடிய! இவ்வஷ்டோத்தர சதத்தை எவன் அனுசந்திப்பனோ? அவன், எண்ணிய பலனெல்லாம் எய்துவன். நீ, இம்மந்திரத்தை, உமைக்கும் உனது மைந்தர்க்கும், தேவர்க்கும், முனிவர்க்கும், மனிசர்க்கும், உகப்பின் உபதேசிப்பாய். கலி அவரிடத்தே சாரா என்று கழறக், கண்ணுதல் கேட்டு, என்றுங் காணாக் களிப்பால் மெய்ம்மறந்து, ஆனந்த மீதூரக் கை கூப்பி, ஆரிய! எனது கரணமூன்றும் எஞ்ஞான்றும் உன்பாலே செல்லக் கருணைசெய்வாய் என்று, ஆர்த்தியுடன் உரைத்து நிற்ற

லும், நாராயண முனிவர், முறுவல் பூத்து, அரனே! அஞ்சாதே, ஏனப்பிரான், பூதேவிக்கு இசைத்தருளிய, இம்மந்திரத்தை உனக்கு இயம்பினேன். இதை மறவாமல், நீ, காசிக்கொப்பான விருத்தா சலத்தின்கண் வசித்து, சீமுட்டத்தலத்துக்குத் தினந்தோறுஞ் சென்று, அமலவராகனைத் தரிசித்துக்கொண்டு, சனகாதி பரமயோகிகள், நாரதமுனி, பார்வதி எழுவாய பத்தர்க்கெல்லாம் சுத்த சாத்துவிகப் பரமவைதிக வைஷ்ணவசமய மாட்சிமை பகர்ந்து நிமலானந்த நித்திய மோக்ஷம் அளித்து, அரக்கரசுரர்க்கும், பூத வேதாள பிசாசங்கட்கும், தாமசத்தால் அழியும் மனிசர்க்கும் மோகனுகமங்களை மொழிந்து, பாஷண்ட சமயத்தில் பயில வைத்து, நமது லீலை பரவுமாறு செய்து, நாளும், சகஸ்திரநாமம் நவின்று வாழ்வாய். கங்காதர! உனக்கு மங்களமுண்டாகுக என்று கூறி, விடைபெற்று, இமயகிரி விட்டு அகன்று, மாதவர் குழாஞ் சூழ, பிரமவர்த்தமென்னும் புண்ணிய க்ஷேத்திரஞ் சென்றனர். விஷகண்டனும், மாதுலனுன இமவான்பால் விடையேற்றுப் பிரமதகணங்கள் சூழ, விடையேறி, வெள்ளிமலை சென்று வாழ்ந்தான் என்று சூதபுராணிகர் புகன்று, மேலுங் கூறலுற்றார்.

## நித்தியர்கள் அவதரித்த படலம்.

சௌனகாதி முனிவரரே! ஆங்கிரசன் பாரத்துவாசியை நோக்கி, அருளிச்செய்த, நித்தியர் அவதாரமும் நிகழ்த்துவன் கனிவுடன் கேளீர்: கலிகாலத்தில், அசுரர் இராக்கதர் எவரும், அந்தணர் யோனியில் பிறந்து, விஷ்ணுவைப் பரனென்னுது, விஷ கண்டன் முதலானுரைப் பரமென விளம்பி, வேதவிருக்ஷங்களை வெட்டிச் சாய்க்குநாள், சீதரனருளால், திருவாழி, சங்கம், கதை, சார்ங்கம், நாந்தகமும், சேனையர்கோனும், திருவனந்தனும், திருமகளும், சனகாதி யோகியரும், நாரதனும், கந்தமாதனத்துறு மறையவரும், மற்றும் பெரியாரும், மறைக்குல முதல் இழிகுலமீருக இசைக்கும் சாதிகளில் பிறந்தாராயும், அயோனிஜராயும் அவதரித்துச் சுடர்மிகு சுருதிப்பொருளைத் தொகுத்துத் தமிழ்வேதத்துரைப்பார். சுருதி ஸ்மிருதி இதிகாசங்கட்கெல்லாம், தமிழில் உரையிட உரியராய், இத்தல புராணத்தைத் தமிழ்ப்பாவினிசைக்கும் நாவலராய்ப் பரிந்து சார்வார். நிலத்தேவர்காள்! நாரதீய புராணத்துப் பன்னிரண்டாக நவிலும் அத்தியாயத்துள், கலை

யெலாந் தேர்ந்த ஆங்கிரசமுனிவன் பரத்துவாசியை நோக்கிக், கலியுகத்தில், நாலாயிரத்துத் தொள்ளாயிரத் தெண்பந்து நான்கா மாண்டில், நாதமுனிகள் தம் பாதம் பரவும், மாணுக்கர் பரம்பரை யில் தோன்றுஞ் செந்தமிழ்ச்சுவை யார்ந்த, சீரிய நாவலனொரு வன் சீமூட்டமாம் இத்தல புராணத்தைப் பாக்களாச் செய்தருள் வான் என்று பகர்ந்தனர். வேதம் வல்ல விப்பிரர்காள்! கலியுகத் தில் இவர் பால் அவதரித்தருளுந் தமிழ்க்கலைகளால் பாவமெல்லாந் தீயினிற் பஞ்சாகும். திருமகள் செல்வன், தனது மான்மியத்தைச் சாற்றி உலகோம்புந்தகையார், எனது கோயிற்கண் வசிக்கத்தக் காரென்றும், அவரை எனது பரிஜனங்களோடு ஏத்திப் பலி செய்தல் இயல்பென்றும், இஃது, எனக்கு உகப்பாமென்றும் அவர் ஆராதனமின்றி என்னை ஆராதித்தல் அவலமாம் என் றம், அருளினேடு வாமளித்துள்ளான். இது சத்தியம். ஆகலால், திருமால் கோயில்களில், சீரிய அன்பர் விக்கி ரகங்களை வலமாகத் திருப்பிரதிஷ்டை செய்து, வாழ்த்தித் திருவா ராதனம் புரிதல் நலமாகும். திருவுடையடிகாள்! இத் திருஞா னச்செல்வராலும், கலி, மாளாது, முதிர்ந்துவரும் நாளில், சிவ பிரான் அவதரித்து வைஷ்ணவத்தை நிலைபெறச்செய்வான். சௌனகாதியரே! கலிக்கொடுமை கண்ட தேவரெல்லாம், அனந்தசயனன்பால் போய், அடிதொழுது, கைகூப்பி, தேவதேவ! சைன, புத்த, சைவாதி புன்சமயங்கள் பரந்து ஓங்கின. நின் சர ணடைந்து உய்வார் ஒருவருமிலர். என்செய்கேம் என்று இரங்க, அப்பன், அமரரை நோக்கி, ஆங்காணும் அமரர்காள்! யுகந்தோ றும் இவ்வண்ணம் நிலவுலகத்தோர் நீங்காமலிருக்க நினைத்துள்ள நமது நினைவு நிலைபெறவேண்டுமே; ஆயினும் உமது வேட்கை நோக்கி நமது தேவி திவ்வியபூஷண திவ்வியாயுத நித்தியராதித் திர ள்களெல்லாம் நிலவுலகத்தில் பிறந்து, தத்துவநிச்சயம் உணர்ந்து தமிழ்வேதத்தை உலகுய்யுமாறு உதவ நினைந்தாம் என்று அருளிச் செய்ய, உம்பரெல்லாம் மகிழ்வுற்றனர். வேதபாரகரே! ஒருக்கால் மெஞ்ஞானமைய பெருந்தவமுனிவர் கூடிப் பிரயாகைக்கு ஏகி, ஆங் கு மகமியற்றும் பிரமனடி தொழுது, பிதாமகனே! கலிகாலக்கொடு மை என்னென்று கழறுவேம்; அந்தோ! அந்தோ! வேதவிகிதங்க ளெல்லாம் விழலாச்சே. வீணுன புறநூலெல்லாம் விகிதமாச் சே. ஓகோகோ! பாஷண்டமதம் ஓங்கலாச்சே. சாதுஜனச் சபை போச்சே. சைன புத்த சைவமயமாச்சே. புருஷோத்தமன் தலங்

கள்போச்சே. நாங்கள் புலம்பலாச்சே. இனிமேல் எம்பெருமான் தலமேகி இனிதாகக் காண்பேமோ? கண்ணனைக் கண்டு உருகிக் களிகொள்வேமோ? தந்தாய்! பாகவதரெல்லாரும் நலிந்தார்; பாஷண்டரெல்லாரும் மலிந்தார். எங்குஞ் சைவமேயாக ஏங்கினேம் என்று இரங்கிச் சாம்பிக் கண்ணீர்விட்டுக் கலங்கும் மாதவரைக் கமலன் நோக்கி, சிட்டர்காள்! ஸ்ரீமந்நாராயணனுக்கு இஃது செவ்விய லீலாரசமாகும். அவன் செயலைத் திருத்துவா ரில்லை. நாடகம் பார்த்திருக்குமவனுக்கு இஃது நல்லின்பமாயினும் அந்நாடகத்துஞ் சில அறமுண்டன்றே? அவ்வாறே அரி திருவருளால் திருமகளும் சங்கு சக்கரமும் தண்டு வாள் வில்லும் அனந்த கருட விஷ்வக்ஸேநாதி நித்தருந் தென்றேயத்தின்கண் அவதரித்துத் திராவிடவேதத்தைத் திருவாய்மலர்ந்தருள்வார். திருவனந்தப் புத்தேள், திரிதண்டமேந்தி, எதிபதியாய் அவதரிக்கும். அவ்விராமாநுச எதிபதியால் சில அருந்திருப்பதிகள் அமர்ந்தோங்கும். சுருதிப்பார்ந்த சூத்திரங்கட்குத் தோஷந் தீரும். ஸ்ரீபாஷ்யத்தின் சிறப்புண்டாகும். அவ்வெதிபதி அசுரபார்ப்பனரா லாய அருத்தங்கட்கெல்லாஞ் செவ்விய நற்பொருள் அறைந்து, திருத்திக் குதிர்ஷ்டி பாகிய நூற்களைச் சீத்தருளும். அக்கால், கலியுகங் கெடுங் கண்டுகொண்மின். பொய்யன்றிது. புலவர்காள்! புருஷோத்தமன் பூதங்கள் இப்புவி உய்யப் பராங்குச யோகியென்றும், பரகாலரென்றும், எதிபதி யென்றும் மற்றும் ஆழ்வார் ஆரியரென்றும் தோன்றிப் பொலிதரும். அவ்வெதிராச, அழகிய மணவாளமாமுனி அறிஞரால் புன்மதங்கள் நசித்து, அளவறுஞ் சீவர்கள் நன்மதமுற்று நலமந்தமில்லாத் திருநாடடைந்தாரேனுங், கலி முதிர்ச்சியினால் புன்புறச்சமயங்களே காசினியின்கண் மல்கி, எங்கும் பரவுங்காலத்து, அரனுஞ் சிவயோகி அவதரித்து அசுரமோகனாகமங்களை வைது, அறப்பெரிய வைணவத்தை நிலையாக்கி, உத்தமத் தலங்களையெல்லாம் உத்தாரணஞ் செய்தருள்வன். அப்பொழுது அறந்தழைத்துக் கிருதயுகமாய், நூற்றெட்டுச் சுயம்பு க்ஷேத்திரங்களோடு நவகோடி நாராயண ஸ்தலங்களும் நன்கு விளங்கா நிற்கும் என்று நவிலலும், முனிவரர், புளகமுற்று, தேவ! கலிபயம் யாண்கடலும் என்னக், கமலன், ஆனந்தபவனம் அண்மின் என்று கழறினான். சிட்டர்களாய ருஷிகள் திசைமுகன் அருளிச்செய்தபடி திமுட்டம் எய்தி, அங்குறு பலவாந் தீர்த்தங்களில் படிந்து, துவாதசோர்த்துவ புண்டரங்கள் அணிந்து, பூவராகப்பெருமான் கோயி

லுட் புகுந்து, சேவித்துப் போற்றி, மகிழ்ந்து, அத்தினமிரவில் நித்திரைசெய்தார்கள். அவ்விரவில் வழிகட்டிப் பறிக்குங் கள்வர்கள் அமலவராகனைப் போற்றும் அருந்தவரை வளைத்து அவரிடத்துள்ள பொருள்களைப் பறித்துக்கொண்டு சில வறிஞரை ஆவி நீங்கச் சவட்டிச் சென்றார்கள். அந்நாட்டரசன், இஃது அறிந்து, அச்சுற்று, அறிஞர்தம் பொருளை அறலைத்துக்கவர்ந்து நலிந்து சரந்த அருளிலாப் பாதகத் திருடரைத் தேடிச் சிறைபிடித்துக் கொணர்ந்து வந்து, சிரச்சேதஞ் செய்ய ஆணையிடவே, கொலைஞர்கள் கூடி, அக் கொடிய கள்வரைக் கொலைக்களத்து ஈர்த்துப்போய்த் தலைகளைத் துணித்துக் கொன்றார்கள். கொலையுண்டு ஆவிவிடுங் கொடிய திருடர்கள், சருடகுரு அருளும் உபதேசம் பெற்றுச், கதிரொளி மேனியராய் விமானத்தார்ந்து, விமலானந்த முத்திவீடடைந்தார்கள். இவ்வற்புதத்தை அங்குற்ற இருடிகளெல்லாருங் கண்குளிரக் கண்டு, இறும்பூதெய்திப் பிரமன் சொன்னது எண்ணியெண்ணி அன்றுதொட்டு அத்திருப்பதியை அகலாது அடுத்து வாழ்ந்தார்கள். தூய தவசிகாள்! ஒன்று சொல்ல மறந்தேன், சவ்வீரதேசத்து அரசன், முனிவர் எழுவரைக் கொன்ற பதினறு கொலைஞருடன் எழுபிரமகத்தியால் இடர்பட்டு ஆனந்தபவனத்தில் அந்தணன் தந்த, வராகன் பிரசாதம் வாயிற்கிடப்ப இறந்து, கூற்றூர்க்கு ஏகாமல், பண்டைய கன்மத்தால் கேரளதேசத்தில் ஓர் வண்ணான் அகத்தில் கழுதையாகப் பிறந்தான். அவ்வண்ணான், ஓர் வணிகனுக்குத் தன் கழுதைகளை விற்றான். அவ்வணிகன், அந்தக் கர்த்தபங்களின் மீது பொதிகள் ஏற்றி நடத்தி, நாடு நகரம் ஊர்தொறும் ஏகி, வர்த்தகஞ்செய்துகொண்டு ஒருநாள் ஸ்ரீமுட்டஞ் சென்று, பொதிகளை விற்று, ஊதியமுற்று, அன்று இரவில் கழுதைகளைத் தாமணியில் நிரையாகப் பிணைத்து, ஓர் வீட்டில் இருப்ப, அப்பொழுது, மேகங்கள் வில்லிட்டுப் பெருமழை பொழிய, இடியொன்று அண்டமெல்லாம் நடுங்க அதிர்த்து, அங்கு விழுந்தது. இடியேறுண்ட கர்த்தபங்கள் கரிந்து இறக்குங்கால் கருடபகவான் உபதேசம் பெற்று, பதினேழு கழுதைகளும், பரந்த கதிரொளிமேனி கொண்டு பரமபதம் அடைந்தனவென்று நேமிவன முனிவர்க்குச் சூதமுனிவன் நிகழ்த்திப், பின்னுங் கூறலுற்றார்.

---

# ஸ்ரீகீதா படனப் படலம்.

கேளீர் நைமிசவனமுனிவரே! பின்னர் நாரதமுனிவர், பிருகு
வுக்கு இசைத்த கீதாபடனமுங் கிளத்துவன்: முந்திய சுவாயம்பு
மனுவந்தரத்தில் முப்பத்தேழாவது கலியுகத்தில் விஷ்ணுசர்மன்
என்று ஒரு வேதியன் இருந்தான். கிருது என்னும் சிஷ்யனுடன்
தவஞ்செய்யும் அம்மாதவனுக்கு அரி, சுதரிசனன், சங்கன் என்று
மூன்று மைந்தருண்டு. அம் மூன்று மைந்தருந் தாதையடி தொழு
து, ஐய! உலகமூன்றும் நடுங்க எழுங் கலியால் காக்குங் கடவுளை
வழிபடுதல் அறவுங், சாமாதிகள் எம்மைக் கலக்கவுஞ் சகியாது,
மீண்டோம். தந்தாய்! கல்வி, அறிவு, ஆசாரம், தவம், தானம், பூசை
என்பன எம்மாட்டுங் காண்கிலேம், அழகிய மாதர் தம்மை அணை
வதற்கே ஆசை கொண்டோம். எமது ஞான வைராக்கியம் எல்லாம்
எங்குக் கரந்தவோ அறியேம் என்று இரங்கும் மைந்தரை நோக்கி,
மக்காள்! கலி மாய்க்கும் மருந்து ஒன்றுண்டு. அது உலகமெல்லாம்
உண்டு உமிழ்ந்து இடந்து அளந்த ஒருவனது திருநாமமேயாம்.
அந்தத் திருநாமத்தை, உண்டாலும், இருந்தாலும், துயின்றாலும்,
எழுந்தாலும் நின்றாலும், நடந்தாலும், மறவாமல் அநுசந்திக்குந்
தவமன்றி அம்மையும் இம்மையும் அளிக்கும் அருந்தவம் வேறி
ன்று. புதல்வர்காள்! பூர்வம், பிரமத்தை யறிந்த பூசரனொருவன்
இருந்தான். அவன் மகன் தந்தை சொல் கேளாது தீய ஒழுக்கத்தி
னின்று, தீமையெல்லாஞ் செய்து வருங்காலத்து, ஒருநாள்
தந்தைமுன் வந்து நிற்கக் கண்ட பிதா, ஐயோ! தனய! மறை
க்தலத்தில் பிறந்தும் வருணாசிரம தருமத்தை மாற்றிப் பூரியர்
சேண்மை கொண்டு, புலை வலைமாதரைப் புணர்ந்து, கொலை
புரிந்து உண்ணாதது உண்டு, கொடியனானாய். குலமுழுதும்
நரகபூர்ந்தக் கெடுத்த நீசா! என் முன் நில்லாதே போ போ
என்று புகறலும், தனயன், மனங் கலங்கிக் கண்ணீர் மல்கத்
தாழ்ந்து, பிதாவே! பொல்லார் கேண்மையால் அறிவிழந்து, புலைத்
தொழில் செய்து, புலையனானேன், என்னை ஆட்கொள்வாய் என்று
அலறும் மகனைக் குறித்துக் கருணை கூர்ந்து, குழந்தாய்! நீ தோஷங்

கள் அகன்று, தூயனுமாறு சூட்சியொன்று சொல்வேன் கேளாய் வேதசாரதமம் என்னும் பாஞ்சராத்திரத்தில் பாத்ம சங்கிதையில் விளங்கும் பெருமையுடைத்தாய், பிறப்பிறப்பைத் தடிவதாய், இருபத்தெட்டாவது யுகத்தில் எதுகுலத்துதித்த கண்ணபிரான் அருச்சனனுக்குக் கலக்கந்தீரக் கழறியருளிய நூலாய், பாரதத்தைப் பஞ்சமவேதமென்று பரவச்செய்ததாய், பிரமவித்தையென முக்கோல் ஒருகோல் பிடித்த பெரியோர் பிடித்ததாய், தசாவதார மூர்த்திகளை அதிஷ்டான தேவதைகளாயுடைய தகைமைத்தாய், இலக்குமி, பூதேவி, துர்க்கை, பிரமன், சிவன், வாயு, அக்கினி, இந்திரன், பார்வதி, சரஸ்வதி, மன்மதன், குரு, கந்தன், சங்கிருஷ்ணன், பிரத்தியும்னன், அநிருத்தனும் இவர்கள் அபிமான மாட்சிமைத்தாய், அத்தியாயம் பதினெட்டுக்கும் முப்பத்தாறு அதிஷ்டான தேவதைகளை யமைந்துள்ள பகவத் கீதையை உனக்குப் பகர்ந்தருள்வன். அதனைப் படனஞ்செய்வாயாயின், பாவங்கள் தொலைந்து, பராத்பரன் பதஞ்சேர்வாய் என்று பகர்தலும், ஐய! பகவத்கீதை பதினெட்டத்தியாயங்களும் நாளும் படனஞ்செய்ய என்னால் ஒல்லாது, ஒன்றிரண்டு அத்தியாயங்கள் ஓதுமாறு உகந்தருள் என்று மகனுரைப்ப, மாதவன், பாலக! விபூதிவிஸ்தரயோகமும் விசுவரூப சந்தர்சனயோகமு மாகிய இரண்டத்தியாயங்களைப் படனஞ் செய்வாய் என்று பயில்விக்க, அவன் அதைச் சிரத்தையோடு சந்ததமும் படனஞ்செய்து வருநாள், ஓர் அயனமானவுடன், பகவான் திருவுள்ளமிரங்கி அவன் படனஞ்செய்யும் இரண்டத்தியாயங்களையும் இரண்டு பக்ஷிகளாக்கிப், பறவைகாள்! நீவிர் இருவீரும் அவன் வயிற்றுட் புகுந்து, பாவமெல்லாம் நாளும் உண்டு, கங்கையாடிப் பக்குவஞ் செய்மின் என்று பகர்ந்தருள, அவையும் அவ்வாறாக, அவன், பாவம் நீங்கிச் சில்லிகாவனச் சேவைசெய்ய விரும்பித் தன் ஆரியாவர்த்தமென்னும் ஊர்விட்டு அகன்று திருமுட்டஞ்சேர்ந்து, பூவராகனைப்போற்றிப் புனிதனாய், பொருவில்லாத் திருநாடடைந்தான். ஆதலால் நீரும் பகவந்நாம சங்கீர்த்தனஞ் செய்வீரேல், உமது பாவம் நீங்கும். மக்காள்! திருவரங்கம், கங்கை, பிரயாகை, ஸ்ரீமுட்டம், கோமதி என்னும் ஐந்து க்ஷேத்திரங்களும் முத்தியைக் கொடுப்பதாகும். நீவிரும் அந்தத்திவ்விய க்ஷேத்திரங்கட்குப்போய்த் திருநாமசங்கீர்த்தனஞ் செய்து தேவதேவனைத் தரிசிப்பீராயின் உமது பாவமெல்லாம் பறந்துபோகப் பரமானந்த பதமும் பெறுவீர் என்று பகர்த

னும், விஷ்ணுசர்மனென்னுந் தந்தை அடி தொழுது விடைபெற்று, ஒருவன், பிரயாகைக்கண் குடிமேவி, கீதை பாடிப்பாவமெல்லாந் தணந்து பரமபதமடைந்தான். ஒருவன், கோமதியில் திருநாமசங்கீர்த்தனஞ் செய்து, பவமகன்று திறம்பறுந் திருவீடு அடைந்தான். மற்றொருவன், திருமுட்டஞ் சேர்ந்திருந்து திருநாம சங்கீர்த்தனஞ் செய்து திருநாடு தெளிவிசும்பு உற்றான் என்று நாரதபகவான், பிருதமுனிக்கு நவின்ற காதை, சவுனகாதி முனிவர்க்குச் சூதர் சாற்றித், திருமாலடியீர்! திருமுட்ட மான்மியத்தைச் செப்பற்கு என் தரமன்று. ஸ்காந்தத்தில், சில்லிகாவனத்தில் எம்பெருமான் திகழ்ந்தவாறும், அத்தலம் பிரயாகையாமாறும், சந்திரசேகரன் விருத்தாசலமாய் அரியையுந் தரைமகளையுந் தலைமீது சுமந்திருப்பச் சமைந்தவாறும், திரிவிக்கிரமன் திருவடிகளில் கங்கை செனித்தவாறும், பாகீரதி, இப்புவிக்கண் வந்து, பவநாசினியானவாறும், அகத்தியமுனிவன், தவத்தில் அரியைக் கண்டவாறும், தீண்டொணாப் பாஷண்டர் தீமையொழித்திடுந் தீர்த்தஞ்சிறந்தவாறும், ஸ்ரீவராக கவசம் வந்தவாறும், சோமன் என்னும் அந்தணன், தவத்தால் சுக்கிரனானவாறும், வீறுடைய திருநாமம் ஆயிரமும் இவ்வுலகில் விளைந்தவாறும், பாழ்கெடுத்துப் பலங்கொடுக்கும் பஞ்சரமென்று ஒன்று அருளப்பட்டவாறும், நாதமுனியெனுங் குருநாதனார் அவதாரம் நடந்தவாறும், கந்தனது கேண்மையரக்கனைக் கொன்று காத்தவாறும், திக்குப்பாலகர் உயிர்விடச் சவட்டி, அவர் பிழைப்பான் விளித்தவாறும், சாதலுறும் மோகனந் தரும் பாவந்தொலை தவத்தில் சிறந்தவாறும், ஆகமத்தைச் சமையென்னச், சிவன், அமைத்தவாறும், கஞ்சாசரனுக்கு வரங் காட்டுமாறும், சிவபெருமான், விருத்தாசலமாய் மேதினியைக் கீண்டுற்று இன்றுந் திருமாலைச் சிரத்தின் மேல் சுமக்கும் வரம் பெற்றவாறும், இன்னும் அனந்தகோடிகளாக இயம்பியுள. அவை விரிக்கில் பெருகும். மற்றொருகால் வழங்குவன். இப்புராணத்தை எழுதினோர், கற்றோர், உரைசெய்தோர், சொன்னோர், கேட்டோர் எய்தும் பேற்றை என்னென்று இசைப்பேன். இத்திருப்பதியின் சீர் அறிந்த சீமான்கள் நித்தியமுத்தரே யாவர்களென்று நிகழ்த்திய சூதபுராணிகரை நோக்கிச், சௌனகாதி முனிவர், தூயவ! சீமுட்டச் சீரமுதை எமது செவி நிறைய, உயிர் நிறைய, மெய் நிறையச் செழிக்க வார்த்து அருள்செய்த உமக்குக் கைம்மாறு என்செய்ய வுள்ளோம், கார்மு

இல் செய்தற்குக் கைம்மாறு உண்டாயின், உமக்கும் உதவி சரு தற்குண்டென்று துதிப்பச், சூதபுராணிகர், மகிழ்ந்து, சொற்பதங் கடந்த சோதிமாலடியீர்! யான் சொல்லிவந்த திருமுட்டத்து ஏற்றத்தை மறவாமல் அத்திருப்பதியை வலஞ்செய்து நீவிர் வேட்டவெல்லாம் எய்திக் களித்து நிற்பதுவே எனக்கு நீவிர் தருங் கைம்மாறும் என்று நிகழ்த்தி விடைபெற்று, வியாசமாமுனிவர்பால் சென்றார்.

நான்காவது ஞானமான்மியகாண்டம் முற்றிற்று.

## திருமுட்டபுராணம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீதேவதேவ ஸ்ரீபூவராக பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதேவரவராய பரமதயாகுரவே நம:

